# முத்தமிழ் மாலை I

## முதல் புத்தகம்

நான்காம் படிவம் (பொதுப்பகுதி)

தொகுத்தோர் :

**வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்,**
தமிழ் ஆசிரியர், செயின்ட் எப்பா பெண் உயர்நிலைப் பள்ளி,
மயிலாப்பூர், சென்னை.

**வித்துவான், S. கிருஷ்ணசாமி, B. A., B. O. L.**
தமிழ் ஆசிரியர், கெல்லெட் உயர்நிலைப் பள்ளி,
திருவல்லிக்கேணி, சென்னை.

பத்மா பப்ளிஷிங் அவுஸ்
10, தெற்கு உஸ்மான் ரோடு,
தியாகராய நகர், சென்னை-17.

 [விலை 0–13–0

| | |
|---|---|
| முதல் பதிப்பு | நவம்பர்—1950 |
| இரண்டாம் பதிப்பு | ஜுன்—1951 |
| மூன்றாம் பதிப்பு | ஜுலை—1951 |
| நான்காம் பதிப்பு | ஜுன்—1952 |
| ஐந்தாம் பதிப்பு | மார்ச்சு—1953 |
| ஆறாம் பதிப்பு | மே—1954 |







Approved by the Text-Book Committee for class use
Fort St. George Gazette Part I-B Page 108,
Dated 22—5—1951.



சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை—14.




# முன்னுரை

உலகில் கல்வி பயிலும் மாணவர்கள் அனைவருக்கும் அவரவர் தாய்மொழிப் பயிற்சி மிகவும் இன்றியமையாததாகும். தமிழைத் தாய்மொழியாகப் பயிலும் உயர்நிலைப் பள்ளிகளின் நான்காவது படிவத்து மாணவர்களுக்குப் பொதுப் பகுதிச் செய்யுட் பாடங்களும், உரை நடைப் பாடங்களும், இந்நூலுள் தொகுக்கப்பட்டுள்ளன.

1949-ம் ஆண்டு அரசாங்கத்தாரால் திருத்தி முடிவாக வெளியிடப்பட்ட புதிய பாடத் திட்டத்தின்படி, இந்நூல் அமைந்துள்ளது.

இத்தொகை நூலில் சங்கச் செய்யுட்கள், நீதிச் செய்யுட்கள், தொடர்நிலைச் செய்யுட்கள், பிரபந்தங்களின் செய்யுட்கள், தற்காலப் புலவர் செய்யுட்கள் ஆகிய செய்யுட்களும், உரைநடைப் பகுதியில் தற்கால உலகியலுக்கு ஏற்றவாறு மாணவர் தகுதிக்குத் தக்கபடித் தக்க சான்றோர்களிடமிருந்து வாங்கிய உரைநடைகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

செய்யுட் பகுதியில் வேண்டிய இடங்களுக்குக் குறிப்புரைகளும், வினாக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. உரைநடைப் பகுதியில் அவை தேவையில்லை என்று விடப்பட்டுள்ளன.

இந்நூலுள் சேர்த்துக் கொள்ளும்படித் தம் அரிய செய்யுட்களையும், கட்டுரைகளையும் வழங்கிய பேரறிஞர்கள் பலர்க்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனை வெளியிட்டு உதவிய பத்மா பப்ளிஷிங் கம்பெனியார்க்கு எங்கள் நன்றியறிதலைச் செலுத்துகின்றோம்.

இந்த நூலை அன்போடு பார்த்தருளும் அரசியலாரும், உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர்களும், தமிழாசிரியர்களும் தக்க ஆதரவு அளிப்பார்கள் என்று முற்றும் நம்புகின்றோம்.

இங்ஙனம்,

தொகுப்பாசிரியர்கள்.

# பொருளடக்கம்

## (பொதுப்பகுதி)

## செய்யுள்

—:—

## உரை நடை

# முத்தமிழ் மாலை I

## (பொதுப்பகுதி)

## செய்யுள்

## I. வாழ்த்துப் பகுதி

### 1. சகல கலாவல்லி மாலை

[சகல+கலை+வல்லி—சரஸ்வதி. இந்நூலைப் பாடியவர் குமர குருபர சுவாமிகள். இவர், திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்தவர்; மதம் சைவம்; காலம் 17—ஆம் நூற்றாண்டு.]

மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னருமென்
பண்கண் டளவில் பணியச் செய்வாய்
படைப்போன் முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடியுண் டேனும்
விளம்பி லுன்போல்
கண்கண்ட தெய்வ முளதோ
சகல கலா வல்லியே.

—குமர குருபர சுவாமிகள்.

குறிப்புரை

மண்கண்ட - உலகு முழுவதையும் நிழற்றிய, பண் - இங்குச் செய்யுள். படைப்போன் - பிரமன்.

வினாக்கள்

1. சகல கலாவல்லி மாலை—இதன் பொருள் என்ன ?
2. சரஸ்வதி தேவியை ஆசிரியர் என்ன வேண்டுகிறார் ?

## 2. திருவருட்பா

[திரு+அருள்+பா. இந்நூலைப் பாடியவர், இராமலிங்க சுவாமிகள் ; இவர், சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரில் கருணீகர் குலத்தில் பிறந்தவர் ; மதம் சைவம் ; காலம் 19–ஆம் நூற்றுண்டு.]

பொங்குபல சமயமெனும் நதிகள் எல்லாம்
புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கியோங்கும்
கங்குகரை காணாத கடலே ! எங்கும்
கண்ணுகக் காண்கின்ற கதியே ! அன்பர்
தங்கநிழல் பரப்பிமயல் சோடை எல்லாம்
தணிக்கின்ற தருவே ! பூந்தடமே ! ஞானச்
செங்குமுத மலரவரு மதியே எல்லாம்
செய்யவல்ல கடவுளே ! தேவ தேவே !

—இராமலிங்க அடிகள்.

### குறிப்புரை

மயல் – மயக்கம். சோடை – வெப்பம். தரு – மரம். மதி – சந்திரன்.

### வினாக்கள்

1. ‘திருவருட்பா’—பதம் பிரித்துப் பொருள் எழுதுக.
2. ஆசிரியர், கடவுளை எப்படி யெல்லாம் அழைக்கிறார் ?
3. கடவுளை மதி என்று அழைக்கக் காரணமென்ன ?

---

## 3. திவ்வியப் பிரபந்தம்

[திருமா லடியார்களான பன்னிரண்டு ஆழ்வார்களும் பாடிய இனிய பாடல்களின் தொகுதிக்கு நாலாயிர திவ்வியப் பிரபந்தமென்று பெயர். கீழ்க்கண்ட பகுதி, பூதத்தாழ்வாரால் இயற்றப்பட்டது ; இரண்டாம் திருவந்தாதியிலுள்ளது.]

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான்.

—பூதத்தாழ்வார்.

குறிப்புரை

தகளி – அகல். ஆர்வம் – ஆசை. நன்பு – ஆத்மா. புரிந்த – இயற்றிய.

வினாக்கள்

1. ஆழ்வார் எப்பொருள்களால் ஞானச் சுடர் விளக்கை ஏற்றினார் ?
2. கடவுளை எந்த விளக்கால் காணமுடியும் ?

---

## 4. தேவாரம்

[சைவ சமயக் குரவர்கள் நால்வருள் திருஞான சம்பந்தரும், அப்பரும், சுந்தரரும், பாடிய பாட்டின் தொகுதிக்குத் தேவாரம் என்று பெயர். பாடப் பகுதி, சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பட்டது. இவர் காலம், 9–ஆம் நூற்றாண்டு.]

மிடுக்கிலாதானை வீமனேவிறல் விசயனே
வில்லுக் கிவனென்றும்
கொடுக்கிலாதானைப் பாரியே என்று
கூறினும் கொடுப்பாரிலை
பொடிக்கொள் மேனிஎம் புண்ணியன்
புகலூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்குமேல் அமரர் உலகம் ஆள்வதற் கியாதும்
ஐயுறவு இல்லையே.

—சுந்தரர்.

### குறிப்புரை

மிடுக்கு - வலிமை. விறல் - வெற்றி. பாரி - கடையெழுவள்ளல்களில் ஒருவன். பொடி - விபூதி. புகலூர் - திருப்புகலூர். ஐயுறவு - சந்தேகம்.

### வினாக்கள்

1. மேலுலகத்தை எப்பொழுது ஆளமுடியும்?
2. சுந்தரர், நமக்கு யாரைப்பாடும்படி அறிவுறுத்துகிறார்?
3. இப்பாட்டில் சுந்தரர் காலத்து நிலைமை என்ன என்று கூறப்பட்டுள்ளது?
4. ' பொடிக்கொள் மேனிஎம் புண்ணியன் '—யார்?

---

## 5. திருப்புகழ்

[முருகக் கடவுளின் மேலான புகழை அருணகிரிநாதர் என்பவர் பாடிய நூலுக்குத் திருப்புகழ் என்று பெயர். இவர் மதம் சைவம்; காலம் 15–ஆம் நூற்றாண்டு.]

ஏறுமயி லேறிவிளை யாடுமுகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே
கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே
குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே
மாறுபடு சூரனை வதைத்தமுகம் ஒன்றே
வள்ளியை மணம்புரிய வந்தமுகம் ஒன்றே
ஆறுமுகம் ஆனபொருள் நீஅருளல் வேண்டும்
ஆதிஅரு ணாசலம் அமர்ந்தபெரு மாளே.

—அருணகிரிநாதர்.

### குறிப்புரை

குன்று - கிரௌஞ்சம் என்னும் மலை. சூரன் - சூரபன்மன். அருணாசலம் - திருவண்ணாமலை.

### வினாக்கள்

1. திருப்புகழின் ஆசிரியர் யார்?
2. முருகக் கடவுளின் ஆறு முகங்களும் என்னென்ன வேலைகளைச் செய்தன?
3. இப்பாடல் எந்த ஊரிலுள்ள முருகக் கடவுளின் மேல் பாடப்பட்டது?

---

# II. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

[தெய்வத்தன்மையுள்ள குறள் வெண்பாக்களாலான நூலுக்குத் திருக்குறள் என்று பெயர்; பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சிறந்தது; தமிழ்மறை என்று புகழப்படுவது; உறுதிப் பொருள்களைச் சுருக்கமாகக் கூறுவது; திருவள்ளுவர் இதன் ஆசிரியர்; மயிலையில் வாழ்ந்தவர்; கடைச்சங்க காலம்; பொது மதத்தினர்.]

### கடவுள் வாழ்த்து

*தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது.* (1)

### பெரியரும் சிறியரும்

*செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்.* (2)

### அறத்தின் இலக்கணம்

*மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்*
*ஆகுல நீர பிற.* (3)

### பெண்ணின் கடமை

*தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்.* (4)

### புதல்வன் கடன்

*மகன்தந்தைக்(கு) ஆற்றும் உதவி இவன்தந்தை*
*என்னோற்றான் கொல்லெனும் சொல்.* (5)

### விருந்தோம்பல்

*விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா*
*மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.* (6)

## இனியவை கூறல்

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (7)

## செய்ந்நன்றி அறிதல்

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலின் பெரிது. (8)

## நடுவு நிலைமை

சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க்(கு) அணி. (9)

## அடக்கமுடைமை

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (10)

## ஒழுக்கமுடைமை

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. (11)

## பொறையுடைமை

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். (12)

## ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றும் கொல்லோ உலகு. (13)

## ஈகை

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. (14)

## புகழ்

ஈதல் இசைபட வாழ்தல் அதுஅல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. (15)

## தவம்

உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்(கு) உரு. (16)

### கல்வி

யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. (17)

### கேள்வி

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (18)

### அறிவுடைமை

எவ்வ(து) உறைவ(து) உலகம் உலகத்தோ(டு)
அவ்வ(து) உறைவ(து) அறிவு. (19)

### ஊக்கமுடைமை

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. (20)

—திருவள்ளுவர்.

### குறிப்புரை

1. தாள் - திருவடி. சேர்தல் - இடைவிடாது நினைத்தல்.

2. செய்கலாதார் - செய்ய முடியாதவர்.

3. அனைத்து - அவ்வளவே. ஆகுலநீர - ஆரவாரத் தன்மையன.

4. தற்காத்து - தன்னைப் பாதுகாத்து. தற்கொண்டான் - கணவன். தகை சான்ற சொல் - பெருமை பொருந்திய மொழி.

5. ஆற்றும் - செய்யும். நோற்றான் - தவம் செய்தான். சொல் - சொல்லைச் சொல்லும்படிச் செய்தல்.

6. புறத்தது - வெளியிலிருக்கும்பொழுது. சாவா மருந்து - அமிர்தம்.

7. இனிய × இன்னாத. கனி-ஔவையுண்ட நெல்லிக்கனி. காய்-காஞ்சிரங்காய். கவர்ந்தற்று - உண்ணுதல் போலும்.

8. தூக்கார் - கருதார். நயன் - நல்ல குணம்.

9. சீர் - பாரம். கோல் - தராசு. கோடாமை - ஒரு பக்கம் சாயாமல்.

10. நா - நாக்கு. சோகாப்பர்-வருந்துவர். இழுக்கு-குற்றம்.

11. எய்துவர் அடைவர். எய்தா - அடையக் கூடாத. இழுக்கம் - ஒழுக்கத்தில் தவறுதல்.

12. மிகுதி - மனச்செருக்கு. மிக்கவை - தீயவை. தகுதி பொறுமை.

13. கடப்பாடு - ஒப்புரவு. ஆற்றும் - செய்யும். மாரிமாட்டு - மேகத்தினிடம்.

14. அற்றார் - வறியர். அழிபசி-மிக்கபசி. வைப்புழி-வைக்குமிடம்.

15. ஊதியம் - நன்மை. (பொருள்)

16. நோன்றல் - பொறுத்துக்கொள்ளுதல். உறுகண்-தீமை.

17. ஆல் - அசை. சாந்துணையும் - இறக்கும் வரையில்.

18. இழுக்கல் - வழுக்குதல். உழி - இடம். ஊற்றுக்கோல் - ஊன்றி நடக்கும் கோல்.

19. எவ்வது - எப்படி.

20. அதர் - வழி. வினாய் - கேட்டுக்கொண்டு. அசைவிலா - தளராத. உழை - இடம்.

### வினாக்கள்

1. திருக்குறளுக்குள்ள சிறப்பென்ன ?
2. அறத்தின் இலக்கணம் என்ன ?
3. பெண்ணின் கடமைகள் எவை ?
4. புதல்வன் தந்தைக்குச் செய்யும் கைம்மாறு என்ன ?
5. 'கனியிருப்பக் காய் கவர்ந்தற்று'—எது ?
6. சான்றோர்க்கணி என்ன ?
7. நாவடக்கம் ஏன் இன்றியமையாதது ?
8. நமக்குத் தீமை செய்வாரை எப்படித் தண்டிக்கவேண்டும்?
9. பொருளை வைக்குமிடம் எது ?
10. தவமாவது யாது ?
11. ஒழுக்கமுடையார் வாய்ச்சொல் எத்தகையது ?
12. யாரிடம் செல்வம் சென்றடையும் ?

## 2. நாலடியார்

[நான்கு அடிகளாலான வெண்பாக்களால் செய்யப்பட்ட நூலுக்கு நாலடியார் என்று பெயர். இது, **பதினெண் கீழ்க் கணக்கு** நூல்களுள் ஒன்று. இதன் ஆசிரியர், சமண முனிவர்கள். காலம் 8–ஆம் நூற்றாண்டு.]

### கல்வி

இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. (1)

### குடிப் பிறப்பு

ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறாஉம்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்கு
ஒல்கார் குடிப்பிறந் தார். (2)

### குலம்

நல்லகுலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள(வு) அல்லால் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றான் ஆகும் குலம். (3)

### நட்பில் பிழை பொறுத்தல்

இலங்குநீர்த் தண்சேர்ப்ப இன்னா செயினும்
கலந்து பழிகாணார் சான்றோர்—கலந்தபின்
தீமை எடுத்துரைக்கும் திண்ணறி(வு) இல்லாதார்
தாமும் அவரின் கடை. (4)

### கீழ்மக்கள்

சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல்—எக்காலும்
முந்திரிமேல் காணி மிகுவதேல் கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும். (5)

—சமண முனிவர்கள்.

## குறிப்புரை

1. இம்மை - இப்பிறப்பின் பயன். ஆல் - அசை. உளர் ஆ - உயிருள்ளவராக வாழும் அளவும். மம்மர் - மயக்கம் (அறியாமை.) எம்மை - எத்தன்மை.

2. புடை - பாகம். கண் - இடம். ஞாலம் - உலகம். திங்கள் - சந்திரன். விளக்குறாஉம் - உயிரளபெடை. செல்லாமை - வறுமை. ஒல்கார் - தளரமாட்டார். ஒப்புரவு - உபகாரம்.

3. தொல் - பழைய. ஆள்வினை - முயற்சி. ஒன்றோ - எண்ணிடைச் சொல்.

4. இலங்கு - விளங்குகின்ற. சேர்ப்ப - கடல் துறையை உடையவனே (பாண்டியன்) ஆடூஉ முன்னிலை. திண் அறிவு - உறுதியான அறிவு. கடை - தாழ்ந்தவர்.

5. சக்கரச் செல்வம் - பூமண்டலம் முழுவதையும் ஆளும் சிறப்பு. விழுமியோர் - மேலோர். மிகுதிச்சொல் - வரம்புகடந்த சொல். முந்திரிமேல் காணி என்பதை மாற்றிப் பொருள் கொள்ள வேண்டும். காணி $= \frac{1}{64}$; முந்திரி $= \frac{1}{256}$ பாகம். கீழ் - கீழ் மக்கள்.

## வினாக்கள்

1. நாலடியார், இதன் பெயர்க் காரணத்தையும், ஆசிரியரையும் கூறுக.
2. கல்வியின் சிறப்பென்ன ?
3. சான்றோர் திங்களுக்கு ஒப்பாவார்—எப்படி ? இது என்ன அணி ?
4. மேலான குலம் என்று எவற்றைக்கொண்டு உணர வேண்டும் ?
5. கீழ் மக்கள் இயல்பென்ன ?

---

## 3. நான்மணிக்கடிகை

[நான்கு+மணி+கடிகை—நான்கு இரத்தினத் துண்டுகள். ஒவ்வொரு செய்யுளிலும் நான்கு இரத்தினத் துண்டுகள் போன்ற நான்கு சிறந்த கருத்துக்கள் கொண்ட நூலுக்கு நான்மணிக்கடிகை என்று பெயருண்டாயிற்று. ஆசிரியர், விளம்பிநாகனார்; வைணவ மதத்தினர்; கடைச்சங்க காலம்.]

### சான்றோர் இயல்பு

பறைபட வாழா அசுணமா உள்ளம்
குறைபட வாழார் உரவோர்—நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே வெதிர்சாம் தனக்கொவ்வாச்
சொற்பட்டால் சாவதாம் சால்பு. (1)

### நல்லோர் பிறக்குமிடம்

கள்ளிவயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்றின்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி. (2)

### தனக்குத்துணை அறம்

நிலத்துக்(கு) அணியென்ப நெல்லும் கரும்பும்
குளத்துக்(கு) அணியென்ப தாமரை பெண்மை
நலத்துக்(கு) அணியென்ப நாணம் தனக்கணி
தான்செல் உலகத்(து) அறம். (3)

### வெற்றிக்கு வழி

இன்னாமை வேண்டின் இரவெழுக இந்நிலத்து
மன்னுதல் வேண்டின் இசைநடுக—தன்னொடு
செல்வது வேண்டின் அறம்செய்க வெல்வது
வேண்டின் வெகுளி விடல். (4)

### பெருமை யடையும் வழி

இரும்பின் இரும்பிடை போழ்ப பெருஞ்சிறப்பின்
நீருண்டார் நீரால்வாய் பூசுப—தேரின்

அரிய அரியவற்ருல் கொள்ப பெரிய
பெரியாரான் எய்தப் படும்.' (5)

—விளம்பிநாகனுர்.

குறிப்புரை

1. அசுணமா - அசுணம் என்னும் பறவை (விலங்குமாம்). உரவோர் - அறிவுடையோர். வனம் - காடு. வெதிர் - மூங்கில். சால்பு - சான்ருேர் குணம் சான்ருேர்க்கு ஆயிற்று.

2. அகில் - அகில் என்னும் வாசனைப் பொருள். விலைய - மதிப்புடைய. நல் ஆள் - நல்ல ஆண்மகன்.

3. அணி - அழகு. நாணம் - வெட்கம்.

4. இன்ருமை - துன்பம். இரவு - யாசித்தல். இசை - புகழ். வெகுளி - கோபம்.

5. போழ்ப - பிளப்பார்கள். எய்தல் - அடைதல் (எய்து - பகுதி.)

விளுக்கள்

1. நான்மணிக்கடிகை—இதன் பெயர்க்காரணத்தைக் கூறு.
2. அகில், அரிதாரம், முத்து - இவை எங்கே பிறக்கும் ?
3. நிலம், குளம் இவற்றிற்கு அணி எவை ?
4. நிலையாக இருக்கவும், வெல்லவும் வேண்டின் எவற்றைச் செய்யவேண்டும் ?
5. பெரிய பொருள்கள் பெரியோரால் அடையமுடியும்-இதற்கு ஒப்புடையவை எவை ?

---

## 4. திரிகடுகம்

[திரிகடுகம் ஒரு மருந்து. சுக்கு, மிளகு, திப்பிலி என்ற பொருள்களால் ஆவது. அம் மருந்து உடலிலுள்ள நோய்களை நீக்கும். அம் மருந்துபோல் மூன்று கருத்துக்கள் ஒவ்வொரு செய்யுளிலும் கொண்டதாய் மனத்திலுள்ள அறியாமையை நீக்கும் ஒரு நூலுக்குத் திரிகடுகமென்று பெயரிட்டனர். இதன்

ஆசிரியர் நல்லாதனர் ; மதம் வைணவம் ; கடைச்சங்க காலம்.]

## நன்மை தராத இடங்கள்

கணக்காயர் இல்லாத ஊரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மை யிலாளர் அயலிருப்பும் இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல. (1)

## புகழுடம்பைப் பெற்றவர்

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்
பெண்ணினுள் கற்புடையாள் பெற்றனும்—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னர். (2)

## உள்ளன போன்று கெடுவன

கிளைஞர்க்(கு) உதவாதான் செல்வமும் பைங்கூழ்
விளைவின்கண் போற்றுன் உழவும்—இளையனுய்க்
கள்ளுண்டு வாழ்வான் குடிமையும் இம்மூன்றும்
உள்ளன போலக் கெடும். (3)

## செல்வத்தை அழிப்பன

தன்னை வியந்து தருக்கலும் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும்—முன்னிய
பல்பொருள் வெஃகும் சிறுமையும் இம்மூன்றும்
செல்வம் உடைக்கும் படை. (4)

## நிலையான புகழை உடையவர்

தன்னச்சிச் சென்றுரை எள்ளா ஒருவனும்
மன்னிய செல்வத்துப் பொச்சாப்பு நீத்தானும்
என்றும் அழுக்காறு இகந்தானும் இம்மூவர்
நின்ற புகழுடை யார். (5)

—நல்லாதனர்.

## குறிப்புரை

1. கணக்காயர்-உபாத்தியாயர். பிணக்கு-மாறுபாடு. அவைக் களன் - சபை. பாத்துண்ணும் - பகிர்ந்து உண்ணும்.

2. மாசில் - குற்றமற்ற. கூவல் - குளம். தொடுதல் — தோண்டல்.

3. பைங்கூழ் - பசுமையான பயிர். கிளைஞர் - உறவினர்.

4. தருக்கல் - கர்வங்கொள்ளுதல். கொன்னே - பயனில்லாமல். வெஃகும் - பேராசை கொள்ளும். படை - கருவி.

5. நச்சி - விரும்பி. பொச்சாப்பு - மறதி. நீத்தானும் — விட்டு விட்டவனும். அழுக்காறு — பொறாமை.

## வினாக்கள்

1. திரிகடுகம் என்று இந்நூலுக்குப் பெயரிட்டது ஏன்?
2. திரிகடுகத்தின் ஆசிரியர் யார்?
3. 'உள்ளன போலக் கெடும்'—எவை?
4. பொருளை அழிக்கும் கருவிகள் எவை?
5. நிலையான புகழை அடைபவர் யார்?
6. புகழுடம்பைப் பெறுபவர் யார்?

---

# III. தொடர்நிலைச்செய்யுட் பகுதி

## 1. திருவிளையாடல் புராணம்

[திரு+விளையாடல்+புராணம்: மதுரையிலுள்ள சோம சுந்தரக் கடவுள் அடியார் பொருட்டு விளையாடிய 64 திரு விளையாடல்களையும் கூறும் நூல், திருவிளையாடல் புரா ணம். இதன் ஆசிரியர், பரஞ்சோதி முனிவர்; வேதா ரணியத்தில் பிறந்தவர்; சைவ மதத்தினர். இவர், சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தனர் என்பர்.]

ஏமநாதன் மதுரைக்கு வருதல்

மன்றலந் தெரியல் மார்பன்
வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்தலம் காவ லானில்
பொலியும் நாள் ஏமநாதன்
என்றொரு விறல்யாழ்ப் பாணன்
வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னோடும்
விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான். (1)

ஏமநாதன் அரசவையில் பாடுதல்

பூழியர் பெருமான் கோயில்
புகுந்துவேத் தவையத் தெய்திச்
சூழிமால் யானை யானைத்
தொழுதுபல் புகழ் கொண்டாடி
ஏழிசை மழலை வீணை
இடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் இசைத்தேன் மன்னன்
அஞ்செவி வழியப் பெய்தான். (2)

ஏமநாதன் செருக்கடைதல்

மீனவன் வரிசை பெற்ற
செருக்கினும் விருதி னாலும்
மானமேல் கொண்டு இன்னிசை
பாட வல்ல

தானயாழ்ப் புலவர் வேறிங்(கு)
இல்லெனத் தருக்கும் செய்தி
கோனறிந்(து) உழையர்க் கூவிப்
"பத்திரர் கொணர்திர்" என்றான். (3)

### பாண்டியன் பாணபத்திரனை ஏமநாதனுடன் பாடச்சொல்லல்

உழையரால் விடுக்கப்பட்ட
பத்திரன் உவரி வென்றோன்
கழல்பணிந்(து) அருகு நிற்பக்
கௌரியன் நோக்கிப் பாணி
பழகிசை வல்லானோடும் பாடுதி
கொல்லோ ?" என்ன
மழலையாழ் இடத்தோள் இட்ட
பாணர்கோன் வணங்கிச் சொல்வான். (4)

### பாணபத்திரனின் பணிவுரை

"தென்னவர் பெரும ! யானுன்
திருவுள வல்லும் கூடல்
முன்னவன் அருளும் ஊட்டும்
முயற்சியால் முயன்று பாடி
அன்னவன் விருது வாங்கி
அவனை வீ(று) அழிப்பன்" என்றான்
மன்னவன் "நாளைப் பாடுபோகென"
வரைந்து சொன்னான். (5)

### பத்திரன் கடவுளை வேண்டுதல்

மையணி மிடற்றினானை மதுரை
நாயகனை வந்தித்(து)
"ஐயனே ! அடியேற்கு இன்று
அருள்துணை செய்யல் வேண்டும்
மெய்யனே !" என்று போற்றி
வேண்டுகொண்(டு) அன்பு தோய்ந்த
பொய்யறு மனத்தான் இல்லம்
புக்கினி திருந்தான் இப்பால். (6)

சிவபெருமான் விறகுவேட்டியாகவருதல்

அழுக்கு மூழ்கிய சிதரசைத்(து)
அவிர்சடை அமுதம்
ஒழுக்கு வெண்மதி வாங்கியே
செருகிய(து) ஒப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம்
வலம்படச் செருகி
இழுக்கு தேய்செருப்(பு) அருமறை
கடந்த தாள் ஏற்றி. (7)

தறிந்த இந்தனம் தினந்தோறும்
தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுத் தியதலை
உடையராய்ப் பரிந்து
எறிந்த கங்கையும் பங்குறை
மங்கையும் காண(து)
எறிந்த இந்தனச் சுமைதிரு
முடியின்மேல் ஏற்றி. (8)

விறகாள் ஏமநாதன் வீட்டை அடைந்து பாடுதல்

எடுத்த இந்தனம் ஒருபுறத்(து)
இறக்கியிட்(டு) ஊன்றி
அடுத்த வன்புறத் திண்ணைமீ(து)
அமர்ந்திளைப் பாறித்
தொடுத்த இன்னிசை சிறிதெழீஇப்
பாடினார் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவான்
என்றிசை வல்லான். (9)

ஏமநாதன் விறகாளை நீயார் ?' என்று கேட்க,
தான் பத்திரன் அடிமை என்று கூறுதல்

" கனியிசைக் கிழவன் தன்கீழ்க்
கற்பவர் அநேகர் தம்முள்
நனியிசைக் கிழமை வேட்டு
நானுமவ் வினைஞனேன்

தனியிசைக் கிழவன் நோக்கித்
    தசையெலாம் ஒடுங்க மூத்தாய்
இனியிசைக் கிழமைக் காகாய்
    என்றெனைத் தள்ளிவிட்டான்." (10)

ஏமநாதன் கேட்க விறகாள்மற்றோர்முறை பாடுதல்

" வெவ்விற(கு) எறிந்து கட்டி
    விலைபகர்ந் தேனும் ஐய !
இவ்வயி(று) ஓம்புகேன் என்றித்தொழில்
    பூண்டேன் " என்ன
நைவளம் தெரிந்த ஏமநாதனும்
    ' விறகு மள்ளா
அவ்விசை ஒருகால் இன்னும்
    பா'டென ஐயன்பாடும். (11)

பாடும்பொழுது நேரக்கூடாத குற்றங்கள்

வயிறது குழிய வாங்கல்
    அழுமுகம் காட்டல் வாங்கும்
செயிரறு புருவம் ஏறல்
    சிரம்நடுக்(கு) உறல் கண்ணுடல்
பயிறரு மிடறு வீங்கல்
    பையன வாயங் காத்தல்
எயிறது காட்டல் இன்ன
    உடற்றொழில் குற்றம் என்ப. (12)

விறகாளான சிவபெருமான் பாடியவிதம்

பொருந்த மந்திரத்தி னோடு
    மத்தி மந்தாரம் போக்கித்
திருந்திய துள்ளல் தூங்கல்
    மெலிவது சிறப்பச் செய்து
மருந்தென செய்யுள் ஓசை
    இசையோசை வழாமல் யார்க்கும்
விருந்தெனச் செவியின் மாந்தப்
    பாடினார் வேத கீதர். (13)

சிவபெருமான் இசைகேட்ட தேவர் நிலை

போதுளான் பரமன் பாதப்
போதுளான் ஆனன் வேலை
மீதுளான் பரமா னந்த
வேலைமீ(து) உள்ளான் ஆனன்
தாதுளாம் கமலக் கண்போல்
சதமகன் உடல மெல்லாம்
காதுளா(ன்) அல்லேன் என்றான்
கண்ணுளான் கானம் கேட்டு. (14)

இசையைக்கேட்ட விலங்கின் நிலை

பைத்தலை விடவாய் நாகம்
பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமான் அரிமான் புல்வாய்
வல்லியம் மருட்கை எய்தித்
தத்தமா(று) அறியா வாகித்
தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளும்
இசைவலைப் பட்ட அம்மா! (15)

ஏமநாதன் பயந்து ஓடுதல்

இழுக்கி விட்டஇக் கிழமகன்
இசையிதேல் அந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற்றோ·
எனமதியா
அழுக்கம் உற்றெழுந்(து) இசைவலான்
அடுத்ததன் பண்டார்
குழுக்களுங் குலைகுலைந்திட
இருள்வழிக் கொண்டான். (16)

பாணபத்திரன் கனவில் சிவபெருமான் கூறுதல்

அன்று பத்திரன் கனவில்வந்(து)
ஆடலேற்(று) அழகர்
இன்று பத்திர இசைவலான்
இடைவிற காளாய்ச்

சென்று பத்திரன் அடிமையாம்
என்று பாண் செய்து
வென்று பத்திரம் செய்தும்பின்
வேண்டுகோள் என்றூர். (17)

### பத்திரன் சிவபெருமான் கருணையைப் புகழ்தல்

கடிய கானகம் புகுதவோ
கட்டிய விறகை
முடியில் ஏற்றவோ முண்டகத்
தாள்கள்நொந் திடவந்(து)
அடியனேன் பொருட்(டு) அடர்தசொல்
பகரவோ வஞ்சக்
கொடியனேன் குறை இரந்தவா
விளைந்ததே குற்றம். (18)

### பாணபத்திரன் பாண்டியனிடம் வருதல்

என்ன வந்தனை செய்துநின்(று)
ஏத்தி யங்கயற்கண்
மின்னமர்ந்த பங்(கு) ஒருவனை
வலங்கொடு மீண்டு
மன்னர் தம்பிரா(ன்) ஆகிய
வரகுண தேவன்
தன்னை வந்தடி பணிந்தனன்
தந்திரிக் கிழவன். (19)

### பாண்டியன் ஏமநாதனை அழைத்துவரச்செய்தல்

வந்த ஏழிசைத் தலைமகன்
வரவறிந்(து) அரசன்
அந்த ஏழிசைக் கிழவனை
அழையென உழையோர்
பந்த யாழ்மகன் இருக்கை போய்ப்
பார்த்தனர் காணூர்
சிந்தை ஆகுலம் அடைந்தவன்
போனவா தெளியார். (20)

## பாண்டியன் சிவபெருமான் திருவிளையாடலை உணர்தல்

ஏவல் மைந்தர்போய் விளங்கிவந்(து)
இசைத்ததும் வீணைக்
காவலன் கனு நிகழ்ச்சியும்
ஒத்தலின் கைக்கும்
பூவலங்கலான் இஃதுநம்
பொன்னகர்க் கூடல்
தேவர் தம்பிரான் திருவிளை
யாட்டெனத் தெளிந்தான். (21)

—பரஞ்சோதி முனிவர்.

### குறிப்புரை

1. மன்றல் - வாசனை. தெரியல்-மாலை. பொன்தலம் காவலன்- இந்திரன். வடபுலம் - வடதிசை. போந்து - வந்து. விஞ்சை - கல்வி.

2. பூழியர்பெருமான் - பாண்டியன். கோயில் - அரண்மனை. சூழி - முகபடாம். ஏழிசை - உழை, குரல், துத்தம், இளி, தாரம், கைக்கிளை, விளரி என்பன.

3. மீனவன் - பாண்டியன். செருக்கு - கர்வம். தானம் - தானக்கோல். உழையர் - ஏவலாளர். கொணர்திர் - கொண்டு வாருங்கள்.

4. உவரி வென்றோன் - உக்கிரகுமார பாண்டியன். கௌரியன் - பாண்டியன். பாணி - தாளம். பாணர்கோன் - பாணபத்திரன். முன்னவன் - சோமசுந்தரக் கடவுள். வரைந்து - குறித்து.

5. தென்னவர் - பாண்டியர். வலம் - பலம். கூடல் - மதுரை.

6. மை - விஷம். மிடறு - கழுத்து. இல்லம் - வீடு.

7. கிதர் - கந்தை. குயம் - அரிவாள். கூனல் - வளைவு.

8. தறித்த - முறிபட்ட. இந்தனம் - விறகு. பங்கி - மயிர். பரிந்து - அன்புகொண்டு., பங்குறைமங்கை - பார்வதி.

9. எழீஇ - எழுப்பி (உயிரளபெடை). இசைவல்லான் - ஏமநாதன்.

10. கனியிசை - கனிந்தஇசை. கிழவன் - உரியவன்.

11. கைவளம் - ஒருபண்.

12. வாங்கும் - வளைந்த, செயிர் - குற்றம். எயிறு - பல்.

13. மருந்தென - அமுதம்போன்ற. வழாமல்-தவறாமல். மாந்த-குடிக்க.

14. போது - தாமரை. வேலை - கடல் (பாற்கடல்). தாது - மகரந்தம். சதமகன் - இந்திரன்.

15. பை - படம். மஞ்ஞை-மயில். கால்வாய்-தொங்கும் வாய். மத்தமான் - யானை. அரிமான் - சிங்கம். புல்வாய் - மான்.

16. இழுக்கிவிட்ட - தள்ளப்பட்ட. வழுக்கில் - குற்றமற்ற. எற்றோ-எத்திறத்ததோ. மதியா-எண்ணி. அழுக்கம்-கவலை. பண்டர்-பாடல்கற்றவர். வழிக்கொண்டான் - ஓடத் தொடங்கினான்.

17. ஆடல் ஏறு அழகர் - வெற்றியுடைய இடபவாகனரான சோமசுந்தரக்கடவுள். பாண் - பாட்டு. பத்திரம் - காவல்.

18. முண்டகம் - தாமரை. குறையிரத்தல் - குறை கூறுதல்.

19. வந்தனை - துதி. அங்கயல்கண்மின் - மீனாட்சி. தந்திரிக் கிழவன் - யாழுக்கு உரியவன் (பாண பத்திரன்).

20. யாழ்மகன் - ஈண்டு ஏமநாதன். இருக்கை - இருப்பிடம். சிந்தை ஆகுலம் - மனக்கலக்கம். போனவா - போனவழி.

21. விறகுக்காவலன்-பாணபத்திரன். கைக்கும்பூ-வேப்பம்பூ.

## வினாக்கள்

1. திருவிளையாடல் புராணத்து ஆசிரியர் பெயர், காலம், ஊர் எவை ?
2. ஏமநாதன் செருக்குக்கொள்ளக் காரணம் என்ன ?
3. பாணபத்திரன் கூறிய பணிமொழிகள் எவை ?
4. பாணபத்திரன் கடவுளிடம் என்ன வேண்டினான் ?
5. பாடும்பொழுது தோன்றக்கூடாத குற்றங்கள் எவை ?
6. இசையைக் கேட்ட தேவர் நிலையும், விலங்கின் நிலையும் கூறு.
7. சிவனருளைப் பாணபத்திரன் எப்படிப் பாராட்டினான் ?

8. எல்லாம் கூடல் கடவுளின் திருவிளையாடல் என்பதைப் பாண்டியன் எப்படி அறிந்தான்?

9. பின்வரும் தொடர்கள் யாரைக் குறிக்கும் :—
பொன்தலம்காவலான், உவரிவென்றோன், மையணி மிடற்றினன், போதனான், வேலைமீதனான், கைக்கும் பூவலங்கலான்.

10. சந்தர்ப்பமும் பொருளும் கூறுக :
(1) "இன்று அருள் துணை செய்யல் வேண்டும்"
(2) "அவ்விசை ஒருகால் இன்னும் பாடு"

---

## 2. நள வெண்பா

### கலிநீங்கு காண்டம்

[நளனுடைய சரித்திரத்தை வெண்பாக்களால் கூறும் நூல் நள வெண்பா. இதன் ஆசிரியர் **புகழேந்திப் புலவர்** : வெண்பா பாடுவதில் வல்லவர் : செங்கற்பட்டுக்கு அருகிலுள்ள பொன் விளைந்த களத்தூரில் பிறந்தவர் ; முரளை நகரை ஆண்ட **சந்திரன் சுவர்க்கி** என்னும் வள்ளலால் ஆதரிக்கப் பட்டவர். இவர் மதம் வைணவம். இவர் காலம் 12–ஆம் நூற்றாண்டு.]

#### புரோகிதன் தமயந்தியிடம் கூறுதல்

வாக்கினால் மன்னவனை ஒப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கின் அவனல்லன்—பூக்கமழும்
கூந்தலாய் மற்றக் குலப்பாகன் என்றுரைத்தான்
ஏந்துநூல் மார்பன் எடுத்து. (1)

#### தமயந்தி நளனைவரவழைக்க உபாயந்தேடல்

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென்(று) அந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற்(கு) இத்தூரம் தேர்க்கோலம் கொள்வான்
படைவேந்தன் என்றாள் பரிந்து. (2)

### புரோகிதன் இரண்டாம் சுயம்வரமென்று முரசறைவித்தல்

எங்கோன் மகளுக்கு இரண்டாம் சுயம்வரமென்(று)
அங்கோர் முரசம் அறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளும் நாளை அளவென்றான் அந்தணன் போய்த்
தென்னாளும் தாரானைச் சேர்ந்து. (3)

### நளன் இது வினைப்பயனோ? எனல்

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத் தான் காண இசைந்ததோ—தன்மரபுக்(கு)
ஒவ்வாத வார்த்தை உலகத்(து) உரைப்பட்ட(து)
எவ்வாறு கொல்லோ இது. (4)

### வாகுகனாகிய நளன் தேர்கொணர்தல்

ஒற்றைத் தனியாழித் தேரென்ன ஓடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடு வந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றான் பொம்மென்று அளிமுரலும்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய். (5)

### தேரின் வேகம்

மேலாடை வீழ்ந்த(து) எடுவென்றான் அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே—தோலாமை
மேல்கொண்டான் ஏறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா. (6)

### கலி நளனிடமிருந்து விலகுதல்

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவ நாட்(டு) எங்கோமான்
தண்டார் புனைசந்திரன் சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி. (7)

### இருதுபன்னன் வீமன் அரண்மனையை அடைதல்

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயில்
முற்றத்(து) இருத்தி முறைசெய்யும்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து. (8)

நளன்சமைக்க மடைப்பள்ளி புகுதல்

*ஆதி நெடுந்தேர்ப் பரிவிட்(டு) அவையாற்றிக்*
*கோதில் அடிசில் குறைமுடிப்பான்—மேதிக்*
*கடைவாயில் கார்நீலம் கண்விழிக்கும் நாடன்*
*மடைவாயில் புக்கான் மதித்து.* (9)

மடைப்பள்ளியில் பொருள்கள் தாமே நிரம்புதல்

*ஆதி மறைநூல் அனைத்தும் தெரிந்துணர்ந்த*
*நீதி நெறியாளர் நெஞ்சம் போல்—யாதும்*
*நிரப்பாமல் எல்லாம் நிரம்பிற்றே பொற்றேர்*
*வரப்பாகன் புக்க மனை.* (10)

தமயந்தி அங்குத் தோழியையனுப்புதல்

*இடைச்சுரத்தில் தன்னை இடையிருளின் நீத்த*
*கொடைத் தொழிலான் என்றயிர்த்த கோமான்—*
*மடைத்தொழில்கள்*
*செய்கின்ற வெல்லாம் தெரிந்துணர்ந்து வாவென்றாள்*
*நைகின்ற நெஞ்சாள் நயந்து.* (11)

நளன தன் மக்களைக்கண்டு தழுவுதல்

*மக்களை முன் காணா மனநடுங்கா வெய்துயிராப்*
*புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காள்நீர்*
*என்மக்கள் போல்கின்றீர் யார்மக்கள் என்றுரைத்தான்*
*வன்மக் களியானை மன்.* (12)

மக்கள் நளனிடம் உரையாடல்

*மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்*
*அன்னை தனைக் கான்விட்டு அவனேக—இந்நகர்க்கே*
*வாழ்கின்றோம் எங்கள் வளநாடும் மற்றொருவன்*
*ஆள்கின்றான் என்றார் அழுது.* (13)

நளன் இச்செயல் இழுக்கன்றோ எனல்

*உங்கள் அரசொருவன் ஆளநீர் ஓடிப்போந்(து)*
*இங்கண் உறைதல் இழுக்கன்றோ—செங்கை*

வளவரசே என்றுஉரைத்தான் மாதவத்தால் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து. (14)

இளவரசர் நளனைக் கோபித்தல்

நெஞ்சாலிம் மாற்றம் நினைந்துரைக்க நீயல்லா(து)
அஞ்சாரோ மன்னர் அடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலாய் எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி. (15)

எந்தை யடியில் அரசர்முடிவடு உண்டெனல்

எந்தை கழலிணையில் எம்மருங்கும் காணலாம்
கந்து சுளியும் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியில் பார்காக்கும் பார்வேந்தர் தாழும்
மணிமுடியில் தேய்ந்த வடு. (16)

நளன் மன்னிப்புக் கேட்டல்

மன்னர் பெருமை மடையர் அறிவரோ
உன்னை அறியா(து) உரைசெய்த—என்னை
முனிந்தருளல் என்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண். (17)

வாகுகனே நளன் என்று தமயந்தி வீமனுக்குக் கூறல்

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேரும் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்காண் எங்கள்
கொடைத்தொழிலான் என்றாள் குறித்து. (18)

நளன் வடிவம் மாறுதல்

மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோர் அருவினைபோல் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு. (19)

## நளனைத் தேவர் புகழ்ந்து பூமாரி பெய்தல்

உத்தமரில் மற்றிவனை ஒப்பார் ஒருவரிலை
இத்தலத்தில் என்றிமையோர் எம்மருங்கும்—கைத்தலத்தின்
தேமாரி பெய்யும் திருமலர்த்தார் வேந்தன்மேல்
பூமாரி பெய்தார் புகழ்ந்து. (20)

## மாவிந்த நகர மக்களின் மகிழ்ச்சி

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற்(று) உயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்(கு)
ஏதோ உரைப்பன் எதிர். (21)

—புகழேந்திப்புலவர்.

## குறிப்புரை

1. மறித்து - மீண்டு. ஆக்கை - உடல். எந்து நூல் மார்பன் - அந்தணன் (சுவேதன்). எடுத்து - விளங்க.

2. கொடை வேந்தன் - கொடையில் சிறந்த இருதுபன்னன். படைவேந்தன் - சேனைகளையுடைய நளன். பரிந்து - அன்புடன்.

3. கோன் - அரசன். சுயம்வரம் - பெண்கள் தாமே கணவனைத் தேர்ந்தெடுத்தல். தென் - தேன். தார் - மாலை.

4. குழல் - கூந்தல். மரபு - இனம்.

5. ஒற்றை - ஒன்று. கொற்றம் - வெற்றி. அளி - வண்டு. முரலுதல் - ஒலித்தல். தேறல் - தேன்.

6. தோலாமை - தோல்வி யடையாமை. மால் - மயக்கம். கோல் - சாட்டி. மா - குதிரை.

7. புனை - அணிதல். கலி - கலிபுருடன்.

8. முற்றம் - வீட்டுக்கு முன்புறம். கொற்றவன் - வீமன்.

9. ஆதி - நேராய் ஓடுதல். கோது - குற்றம். மேதி - எருமை. மடைவாயில் - சமையலறைவாயில்.

10. ஆதி - பழைய. வரப்பாகன் - உயர்ந்த பாகன்.

11. சுரம் - காடு. நீத்த - விட்டுச்சென்ற. அயிர்த்த - ஐயப்பட்ட. நைகின்ற - மெலிகின்ற.

12. உயிரா - மூச்சுவிட்டு. வன்மம் - வஞ்சகம். களி - மத மயக்கம்.

13. கான் - கானகம். மற்றொருவன் - புஷ்கரன்.

14. இங்கண் - இவ்விடத்தில். உறைதல் - தங்குதல். இழுக்கு - குற்றம்.

15. மாற்றம் - சொல். மடையன் - சமையற்காரன். எஞ்சுதல் - குறைதல்.

16. இணை - இரண்டு. கந்து - கட்டுத்தறி. சுளியும் - கோபிக்கும். கடாம் - மதம். பணி - ஆதிசேடன். பார் - பூமி. வடு - தழும்பு.

17. முனிதல் - கோபித்தல். நீர்வார - நீர்பெருக.

18. கொடைத் தொழில் - கொடுக்கும் தொழில்.

19. உலகளந்த மெய்யடி - உலகளந்த உண்மையான அடி. இது திருமாலடி. கரந்து - மறைந்து. மால்+நகம்+தேர் - மானகத் தேர். மேகம் தங்கிய மலைபோன்ற தேர். மான்+அகம்+தேர் - மானகத் தேர் - குதிரை பூண்ட தேருமாம்.

20. இமையோர் - தேவர். இத்தலம் - இவ்வுலகம்.

21. கார் - மேகம். தோகை - மயில். புலம் - வயல்.

## வினாக்கள்

1. நளவெண்பாவின் ஆசிரியர் யார்? அவர் ஊர், காலம் இவற்றை வரைக.
2. அந்தணன் தமயந்தியிடம் உரைத்தவை எவை?
3. நளனை வரவழைக்கத் தமயந்தி எடுத்த உபாயம் யாது?
4. தன் மரபுக்கு ஒவ்வாத வார்த்தை எது?
5. நளன் செலுத்திய தேரின் வேகத்தை ஆசிரியர் எவ்வாறு வருணிக்கிறார்?

6. நளனிடமிருந்த கலி நீங்கியதற்குக் கொடுத்துள்ள உவமை எது?
7. நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—இங்கு இதன் உபமேயம் யாது?
8. நளன் தன் மக்களைத் தழுவிக்கொண்டு வினவியது யாது?
9. "மன்னர் பெருமை மடையர் அறிவரோ" இதன் சந்தர்ப்பம் என்ன?
10. தேர்ப்பாகன் வடிவு போனதற்கு ஆசிரியர் கூறியுள்ள உவமை யாது?
11. தேவர்கள் நளனை எவ்வாறு புகழ்ந்தனர்?
12. நளன் மீண்டுவரக் கண்ட நகரமாந்தர் மகிழ்ச்சிக்கு ஒப்பானவை எவை?

---

## 3. குசேலோபாக்கியானம்

[குசேலர் + உபாக்கியானம் = குசேலோபாக்கியானம்—குசேலரைப்பற்றிய சிறுகதை. உபாக்கியானம்—சிறு கதை. இந்த நூலை வல்லூர்த் தேவராசப் பிள்ளை பாடினார் என்பர்; மதம் வைணவம்; காலம் 50 ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர் ஆவர். இவர், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மாணவரென்பர்.]

### குசேலர் கண்ணனைக் காணுதல்

எண்ணனைக் கிலங்கு மார்பம்
  ஈந்தருள் பிரானை நீல
வண்ணனைத் திகிரி சங்கம்
  வலம் இடம் உறக்கொண்டானை
மண்ணனைத்தும் புரக்கும்
  வாசுதேவனை மணக்கும்
கண்ணனைத் துளவத் தாமக்
  கண்ணனைக் கண்ணிற் கண்டான். (1)

**கண்ணன் குசேலரை வணங்குதல்**

காண்டலும் உவகை பூத்துக்
காலிசை கொடு நடந்தான்
ஆண்டகை யவனுங் கண்ணுற்று
அணையுடைத் தெழுநீத்தம் போல்
நீண்டபூம் பள்ளி நீத்து
நிலவு பேரன்பு பொங்கப்
பூண்ட மாதவன் முன் சென்று
பொன்னடி வணங்கி ஞனல். (2)

**கண்ணன் குசேலரைத் தழுவுதல்**

திலகம்மண் தோய ஐயன்
திருவடி வணங்கிப் பின்னர்
நிலவுமெய்ப் புளகம் போர்த்து
நிரம்புறத் தழுவிக் கொண்டான்.
குலமறைத் தலைவனென்றும்
கூர்ந்த மெய்ந் நட்ப னென்றும்
மலர்தலை உலகம் கூறும்
வாய்மைகாத் தருளினனே. (3)

**கண்ணன் உபசாரங்கள் செய்தல்**

வழிநடந் திளைத்தவே யிம்
மலரடி யிரண்டும் என்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல
வருடினன் கமலக் கண்ணன்
பழியில் பல்லுப சாரங்கள்
பண்ணவும் தெரியானுகி
ஒழிவறு தவக் குசேலன்
ஒன்றும் பேசாதிருந்தான். (4)

**கண்ணன் குசேலரைக் கண்டு பூரித்தல்**

மன்னுடைய மறை யனைத்தும்
வகுத்துணர்ந்த மாதவனே
உன்னுடைய தரிசனத்தால்
உடம்பு பூரித்தனன் யான்

மின்னுடைய விளங் கொளிவேல்
வேந்தருளும் தேவருளும்
என்னுடைய பெறலரும் பேறு
யார் பெற்றார் யார் பெறுவார் ? (5)

கண்ணன் நட்பே சிறந்தது எனல்

பூன்றதயை என்னிடத் தெப்
போதும்நீ வைத்தருள்க
ஆன்ற எனதுளத் தினைவிட்டு
அகன்றிலை இந்நாள் காறும்
சான்ற குணத்தாய் நின்னைச்
சந்ததமும் நினைத் திருப்பேன்
தோன்ற வநேகம் பெறினும்
தொன்னட்பின் சிறந்தனவோ ? (6)

கண்ணன் அறிஞர் நட்பை மறவாரெனல்

ஆயின் மறை முதற்கலைகள்
அனைத்தும் உணர்ந் தறம் மறம் பாத்து
ஏயின் இது நன்றிது தீது
என்றுணர்த்தும் அவர் நட்பை
வீயினுந் தான்மறப் பர்களோ
மேதையோர் ? மறப்பரேல்
நாயினுங் கீழ்ப்பட்டவர்கள்
அவர்காண் இந்நானிலத்தே. (7)

தவமுடையார் நட்பே சிறந்தது எனல்

பொன்னுள்ளான் பூமியுள்ளான்
புத்தியுள்ளான் ஆயிடினும்
என்னுள்ளான் ஆவனவன்
இருந்தவர் தம் நட்பிலனேல்
பொன்னில்லான் பூமியில்லான்
புத்தியில்லான் ஆயிடினும்
என்னில்லான் ஆவனவன்
இருந்தவர் தம் நட்புளனேல். (8)

### தூயோர் நட்பே மேலானது

பேயொடு பழகுறினும்
பிரிவ தரிதரி தென்று
தூயோர்கள் மொழிவரால்
தூயோரும் புகழ்தூயோர்
ஆயோர்கள் பெருநட்பை
அருந்தவத்தால் பெறலன்றி
ஏயோ எண்மையிற் கிடைப்பின்
இகழ்வரோ இகழ்வில்லார்? (9)

### நன்னெறியாளர் நட்பே சிறந்தது

கூடுவதற்குக் கூடாத
கூட்டத்துப் படும் நட்பு
விடுதற்குத் தக்கதாய்
நாடோறும் மெலிந்தொழியும்
நீடுதற்குத் தக்கது நன்
னெறிநின்றோர் நட்பொன்றே
தேடுதற்குக் கிடையாத
திரவியமும் அஃதாமால். (10)

### குசேலர் மணம் செய்துகொண்டதை வினவுதல்

முத்திக்கு வித்தாகும்
முழுதுணர்ந்தோர் பெருநட்பே
தித்திக்கும் நாடோறும்
தேவர் பெறற் கருந்திருவும்
சித்திக்கும்படி அருளும்
செப்பரிதால் அது நிற்க
எத்திக்கும் புகழும் நினக்(கு)
இயல் மணம் நன் காயிற்றே? (11)

### குசேலர் மனைவியின் குணத்தைக் கேட்டல்

நின்னுடைய மனைக்கிழத்தி
நிரம்புபெரு நீர்மையளே?
மன்னுடைய சொற்காத்துச்
சோர்வில்லா மாண்பினளே?

தன்னுடைய உயிராகின்
றனைப்பேணும் தன்மையளே ?
உன்னுடைய வருவாய்க்குத்
தக்கசெல வுனுற்றுவளே ? (12)

குசேலர் மக்களைப் பற்றி வினவுதல்

பைங்குதலை வாய்மைந்தர்
பலர் பிறக்க வேண்டுமே ?
எங்கும் அரும் புகழுடையோய் !
எத்தனை மைந்தர்கள் பிறந்தார் ?
அங்கவரைப் பேரவையோர்
அணிதரச்செய் செயலனைத்தும்
சிங்கலறப் புரிந்தனையோ ?
செய்தனையோ உபநயனம் ? (13)

இருவரும் கூடியதற்கு மகிழ்தல்

சீரார்நின் ஊர்நின்று
சேர இவண் வருவாரால்
நீரார்நின் தன்மையெலாம்
நென்னல் வரைக்கும் தவருது
ஆராய்ந்து கொண்டிருந்தேன்
அகன்றபல நாட்களின்பின்
ஏரார் இன்பம் சிறப்ப
இருவேமும் கூடினேம். (14)

இருவரும் சாந்தீபரிடம் படித்ததை நினைவூட்டுதல்

இருவேமும் முன்னளில்
இலங்குசாந் தீபமுனி
வருகாம ரடிவணங்கி
மாமறைகற் றுணர்ந்திடுநாள்
பெருகார்வத் தொடும்பேசிக்
கொண்டிருந்த பேச்செல்லாம்
திருகாரா வுளத்து நினைத்
திருக்கின்றயோ சிறப்ப. (15)

கண்ணன் சிற்றுண்டி விரும்புவதாகக் கூறல்

பந்தனை அகன்ற மேலோய்
 பற்பல நாட்குப் பின்பு
வந்தனை எனக்கென் கொண்டு
 வந்தனை ? அதனை இன்னே
தந்தனை யாயின் நன்று
 தருசுவை பக்கணத்தென்
சிந்தனை நின்றதென்றான்
 தெரிவரு வஞ்சக்கள்வன். (16)

நின்மனைவி வாளா அனுப்பியிருக்கமாட்டாள் எனல்

இனியசிற் றுணவே தேனும்
 இன்றிநீ வருவாய் கொல்லோ ?
இனியநின் உள்ளம் இன்றோ
 எண்ணியான் அறிதல் வேண்டும் ?
இனியநின் மனைவி வாளா
 ஏகிவா என்பளோ ? மற்று
இனிய எற்கன்றி யார்க்குக்
 கொண்டுவந் திருக்கின் றாயே ? (17)

குசேலர் அவல் கொடுக்க நாணுதல்

"திருந்தஇங் களித்தி," என்று
 செங்கரம் மலர்த்தி நீட்டப்
"பொருந்த இன்பால் உண்பான்பால்
 புளித்த காடியைக் கொடுத்திட்டு
அருந்திடென் றுரைத்தல் போலும் இவ்
 வவற்கொடை !" என்று வாளா
இருந்தனன் குசேல மேலோன்
 இவனுளம் அறிந்த கண்ணன். (18)

கண்ணன் ஒருபிடி அவல் அருந்துதல்

மலிதரும் அன்பின் வந்த
 வன்பொதி அவிழ்த்து நோக்கி
வலிதரும் அவற்றுள் நன்று
 வாய்த்தது நமக்கி தென்று

ஒலிதரு கழற்கால் ஐயன்
ஒருபிடி அவலைக் காதல்
பொலிதர எடுத்து வாயில்
போகட்டுக் கொண்டான் மாதோ. (19)

கண்ணன் அவலைப் பாராட்டல்

"செறிதரு சுவைத்து ஈதென்றும்
தேவர்க்கு அரிய தாகும்
அறிதரு விருப்பின் இல்லின்
அமைத்ததே பழைதும் அன்று
குறிதரு விலைப்பால் சென்று
கோடல்இவ் வளத்ததோ ?" என்று
உறியனை வாரி யுண்டோன்
ஒருபிடி அவல்தின் ருனே. (20)

இந்த அவலுக்கு வெல்லமும் வேண்டாம் எனல்

"முன்னும் இவ்வவல் ஒன்றேனும்
முனைமுறிந் ததுவு மின்று
பன்னும் முட்டையும் இன்ருகும்
பட்ட அங்கையும் மணக்கும் :
கொன்னும்வாய் செறிப்பின் அம்ம
குளமும் வேண்டுவதின் று" என்று
உன்னும்பல் உலக முண்டோன்
ஒருபிடி அவல்தின் ருனே. (21)

கண்ணன் தனக்கு அவலில் விருப்பம் எனல்

"நாட்டும்இவ் வவல் விருப்பம்
நமக்குமிக் குள்ள தென்று
கேட்டுளாய் கொல்லோ முன்னும்
கிளந்திருப் பதுமன்றோ ?" என்(று)
ஏட்டுமென் மலர்ப்பூந் தொங்கல்
இமையவர்க் கமிர்தம் முன்னுள்
ஊட்டிய புகழின் மேலோன்
ஒருபிடி அவல்தின் ருனே. (22)

—வல்லூர்த் தேவராசப்பிள்ளை.

## குறிப்புரை

1. எண் + அனைக்கு - எண்ணனைக்கு - மதிப்புடைய தாயாகிய திருமகளுக்கு. இலங்கும் - விளங்கும். பிரான் - உபகாரி. திகிரி - சக்கரம். புரக்கும் - காக்கும். கள் + நனை - கண்ணனை - தேனால் நனைந்த. துளவம் - துளசி. தாமம் - மாலை.

2. உவகை - மகிழ்ச்சி. நீத்தம் - வெள்ளம். பள்ளி - படுக்கை. நீத்து - விட்டு. பொன்னடி - அழகிய பாதம்.

3. கூர்ந்த - மிக்க. மலர்தலை - அகன்ற இடம்.

4. கழி - மிக்க. வருடினான் - தடவினான்.

5. தரிசனம் - காணுதல். பேறு - பாக்கியம்.

6. சந்ததமும் - எப்பொழுதும். தொன்னட்பு - பழைய நேசம்.

7. வீயினும் - இறப்பினும். மேதையோர் - பேரறிஞர். நானிலம் - உலகம், அதாவது நான்கு நிலம். அவை : குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன.

8. புத்தி - அறிவு. இருந்தவர் - பெரிய தவமுடையோர்.

9. தூயோர்கள் - பரிசுத்தமுடையோர். எண்மை - எளிமை. இகழ்வரோ - நிந்திப்பரோ.

10. நன்னெறி - நல்வழி. திரவியம் - பொருள்.

11. முத்தி - வீடுபேறு. திரு - செல்வம். சித்திக்கும் - கைகூடும். எ + திக்கு = எத்திக்கு - எல்லாத்திசை.

12. கிழத்தி - மனைவி. சீர்மை - குணம். மாண்பு - குணம். உஞற்றுதல் - செய்தல்.

13. பசுமை + குதலை = பைங்குதலை. பேரவையோர் அணிதரச் செய்செயல் - கல்வி கற்றுக்கொடுத்தல். சிங்கல் - குற்றம். உபநயனம் - பூணூல் கலியாணம்.

14. சீர் - புகழ். தென்னல் - தேற்று. ஏர் - அழகு.

15. இலங்கு - விளங்கு. ஆர்வம் - ஆசை. திருகு - மாறுபாடு. ஆரா - சேராத.

16. பந்தனை - பற்று. பக்கணம் - சிற்றுண்டி. சிந்தனை - கருத்து.

17. வாளா - வீணாக. என் + கு = எற்கு - எனக்கு.

18. கரம் - கை. அருந்திடு - உண்பாய்.

19. மலிதரும் - மிகுதியான. வன்பொதி - வலியமூட்டை. காதல் - அன்பு. பொலிதர - விளங்க.

20. செறிதரு - நெருங்கியுள்ள. இல் - வீடு. குறிதரு - குறித்துத் தரும். கோடல் - வாங்குதல். அளை — வெண்ணெய்.

21. பன்னும் - சொல்லும். கொன் - பெருமை. செறிப்பின் - சேர்த்துக் கொண்டால். குளம் - வெல்லம். உன்னும் - எண்ணும்.

22. கிளத்தல் — சொல்லுதல். ஏடு — இதழ். தொங்கல் — மாலை. இமையவர் — தேவர்.

### வினாக்கள்

1. குசேலோபாக்கியானம்—இத் தொடர் மொழியைப் பிரித்துப் பொருள் கூறுக.
2. கண்ணனைத் துளவத்தாமக் கண்ணனைக் கண்ணிற் கண்டான்—பதவுரை வரைக.
3. "அணையுடைத் தெழுநீத்தம் போல்" உபமேயமும் சந்தர்ப்பமும் வரைக.
4. என்னுடைய பெறலரும் பேறு யார் பெற்றார் ? இவ்வாறு கூறியவர் யார் ? ஏன் கூறினார் ?
5. நாயினும் கீழ்ப்பட்டவர்கள் யார் ? ஏன் ?
6. தேடுதற்குக் கிடையாத திரவியமெது ?
7. கண்ணன், குசேலர் மனைவியின் குணங்களைப்பற்றி எவ்வாறு வினவுகிறார் ?
8. "பேரவையோர் அணிதரச் செய்செயல்" இச் செயல் எது ? இதிலடங்கிய திருக்குறள் கருத்தென்ன ?
9. "பொருந்த இன்பாலுண்பான்பால் புளித்த காடியைக் கொடுத்திட்டு அருந்திடு என்றுரைத்தல் போலும் !" இப்பாடல் பகுதியின் உபமேயம் என்ன ?

10. கண்ணன் எங்ஙனம் குசேலர் கொண்டுவந்த அவலைப் பாராட்டிக் கூறியுள்ளார் ?

11. "இமையவர்க் கமிர்தம் முன்னாள் ஊட்டிய புகழோன்" இவன் யார் ? இதிலடங்கிய கதையை எழுதுக.

12. கண்ணன் குசேலர் நலத்தையெல்லாம் எவ்வாறு வினவினார் என்பதைப் பத்து வரிக்குள் வரைந்து காட்டுக.



## 4. ஆசிய ஜோதி

(கருணைக் கடல்)

[இந்நூலை இயற்றியவர் தேசிகவிநாயகம் பிள்ளை என்பவர். இக்காலக் கவிகளில் இவரும் ஒருவர். இவரைத் தமிழுலகம் நன்கு அறியும். இவர் மதம் சைவம்.]

வாழும் உயிரினை வாங்கிவிடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும் !
வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கினும் ஆகாதையா !

கன்று பசுவை மறந்திடினும்—செய்த
கருமங்கள் உம்மை விடுமோ ? ஐயா !
கொன்றுபழி தேடவேண்டாமையா—இனிக்
கொல்லா விரதம் மேற்கொள்ளுமையா !

—தேசிக விநாயகம்பிள்ளை.

மேற்கண்ட செய்யுள் பகுதியால் புத்தர், ஆட்டைப் பலியிடத் துணிந்த பிம்பிசாரனுக்கு அறிவுரை கூறுகிறார்.

### குறிப்புரை

1. வீழும் - இறக்கும். எழுப்புதல் -- உயிர்கொடுத்தல்.

2. கருமங்கள் - நல்வினை தீவினைகள். பழி – நிந்தை. விரதம்—நோன்பு.

### வினாக்கள்

1. வேந்தனாலும் முடியாத செயல் எது ?

2. நாம் செய்த வினை நம்மை விடாது என்பதை ஆசிரியர் எவ்வாறு விளக்கினார் ?

# IV. பல்சுவைப் பகுதி

## 1. சரஸ்வதி அந்தாதி

[ஒரு செய்யுளின் ஈற்று அடியையோ, சீரையோ, எழுத்தையோ அடுத்த செய்யுளின் முதலாக அமைத்துப் பாடும் ஒரு நூலுக்கு அந்தாதி, என்று பெயர். சரஸ்வதியின்மீது கம்பர் பாடிய அந்தாதி சரஸ்வதி அந்தாதி ; மதம் வைணவம் ; 12–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தனர்.]

பாதாம் புயத்தில் பணிவார்
தமக்குப் பலகலையும்
வேதாந்த முத்தியும் தந்தருள்
பாரதி வெள்ளிதழ்ப்பூஞ்
சீதாம் புயத்தில் இருப்பாள்
இருப்பவென் சிந்தையுள்ளே
ஏதாம் புவியில் பெறலரி(து)
ஆவ(து) எனக்கினியே. (1)

இனிநான் உணர்வதெண் எண்கலையாளை
இலகு தொண்டைக்
கனிநாணும் செவ்விதழ் வெண்ணிறத்
தாளைக் கமலவயன்
தனிநா யகியை அகிலாண்டமும்
பெற்றதாயை மணப்
பனிநாண் மலருறை பூவையை
ஆரணப் பாவையையே. (2)

பாவும் தொடையும் பதங்களும்
சீரும் பலவிதமா
மேவும் கலைகள் விதிப்பாள்
இடம்விதி யின்முதிய
நாவும் பகர்ந்ததொல் வேதங்கள்
நான்கும் நறுங்கமலப்
பூவும் திருப்பதம் பூவால்
அணிபவர் புந்தியுமே. (3)

புந்தியில் கூரிருள் நீக்கும்புதிய
மதிய மென்கோ
அந்தியில் தோன்றிய தீபமென்கோ
நல்லரு மறையோர்
சந்தியில் தோன்றும் தபனனென்கோ
மணித்தாம மென்கோ
உந்தியில் தோன்றும் பிரான்புயம்
தோயும் ஒருத்தியையே. (4)

ஒருத்தியை ஒன்றுமிலாவென் மனத்தின்
உவந்து தன்னை
இருத்தியை வெண்கமலத் திருப்பாளைஎண்
ணெண் கலைதோய்
கருத்தியை ஐம்புலனும் கலங்காமல்
கருத்தை எல்லாம்
திருத்தியை யான் மறவேன்
திசைமுகன் தேவியையே. (5)

—கம்பர்.

குறிப்புரை

1. பாதாம்புயம்-திருவடித்தாமரை. பாரதி - சரஸ்வதி. ஏதாம்-என்ன ஆகும் ?

2. தொண்டைக்கனி - கொவ்வைப்பழம். அயன் - பிரமன். அகிலாண்டம்-எல்லா உலகும். பூவை—நாகணவாய்ப் புள். ஆரணம்-வேதம்.

3. தொடை, சீர் - செய்யுளின் உறுப்புக்கள். புந்தி - புத்தி.

4. என்கோ - என்று சொல்வேனோ. தபனன் - சூரியன். தாமம் - மாலை.

5. எண்ணெண் - அறுபத்துநான்கு. திசைமுகன் - பிரமன்.

வினாக்கள்

1. சரஸ்வதி அந்தாதியைப் பாடியவரைப் பற்றிச் சிறு குறிப்புத் தருக.

2. அந்தாதியாவது யாது?
3. சரஸ்வதி தம்மைப் பணிவார்க்குச் செய்யும் அருள் என்ன?
4. சரஸ்வதி தேவி தங்குமிடங்கள் எவை?
5. சரஸ்வதியை 'நான் மறவேன்' என்று ஆசிரியர் கூறியதன் காரணம் என்ன?

---

## 2. பாரதியார் பாட்டு

[தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரைப் பற்றிக் கேள்விப் படாதார் இல்லை. திருநெல்வேலி ஜில்லாவில் எட்டையபுரத்தில் இவர் பிறந்தார்; தமிழிலே புதிய கருத்துக்களை ஏற்படுத்தியவர். இவர் பாடிய பாடல்கள் விடுதலை பெறும் வேட்கையில் எவரையும் தூண்டச் செய்யும் என்பதில் ஐயமில்லை; மதம் சைவம்; காலம் (1882—1921).]

இன்னறுங் கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னர் உள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி ஒளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்(கு) எழுத்து அறிவித்தல். (1)

நிதி மிகுந்தவர் பொற்குவை தாரீர்!
நிதி குறைந்தவர் காசுகள் தாரீர்!
அதுவும் அற்றவர் வாய்ச்சொல் அருளீர்!
ஆண்மை யாளர் உழைப்பினை நல்கீர்!
மதுரத் தேமொழி மாதர்கள் எல்லாம்
வாணி பூசைக்(கு) உரியன பேசீர்!
எதுவும் நல்கி இங்கெவ்வகை யானும்
இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர். (2)

—சுப்பிரமணிய பாரதியார்.

குறிப்புரை

1. நாட்டல் - கட்டுதல். ஒளிர - ஒளிவிட்டு விளங்க. அன்ன அப்படிப்பட்டவை.

2. நிதி - செல்வம். பொற்குவை - பொன்குவியல். மதுரம் - இனிமை. வாணி - கலைமகள். நல்கி - கொடுத்து,

வினாக்கள்

1. ஏழைக்குக் கல்வி கற்றுக்கொடுத்தல், எந்தத் தருமங்களை விடச் சிறந்தது?
2. பாரதியாருக்குக் கல்விமேல் உள்ள ஆசை எப்படி வெளிப் படுகின்றது?

---

## 3. இளந் தமிழனுக்கு

[தமிழ் மறுமலர்ச்சிப் புலவர் பெருமக்களில் நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளையும் ஒருவர். இவர் நமது அரசாங் கத்தின் ஆஸ்தானக் கவியாவர். இக்காலத்தில் வாழும் தமிழ்ப் பாவலர் இவர்.]

தமிழன் என்ற பெருமையோடு
தலைநிமிர்ந்து நில்லடா
தரணியெங்கும் இணையிலா உன்
சரிதைகொண்டு சொல்லடா
அமிழ்தமென்ற தமிழினோசை
அண்டமுட்ட உலகெலாம்
அகிலதேச மக்களும்கண்(டு)
ஆசைகொள்ளச் செய்துமேல்
கமழ்மணத்தின் தமிழில்மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டிவந்து தமிழர் வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே

நமதுசொந்தம் இந்தநாடு
நானிலத்தில் மீளவும்
நல்லவாழ்வு கொள்ளச் சேவை
செய்துவாழ்க நீண்டநாள்.

—இராமலிங்கம் பிள்ளை

### குறிப்புரை

1. இணை - ஒப்பு. அண்டம் – மேல்மூடு. நானிலம் - உலகம். அகில தேசம் – எல்லாத் தேசங்கள்.

### வினாக்கள்

1. கவிஞர், தமிழனுக்குக் கூறும் அறிவுரையாது?
2. தமிழ் மொழி எங்கும் பரவ ஆசிரியர் கூறுவன எவை?

———

# உரை நடை

## 1. இசை இன்பம்

மகா மகோபாத்தியாய டாக்டர், உ. வே. சாமிநாத ஐயர்.

இசையினுடைய பெருமையை ஓர்ந்தே தமிழர் முத்தமிழுள் இசைத்தமிழை நடுநாயகமாக வைத்திருக்கின்றனர். இயற்றமிழாகிய இலக்கிய நூல்கள் செய்யுட்களாலியன்றன. அவை இசையுடனேயே பயிலப்படவேண்டும். நாடகத்திற்கு இசை இன்றியமையாத தென்பதை யாவரும் அறிவர். இலக்கிய இலக்கணப் பயிற்சி, ஆங்கிலம், தெலுங்கு முதலிய பாஷைப் பயிற்சி முதலியன உடையரால் அவ்வக்கலைகளில் அறிவுடையாரையே இன்புறுத்த முடியும். ஆனால், இசையோ, கற்றார், கல்லார், விலங்கினங்கள், பறவைகள் முதலிய எல்லா உயிர்க்கும் இன்பம் நல்கும். பண்டைத்தமிழ் இலக்கியங்களில் இருதிணை உயிர்களும் இசையின் வயப்பட்டு நின்றன வென்பது பல இடங்களில் கூறப்பட்டுள்ளது.

காட்டிலுள்ள புஷ்பங்கள் மலரும் பருவத்தில் வண்டுகள் சென்று அவற்றிலிருந்து ஊதும். மலரும் பருவத்திலிருக்கும் பேரரும்பு 'போது' என்று தமிழிற் கூறப்படும். காட்டிலுள்ள முனிவர் முதலியவரும் பிறரும் சிற்சில போதுகள் மலர்வதால் காலத்தை யறிந்து வந்தனர். '**நள்ளிருள் நாறி**' என்றொரு மலர் உண்டு. அது நடு யாமத்திற்றான் மலரும். சூரியன் மறைந்திருப்பினும் அவை மலர்தலாலும் குவிதலாலும் போதினைப் புலப்படுத்துதலின், போதெனப் பெயர் பெற்றன. அப் போதுகளில் வண்டுகள் இசைபாட, அவை மலரும்; 'முல்லை, வரி வண்டூத வாய் நெகிழ்ந்தனவே,' என்பது குறுந்தொகை. பாம்பு இசைக்கு அடங்கும் என்றும் கூறப்படுகின்றது. மதம்பிடித்து அலையும் யானைகளும் இசையினால் அடங்கிவிடும்; பரிக்கோல், குத்துக்கோல் முதலிய ஆயுதங்களாலும் அடக்கமுடியாத ஒரு யானை, வீணை இசைக்கு அடங்கிவிடுவது உவமானமாகக் "காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல் யாழ்வரைத் தங்கி யாங்கு" எனக் **கலித்தொகை** என்ற சங்க நூலிற் கூறப்பட்

டிருக்கிறது. இன்னும் "அணியிழை மகளிரும் யானையும் வணக்கும் மணியொலி வீணையும்," என்று பெருங்கதையிலும், "மகரயாழ் வல்ல மைந்த னொருவனைக் கண்ட மத்தப் புகர்முகக் களிற்றின்," என்று மேரு மந்திர புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன. அகநானூற்றில் குறிஞ்சி நிலத்தில் தினைக் கொல்லையைக் காக்கும் ஒரு பெண் தெள்ளிய சுனையில் நீராடிப் பரண் மேல் நின்று இனிய காற்றில் தன் கூந்தலை ஆற்றிக் கொண்டு மிகுந்த களிப்புடன் அந்நிலத்திற்குரிய குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு நிற்கையில் தினைக்கதிரை யுண்பதற்காக அங்கே வந்த யானையொன்று அந்தப் பெண்ணின் இசையில் மயங்கிக் கதிரை யுண்ணாமல் தான் கொண்ட பெரும் பசியையும் மறந்து மயங்கி நின்றதாக ஒரு செய்தி காணப்படுகின்றது. இந்தக் காட்சியையே,

> "ஒலியல் வார்மயி ருளரினள் கொடிச்சி
> பெருவரை மருங்கிற் குறிஞ்சி பாடக்
> குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
> படாஅப் பைங்கண் பாடுபெற் றொய்யென
> மறம்புகன் மழகளி றுறங்கும் நாடன்"

என்ற அடிகள் காட்டுகின்றன.

உதயணன் சரித்திரமாகிய பெருங்கதையில், உதயணன் நளகிரி யென்ற மதம் பிடித்த யானையை வீணையை வாசித்து அடக்கி, அதன்மேல் ஏறி ஆயுதங்களை அதையே எடுத்துத்தர ஏவி ஊர்ந்தானென்று ஒரு செய்தி காணப்படுகின்றது. இசையினால் வணக்கப்பட்ட அந்த யானை உதயணனுக்கு அடங்கி நின்றதை ஆசிரியர் கூறுகையில், 'குருவினிடத்து மிகுந்த பக்தியுள்ள ஒரு சிஷ்யன் போல் யானை படிந்தது' என்னும் பொருள்பட, "வீணை கெழீஇ வீதியி னடப்ப, ஆணை யாசாற் கடியுறை செய்யு, மாணி போல மதக்களிறு படிய" என்று பாடியுள்ளார். இதே நிகழ்ச்சியைக் கூறும் உதயண குமார காவியம் செய்தவர் இங்கே தந்தையைக் கண்டு வணங்கும் ஓர் உத்தம புத்திரனை உவமை காட்டுகிறார்.

பசுக்கள் இசையின் வயப்படுகின்றன என்பதைக் கண்ண பிரானார் கதை விளக்கும். பசுக்களைப் பல இடங்களிலும் மேய

விட்டு விளையாடிக்கொண்டிருந்த கண்ணபிரானர், மாலைக் காலத்திற் பசுக்களை ஆயர்பாடிக்கு ஓட்டிச் செல்ல வேறு ஏதும் செய்வதில்லை; குழலை யெடுத்து ஊதுவார்; உடனே பல இடங்களிலும் நின்று மேய்ந்த பசுக்களெல்லாம் ஒருங்கே திரண்டு அவர்பால் வந்து சேரும். இதனையே "ஆக்குவித்தார் குழலா லரங்கேசர்" என்று திவ்வியகவி ஒருவர் சுருக்கமாக விளக்குகின்ருர். **பெரிய புராணத்**திற் கூறப்படும் நாயன்மார்களுள் **ஆனய நாய**ருடைய புராணத்தும் இத்தகைய செய்திகள் காணப்படுகின்றன.

**அசுணமா** என்றெரு விலங்குண்டு. அதைப் பறவை யென் பாருமுளர். அஃதிசையை யறிவதிற் சிறந்தது: இனிய இசையைக் கேட்டுக் களிக்கும்; இன்னு விசையைக் கேட்பின், மூர்ச்சையுற்று விழுந்துவிடும். அதன் தன்மையை, "இருஞ் சிறைத்தொழுதி யார்ப்ப யாழ்செத்து, இருங்கல் விடரளை யசுண மோர்க்கும்" என்ற **அகநானூற்** றடிகளாலும், 'இன்னளிக்குரல் கேட்ட வசுணமா வன்னளாய் மகிழ் வெய்துவித்தாள்,' என்ற **சிந்தாமணிப்** பாடலாலும், "யாழ், நறையடுத்த வசுணநன் மாச் செவிப் பறையடுத்தது போலும்" என்ற கம்பர் வாக்காலும் அறியலாம். அதனைப் பிடிக்க எண்ணியவர்கள் செடி மறைவி லிருந்து யாழ் வாசிப்பார்களென்றும், அதன் இசையைக் கேட்டு அந்தற்று அசுணம் களிக்குமென்றும், அப்பொழுது அதனைப் பிடித்துக் கொள்ளுவார்களென்றும் தெரிகின்றது. அவர்கள் கை, முதலில் யாழின் இசையால் அசுணத்திற்கு இன்பத்தை விளைவித்துப் பின்பு, அதன் உயிருக்கே அழிவு சூழ்வதை **நற்றிணை**யில் உவமையாக எடுத்தாள்கையில், "அசுணம் கொல்பவர் கை போலன்றும், இன்பமுந் துன்பமு முடைத்தே" என்று ஒரு நல்லிசைப் புலவர் பாடியிருக்கிருர்.

இன்னரப் பறவையும் இத்தன்மையதே. வண்டி மாடு, கபிலை ஏற்றக் காளைகள் முதலியவற்றை இயக்கும்போது தெம்மாங்கு முதலிய பாடல்களைப் பாடுவதையும், அவைகளைக் கேட்டு அவ்விலங்குகள் தம் வேலையை வருத்தமின்றி அமைதி யாகச் செய்து வருவதையும் இன்றும் காண்கிறேம். அந்தத் தெம்மாங்கு தேன்பாங்கு போலும்! குழந்தைகள் அன்னையரின்

இனிய தாலாட்டிசையைக் கேட்டு அழுகையோய்ந்து உறங்கு வதை எவர் தாம் அறியார்?

வன்மனக் கள்வரும் தம் கொடுஞ்செயலை மறந்து இசை வயத்தராவர். பழைய நூலில் இத்தகைய செய்தியொன்று காணப்படுகின்றது. பாலை நிலத்தில் ஆறலை கள்வர், வழி வருவோர் பொருளையும் உயிரையும் கவர்வர்; பொருளில்லை யெனினும் வாளால் வெட்டப்பட்ட உடம்பு துள்ளுவதைப் பார்த்தேனும் களிக்கக் கொலை செய்வர். அவர்முன் பொருநர் பாலைப் பண்ணைப் பாடினால், அக்கள்வர் தம் கையிலுள்ள ஆயுதங்களை நழுவவிட்டு தம் வன்றொழிலை மறந்து இன்புற்று இசைக்கு உருகுவாராம். இதனையே, "ஆறலை கள்வர் படை விட வருளின், மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை" என்ற அடிகள் உணர்த்துகின்றன.

சீவக சிந்தாமணியின் கதாநாயகனான சீவகன், ஆண்களைப் பார்ப்பதுமில்லையென்ற விரதத்துடன் இருந்த சுரமஞ்சரி என்ற பெண்ணின்பால் ஒரு பழுத்த கிழவன் வேடங்கொண்டு சென்று, இசை பாடி, அவளை வசப்படுத்தினான். அவன் இசையைக் கேட்ட பெண்டிர் யாவரும் வேடன் பறவை போலக் கத்தும் ஓசையைக் கேட்டு மயங்கி ஒரே கூட்டமாக ஓடிவரும் மயிலினங் களைப் போல விரைந்து வந்தனர் என்று கவி அவ்விடத்தில் வருணிக்கிறார்.

> "கள்ள மூப்பி னந்தணன் கனிந்த கீத வீதியே
> வள்ளி வென்ற நுண்ணிடை மழைமலர்த் தடங்கணார்
> புள்ளி வம்ம நிம்மகன் புணர்த்த வோசை மேற்புகன்(று)
> உள்ளம் வைத்த மாமயிற் குழாத்தி னோடி யெய்தினார்."

என்பது அந்தப் பாட்டு.

இசை பிறரைத் தன் வயப்படுத்தும் என்னும்போது என் னுடைய இளமைக் காலத்தில் நடந்த ஒரு விஷயம் ஞாபகத் துக்கு வருகிறது. என்னுடைய தமிழாசிரியராகிய திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்களிடத்துச் சிறப்புப் பாயிரம் பெறப் பல புலவர்கள் முயற்சி செய்ததுண்டு. சிறந்த சங்கீத வித்துவானும், மகா சிவபக்தரும் ஆகிய கோபாலகிருஷ்ண

**பாரதியாரவர்கள்** தாம் இயற்றிய நந்தன் சரித்திரக் கீர்த்தனத்திற்குச் சிறப்புப் பாயிரம் கொடுத்துதவுமாறு பிள்ளையவர்களை வேண்டினார்கள். அதில் பிழைகள் காணப்பட்டமையாற், "சிறப்புப் பாயிரம் தரமாட்டோம்," என்று பிள்ளையவர்கள் மறுத்துவிட்டார்கள். மறுத்தும், பாரதியார் முயன்றே வந்தார். ஒருநாள் பிள்ளையவர்கள் உள்ளே படுத்திருக்கும்போது அவர்கள் வீட்டிற்கு வந்த பாரதியாரவர்கள், பிள்ளையவர்கள் நித்திரை செய்கிறார்கள் என்பதை யறிந்து, எழுப்புதல் கூடாதென்றெண்ணிப் புறத்தே யிருந்து, தமது நந்தன் சரித்திரக் கீர்த்தனையி லுள்ள "கனக சபாபதி தரிசனம் ஒருநாள் கண்டாற் கலிதீரும்," என்ற கீர்த்தனையை இனிமையாக மெல்லப் பாடிக்கொண்டிருந்தார்கள். பிள்ளையவர்கள் விழித்துக் கொண்டு எழுந்து கீர்த்தனை முழுவதும் பாடும் வரையில் இருந்து கேட்டு, மனமுருகி, "இதற்குச் சிறப்புப் பாயிரம் கொடாமலிருப்பது முறையன்று," என்று உடனே வந்து சிறப்புப் பாயிரமொன்றை வழங்கினார்கள்.

ஈசுவரரே இசையின் வடிவமா யிருப்பரென்றும், இசையிற் பிரியம் உடையவரென்றும் பெரியோர்கள் சொல்லியிருக்கின்றார்கள். "ஏழிசையா யிசைப்பயனாய்." "இயலவன் இசையவன்," "இயலிசைப் பொருளாகி," "ஏழிசையை" எனவரும் தேவாரப் பகுதிகள் சிவபெருமான் இசையுருவின ரென்பதைத் தெரிவிக்கின்றன. இசையிலுள்ள விருப்பத்தினால் அநவரதமும் இசையைக் கேட்டு ஆனந்திக்கும் பொருட்டு இசையில் வல்ல இரண்டு கந்தருவர்களைச் சிவபெருமான் காதிற்குழையாக வைத்தருளி யிருக்கின்றனரென்று நூல்கள் கூறும். "இசை விரும்பும் கூத்தனார்," என்பதும், இறைவருடைய இசை விருப்பத்தை வெளியிடும். ஈசுவரர் கையில் வீணையை வைத்து அகத்தின் புறுவதாகப் பெரியோர் கூறுவர். "எம்மிறை வீணை வாசிக்குமே" என்பது தேவாரம். இத்தகைய மூர்த்தி 'வீணா தக்ஷிணாமூர்த்தி' என்று வழங்கப்படுவர். கண்ணன் வேய்ங்குழலோடும் விளங்கி இசை பரப்பியதை அறியாதார் யார்? இத்தகைய இசையின் பெருமையையும், இன்பத்தையும் இன்னும் விரிக்கிற் பெருகும்.

---

## 2. எனது இலங்கைச் செலவு

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்.

'இலங்கைச் செலவு' என்னும் தலைப்பை நோக்கியதும் சிலர் 'இலங்கைக்குச் சென்று திரும்பியதற்கு நேர்ந்த செலவு போலும்' என்று நினைக்கலாம். ஈண்டுச் 'செலவு' என்னுஞ் சொல்லைப் பொருட்செலவென்னும் பொருளில் பெய்தேனில்லை. தரை நீர்ச் செலவு என்னும் பொருளில் அச் சொல்லைப் பெய்தேன். இந் நாளில், செலவு என்னும் சொற்குப் பதிலாகப் பெரிதும் 'யாத்திரை' என்னுஞ் சொல் ஆட்சி பெற்றிருக்கிறது. பண்டைத் தமிழ் நூல்களில் செலவு என்னுஞ் சொல்லே ஆட்சி பெற்றிருத்தல் காணலாம். 'செங்கோன் தரைச் செலவு' என்ற பெயர் தாங்கிய ஒரு தமிழ் நூலுண்மையும் கவனிக்கற்பாலது.

நாங்கள் கப்பலினின்றும் இறங்கி, இலங்கைப் புகைவண்டியில் ஏறினோம். வழி நெடுகப் பசுமை உமிழும் மலைகளின் செறிவும், குழலும், நிரையும், அணியும் உள்ளத்தைக் கவர்கின்றன. முகிற் குழாங்கள் மூண்டெழுந்து படிப்படியே அசைந்தும் ஆடியும் ஓடியும் மலைமுகடுகளிற் சூழ்ந்து தவழ்ந்து பாகை போல் பொலியுங் காட்சியும்—அம் மலைகளின் உடல் புலனாகாவாறு பசும்பட்டுப் போர்த்தாலெனப்பொழில்கள் துதைந்துள்ள அழகும்—புலன்களை ஒன்றச் செய்கின்றன. மலையுச்சியினின்றும் தரைவரை, நிரை, நிரையாகச் சரிந்தும் செறிந்தும் நிற்கும் தெங்கின் பெருக்கும், அவ்வாறே தெங்கைவிட்டுப் பிரியாது அணித்தே புடைசூழ்ந்து நிற்கும் கமுகின் உயர்வும், அவைகளுடன் நீக்கமின்றி வாழ்க்கைத் துணையெனச் சுற்றிச் சுற்றிப் பின்னிக்கிடக்கும் கான்பரந்த செடிகொடிகளின் ஈட்டமும், வானுலகேறப் பச்சைப்படாம் விரித்த படிகளெனத் திகழ்கின்றனவோ என்றும் ஐயுறலாம். புகைவண்டி அப் பசுமை நிலத்தில் பறந்தோடுவதை நோக்குழி, அது பச்சை மரகத மலையைக் கிழித்தோடும் அம்பெனத் தோன்றுகிறது. பசுமைக் காட்சியில்லாத இடனும் உண்டோ? கண்ணுக்கும் மனத்துக்கும் இனிமையூட்டும் பசுமையின் பெற்றியை என்னென்றுரைப்பேன்.

புகை வண்டியின் விரைவில், இடையிடையே யோடுஞ் சிற்றருவிகளின் தோற்றம், பசிய வானில் மின்னொளி தோன்றி மறைவதுபோலப் புலப்படுகிறது. பச்சைப் பசுங்கடலில் சிறு சிறு தீவுகள் நிலவுவதை மான, கூரைவேய்ந்த சிறு சிறு குடில்கள் நிலவுகின்றன. அக் குடில்களின் நடுவண் ஆடவர், மகளிர், குழந்தைகள், காளை மயில், கன்றுகளென நிற்கின்றனர். அவ் வீட்டமும் இக் கூட்டமும் இயற்கையோடியைந்த இன்பமாகப் பொலிகின்றன. ஆங்காங்கே சிற்சில இடங்களில் தற்கால நாகரிகக் கட்டிடங்களும் புலனுகின்றன. அவைகளைக் காணும் தோறும் பொல்லா அரக்கர் குழுவைப் பார்ப்பது போன்ற நிகழ்ச்சி யுள்ளத்தினுமற் போகாது. கூரை வேய்ந்த வீடுகள் இயற்கை யோடியைந்து இன்பூட்டுவதுபோலப் பெரும் பெரும் மாடிகள் இயற்கையோடியைந்து நிற்பினும் இன்பூட்டுவதில்லை.

இந்நிலையில், வண்டி குறித்த காலத்துக்கு இரண்டரை மணிநேரங் கடந்து, நிலையம் சேர்ந்தது. சேர்ந்ததும், கொழும்பிலுள்ள ' இந்திய வாலிபச் சங்க ' நேயர்கள், ஆண்டுப் போந்து ' தென்னாடுடைய சிவனே போற்றி ' என்று ஒருவர் முழங்க மற்றவர், ' எந்நாட்டவர்க்கும் இறைவா. போற்றி ' என்று எதிரொலிபோல் முழங்க, எங்களை வரவேற்றார்கள். செயற்கை வெம்மையில் வீழ்ந்து வருந்திக்கொண்டிருந்த எனதுள்ளம் தமிழ்மறைமீது ஓடிற்று. தென்னாட்டவர்க்குச் சிவனாக விளங்குவோனே, எந்நாட்டவர்க்கும் இறைவனாக விளங்குகின்றான் என்று எண்ணி எண்ணி, அம் மறை அருளிய மாணிக்கவாசகனாரை உள்ளத்தால் போற்றிப் போந்தேன். எனது எளிய வாழ்வுக்கும் எனது மனத்திற்கும் இனியதாய், வெளியில் போந்ததுங் கடற்காட்சி நல்கவல்லதாயுள்ள ஓர் இன்ப நிலையத்தில் வதியுமாறு அன்பர்கள் என்னையும் நண்பரையும் விடுவித்தார்கள்.

கொழும்பிற்கு அணித்தாயுள்ள வெள்ளவத்தையில் நாங்கள் தங்கியிருந்தோம். நாங்கள் சென்ற காலம் ஆடி வேல் விழாக் காலம். கதிர்வேற் பெருமான், வெள்ளித் தேர்மீது இவர்ந்து கொழும்பினின்றும் வெள்ளவத்தைக்கு எழுந்தருளி அடியவர்க்கருள் செய்கிறார்.

அவ் விழாவில் முருகப்பெருமானைப் போற்றாத குலத்தார் இல்லை. எல்லாச் சமயத்தாரும் சாதியாரும் காணிக்கை செலுத்தி நெற்றியில் திருநீறணிந்து செல்லுகின்றனர். 'முருகக் கடவுள் தமிழ்க் கடவுள்' என்பது அவ்விழாவில் நன்கு தெரிகிறது. பல சமயக் கொள்கை உடைய தமிழ்மக்கள் அனைவரும் முருகக் கடவுளை வழிபடுதல் கருதத்தக்கது. நமது தென்னாட்டில் வேறு மதம் புகுந்த தமிழ் மக்கள் முருகக் கடவுளை வழிபடுகிறார்களில்லை. இலங்கைத் தமிழ் மக்கள், முருகன் வழிபாட்டில் ஒன்றி நிற்கிறார்கள்.

கொழும்பு 'இந்திய வாலிபச் சங்கத்'தின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்கவே யான் அழைக்கப்பட்டேன். அவ்விழா அழகியதொரு கொட்டகையில் நடைபெற்றது. எனக்குச் சங்கச் சார்பாக வழங்கப்பெற்ற நன்மொழியில் சங்கத்தார் என் மாட்டுள்ள முழு அன்பையும் காட்டியிருக்கிறார். அவர்க்கு நன்றி கூறுமுகத்தான், அந்நன்மொழியைத் தழுவியே எனது முன்னுரைக் கடனாற்றினேன். அம் முன்னுரைக்கண் இந்தியாவில் பல குறைகள் இருக்கின்றன என்றும்—அவை (1) பெண்ணை அடிமைப்படுத்தி யிருத்தல், (2) மக்களுள் பிறப்பால் உயர்வு தாழ்வு கொண்டமை, (3) பிறப்பில் தீண்டாமை வகுத்தது, (4) கருத்துவேற்றுமைக்கு மதிப்புக் கொடாமை, (5) பொறாமை என்பன என்றும் பேசி, அவைகளைப் பீடிகையாகக்கொண்டு, சுமார் ஒன்றரை மணிநேரம் சொற்பொழிவு நிகழ்த்தினேன். இந்திய இளைஞர் உலகில் அவ்வைம்பெருங் குறைகள் இருத்தலாகாதென்றும், அக் குறைபாடுகள் உள்ள மட்டும் இந்தியா உரிமை பெறல் அரிதென்றும் அவைகளை அன்புவழி நின்று களைய இளைஞர்கள் முயலல் வேண்டுமென்றும் இளைஞர்களுக்கு விண்ணப்பஞ் செய்து கொண்டேன்.

இலங்கை வாசிகளில் பெரும்பான்மையோர் சிங்களவரே. அவருள் ஆங்கிலம் பயின்ற ஆண்மக்களும், பெண்மக்களும் ஐரோப்பிய நடை உடை பாவனைகளைக் கொண்டிருத்தலால் அவர்களைப்பற்றி ஒன்றும் கூறவேண்டுவதில்லை. ஐரோப்பிய நாகரிகத்திலே தோயாத சிங்களவ ஆண்மகன் மிக வலியனாய், கூரிய நோக்குடையவனாய்க் காணப்படுகிறான். அவன் முகத்தில்

சாந்தம் காணேம். அவன் எளிய உடையே அணிகிருன். பலர் மயிரைக் கோலிக்கட்டி, வளைந்த தந்தச் சீப்பைச் செருகியிருக் கின்றனர். பெண்மகள் மிகத் திண்ணமா யிருக்கிருள். அறிவு விளக்கம் புலப்படவில்லை. அவள் தன் அறையில் நான்கு முழத் துண்டையும், மார்பு மறைய ஒரு கஞ்சுகத்தையும் அணிந்திருக் கிருள். மற்ற மேலாடை ஒன்றுமில்லை.

கொழும்பினின்றும் கண்டிக்குப் புறப்பட்டோம். எங்களை வழிகூட்டி அனுப்பப் போந்த அன்பர்களோடு நாங்கள் பேசிக் கொண்டிருந்தமையால், எங்கட்குச் செயற்கை வெம்மை புல ஞகாமலிருந்தது. வண்டி புறப்பட்டதும் அவ் வெம்மைக் கொடுமை வருத்தத் தொடங்கிற்று. சிறிது நேரத்திற்குள் இயற்கை அன்னை காட்சி வழங்கினுள். அவ்வழியின் இயற்கை வளத்தை என்னென்று சொல்லுவேன்! ஸ்ரீ நகர், டார்ஜ்லிங், ஆல்ப்ஸ் முதலிய இடங்களிலுள்ள இயற்கை வளங்களைப் பற்றிக் கேள்வியுற்றிருக்கிறேன். நூல்கள் வாயிலாகப் படித்து மிருக்கிறேன்; அவைகளை நேரே கண்டதில்லை. கண்டிக்குச் செல்லும் வழிநெடுக இயற்கை அன்னையின் திருவோலக்கமன்றி வேறென்ன இருக்கிறது? எங்கணும் மலைகள் - மலைத் தொடர் கள் - மலைச் சூழல்கள்; எங்கணுஞ் சோலைகள் - சாலைகள் — செடிகள், கொடிகள், பைங்கூழ்கள்; எங்கணும் அருவிகள், ஆறுகள், நீர் நிலைகள். இவை யாவும் ஒன்ருேடொன்று கலந்து அளிக்கும் காட்சியன்ருே கடவுட் காட்சி? நூற்றுக் கணக்கான குற்ருலங்கள், நூற்றுக்கணக்கான பாபநாசங்கள், ஆண்டுள்ளன. மலைகள் எத்துணைவிதமாகக் காட்சி வழங்கு கின்றன! சில இடங்களில் மலைகள் படிப்படியாக இழிந்து இடைவெளியிட்டு இவர்ந்து நிற்குந் தோற்றம் இயற்கை ஊசல் போல் விளங்குகின்றது. சில இடங்களில் மலைகள், சிங்கம் எழுந்து நின்று பாயவருந் தோற்றத்தை வழங்கிக்கொண்டு நிற் கின்றன. சில இடங்களில் அவைகள் செய்கரைபோல் நேர்மை யாக நிற்கின்றன. பசுமை நிலவாத மலைப்பாங்கரே காணேம். தெங்கும், கமுகும், ரப்பர் மரங்களும் ஒரு பெரும் பசுங்கடல் பொங்கிவருதல்போல் காணப்படுகின்றன. சில இடங்களில் நாலாப்பக்கங்களிலும் மலைசூழ்ந்து நிற்ப, அவைகளினின்றும் பொழியும் அருவி அவைகளினடியில் நீரரண் என ஓடித்திகழ,

நடுவண் பச்சைப் பசேலென வான்பயிர் தலையசைத்து நிற்கும் அழகைக் கண்டு உவந்தேன். பசியமலைச் சோலைகளைப் பார்க்குந் தோறும் பார்க்குந்தோறும் இயற்கை இன்பவாழ்வு உள்ளத்தில் தோற்றமுறு நிற்கும். இப்போது ஐரோப்பியத் தோட்டக்காரரும், மற்றவரும் இப்பசுங்காடுகளைப் பண்படுத்திப் பொருளீட்டுந் துறை கண்டிருக்கின்றனர். நம் முன்னோர் அவ்வியற்கை நிலையங் களிடை வதிந்து, இயற்கையின் வாயிலாக இறைவனைக் காணும் எளிய வாழ்வு நடாத்தினர். பசுமை பொங்கும் மலை களைப் பார்த்துக்கொண்டே கண்டி சேர்ந்தோம். நிலையத்தருகே கண்டித் தமிழ்மக்கள் அன்போடு எங்களை வரவேற்றார்கள். நாங்கள் 'தமிழக' நிலையத்தில் தங்கியிருந்தோம். ஆங்குச் 'சைவம்', 'தமிழ் வரலாறு' என்னும் இரண்டு சொற்பொழிவு கள் நடைபெற்றன. ஆங்குள்ள தமிழர், தமிழ் மனத்தோடு எங்களுடன் உறவாடினர் என்று சுருங்கச் சொல்லி மேலே செல்லுகிறேன்.

கண்டி, கண்டின்புறத்தக்க இடங்களில் ஒன்று. கண்டியை இயற்கைக்குடில், என்று கூறுவது மிகையாகாது. கண்டியி லுள்ள விவசாயக் கல்லூரி, தோட்டம் முதலியவற்றைக் கண் டோம். அத்தோட்ட வனப்பை வருணிக்கப் புகுந்தால் இக் கட்டுரை வருணனை உரையாகவே முடியும். இயற்கை அரசியின் உறையுளெல்லாங் கண்டு, பின்னர்ப் பௌத்தமடம், கலாசாலை, கோயில் முதலிய அறநிலையங்களுக்குச் சென்றோம். மடத்தில் பெரிய பௌத்த குருவைப் பார்த்து உரையாடப் போனேன். அவருக்குத் தமிழுந் தெரியவில்லை ; ஆங்கிலமும் தெரியவில்லை. அவர் ஆணைப்படி பௌத்த வித்தியாலயம் போந்து, ஆண்டுள்ள ஓர் ஐரோப்பியர்பால் உரையாடினேன். அவர் பௌத்த நூல் களில் ஆராய்ச்சி யுடையவர் என்பது, அவரது அன்பார்ந்த பேச்சால் தெரியவந்தது. சம்பாஷணையால் நாங்கள் ஒருமை முடிவே பெற்றோம்.

கண்டியின் பலதிறக் காட்சி கண்டு, அன்பர்பால் விடை பெற்று, யாழ்ப்பாணம் நோக்கினோம். யாழ்ப்பாணத்தின் இயற்கைவளம் நமது தென்னாட்டு இயற்கை வளத்துக்கு அரண் செய்வது. இலங்கையின் மற்றப் பகுதியின் இயற்கைவளம்

யாழ்ப்பாணத்தில் இல்லை. புகையிலைப் பெருக்கு குறிக்கத் தக்கது. கொழும்பு வழியிலும், கண்டி வழியிலும் தெங்கின் பசுமை கண்ணுக்கு விருந்தளித்தது. யாழ்ப்பாணத்திலோ அத் தென்னங்கீற்றுகளின் வேலிகள் கண்ணைக் கவர்ந்து நின்றன. யாழ்ப்பாணத்தில் சொற்பொழிவுகள் பல நிகழ்ந்தன. ஒரே நாள் நான்கு இடங்களில் சொற்பொழிவு நிகழ்த்தலும் நேர்ந்தது. பல கல்லூரிகளிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. கல்லூரிகளில் எனதுள்ளத்தைக் கவர்ந்தது ஸர். பொன்னம் பலம் இராமநாதன் பெண்மக்கள் கல்லூரி. அக்கல்லூரியைப் பெருஞ் சிதம்பரமாக மனத்தால் தொழுதேன். தமிழும் சைவ மும் ஆண்டிருந்து புத்துயிர் பெறும் என்னும் உறுதியும் எனக்குத் தோன்றிற்று.

யாழ்ப்பாணக் குடிமக்கள் தமிழர், வேளாளர், சைவர். அவர் நமது தமிழ்நாட்டினின்றும் அவண் குடி புகுந்தவர். அவ ருடன் போந்த வேறு சிலருமிருக்கின்றனர். தாய்நாட்டின் நினைவு தோன்ற ஆண்டுள்ள தமிழ்மக்கள் சில இடங்களுக்குத் திருநெல் வேலி, பட்டுக்கோட்டை முதலிய பெயர்களைச் சூட்டி இருக்கிறார் கள். யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் எங்கள்பால் காட்டிய அன்பு என்றும் மறக்கற்பாலதன்று. தென்னாட்டுத் தமிழ் மக்களுக்கும் தங்கட்கும் இடையறாத் தொடர்பிருத்தல் வேண்டுமென்று கூறாத அன்பர்கள் இல்லை.

---

## 3. நீர் மின்சாரத் திட்டம்

வித்துவான், E. K. நடேச சர்மா, B. O. L.

ஆண்டு அறுபது நிரம்பப்பெற்ற பின்னரும் ஜாம்ஷெட் ஜிக்கு ஊக்கமும், மனவலிமையும் ஒரு சிறிதும் குன்றவில்லை. அவர் எப்பொழுதும் ஏதாவது ஆராய்ச்சியிலாழ்ந்த மனத்தின ராய்ப் புதிய திட்டங்களை யமைப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்துவந்தார்; ஓய்வு ஒழிவின்றி வேலை செய்து வந்தார்; உடல் தளர்வதைக் குறித்துச் சிறிதும் கவலை கொள்வதில்லை.

அவர் அக்காலத்தில் அமைத்த திட்டங்களுள் நீர் மின்சாரத் திட்டம் பெரிதும் குறிப்பிடத்தக்கது.

1897-ஆம் ஆண்டு ராபர்ட் மில்லர் என்ற பம்பாய் வியாபாரி ஒருவர் 'தூத் சாகர்' நீர்வீழ்ச்சியைப் பயன்படுத்தும் உரிமையைப் பெற்றபின், டாடாவின் உதவியை நாடினார். இருவரும் டேவிட் கோஸ்லிங் என்ற எஞ்சினீயரைக் கலந்தாலோசித்தனர். கோஸ்லிங் மேற்குத் தொடர்ச்சி மலையில் பம்பாய்க் கருகிலுள்ள லோனவ்லா என்ற மலைக்கிராமத்திற்கு ஆண்டு தோறும் கோடைக்காலத்தில் போவது வழக்கம். அதைச் சுற்றிலும் உள்ள மலைப்பிரதேசத்தை அவர் நன்கு அறிந்திருந்தார். மழைநீரைத் தேக்க வசதியுமிருந்தது. அவற்றை யெல்லா மறிந்த எஞ்சினீயர் கோஸ்லிங் லோனவ்லாவுக்கு அருகிலேயே தண்ணீரைத் தேக்கி நீர் மின்சாரத்தை யுண்டாக்கலாமென்று தீர்மானித்தார். அக்கருத்தை அவ்விருவருக்கும் அறிவித்தார்.

நீர் மின்சாரத் திட்டம் டாடாவுக்கு மிக உற்சாகத்தை அளித்தது. மின்சார சக்தியினால் தம் ஆலை எந்திரங்களை இயக்க வேண்டுமென்று அவர் பலமுறை எண்ணியதுண்டு. தாஜ்மஹால் ஹோட்டலில் உள்ள மின்சாரவிளக்கு, விசிறி, அடுப்பு முதலியவற்றிற்கு வேண்டிய மின்சாரம், நிலக்கரி உதவி கொண்டு எந்திரத்தை ஓட்டிப் பெறப்பட்டது. பம்பாய்க் கருகில் நிலக்கரி கிடையாது. வங்காளத்திலிருந்தே தருவிக்க வேண்டும். அதுவும் அதிக விலையுள்ளது. மேலும், நிலக்கரியை உபயோகிப்பதால் உண்டாகும் புகையினால், பொது மக்களுக்கும், தொழிலாளர்களுக்கும் பல தொல்லைகள் விளைந்தன. மேலும் புகையினால், நகரினழகே கெட்டது. ஆகையால், நிலக்கரிக்கு ஈடாக நீர் மின்சார சக்தியை உபயோகித்தல் நலம் என்று டாடா நினைத்தார். கோஸ்லிங் கூறியவாறு லோனவ்லாவில் நீரைத் தேக்கி, அந்நீரிலிருந்து மின்சாரத்தை உண்டாக்கும் திட்டத்தை ஜாம்ஷெட்ஜி முழுமனத்துடன் ஆதரித்தார். டாடா, மில்லர், கோஸ்லிங் மூவரும் சேர்ந்து அத்திட்டத்தைத் தொடங்கினர்.

அடிப்படையான ஏற்பாடுகள் நிறைவேறிய பின்னர், டாடா அரசாங்கத்தாரிடம் அனுமதி வேண்டினர்; பிற வேலைகளைத் தொடங்குவதற்குமுன் லண்டனுக்குச் சென்று இந்திய மந்திரி **ஜார்ஜ் ஹாமில்டனைக்** கண்டு, அவரிடம் தமது நீர் மின்சாரத் திட்டத்தைப்பற்றி நன்ருய் விளக்கிக் கூறி, அவருடைய வாழ்த்தும் ஆதரவும் பெற்றுப் பம்பாய்க்குத் திரும்பி வந்தார்.

இந்திய அரசாங்கத்தார், எந்த வேலையிலீடுபட்டாலும், லண்டனிலுள்ள இந்திய மந்திரியின் அனுமதி பெற்றே முடிவு செய்யவேண்டும். இந்திய அரசாங்கத்தார் ஏதேனும் ஒன்றி னுக்கு அனுமதி கொடுத்தபோதிலும், அதைத் தடுப்பதற்கு இந்திய மந்திரிக்கு அதிகாரம் இருந்தது. ஆகவே, நேரே ஜார்ஜ் ஹாமில்டன் அனுமதியையும், ஆசியையும் பெற்றது, அவருக்கு மிக்க அனுகூலமாயிற்று. ஹாமில்டன் பிரபு, தம் கருத்தைப் பம்பாய்க் கவர்னர் **நார்த்காட்டுப்** பிரபுவுக்குத் தெரிவிக்க அவரும் ஜாம்ஷெட்ஜியின் திட்டத்தை ஆதரித்தார்.

**பயனீர்** என்ற வேருெரு கம்பெனியாரும் மின்சார உற்பத் தியில் ஈடுபட்டிருந்ததால், டாடா தாம் செய்யவேண்டிய வேலை களை விரைந்து செய்யத் தொடங்கினர்; அரசாங்கத்திற்கோ நகராண்மைக் கழகத்திற்கோ வேண்டிய மின்சாரத்தைக் கொடுக்கப் "பயனீர்" போன்ற எந்தக் கம்பெனிக்கும் தனி யுரிமை கொடுக்கக் கூடாதென்று போராடி வெற்றி பெற்ருர். மின்சார உற்பத்திக்காக ஏற்படுத்திய அக்கம்பெனியில் பங்காளி களாக இன்னும் சிலரும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். வேலை தொடங்கப் பெற்றது. ஆனல், டாடா, விஞ்ஞானக்கலை ஆராய்ச்சிக் கழகம், இரும்பு எஃகுத் தொழிற்சாலை இவை இரண்டும் போலவே, இத்திட்டமும் முடிவு பெறும்வரையில் உயிருடனிருந்து கண்டுகளிக்கும் பேறு பெறவில்லை. அவற்றை நிறைவேற்றும் கடமை டொராப்ஜியைச் சார்ந்தது.

மேற்குத் தொடர்ச்சி மலையில் அழகிய பள்ளத்தாக்குக்களி னிடையே நீர்த் தேங்குமிடம் அமைக்கப் பெற்றிருக்கிறது. அங்கே மூன்று தனி நீர்நிலைகள் தடுக்கப்பட்டிருக்கின்றன. முத லாவது நீர்நிலை லோணவ்லாவில் கடல்மட்டத்திற்கு இரண்டாயிரம்

அடி உயரத்தில் இருக்கிறது. மழைத் தண்ணீர் முழுவதும் அங்கே தேக்குவதற்காக 3800 அடி நீளமுள்ள அணையொன்று கட்டப்பட்டிருக்கிறது. அதற்கு மூன்று மைலுக்கு அப்பால் வடகிழக்கில் கோடைக்காலத்திற்கு வேண்டிய நீரைச் சேகரிக்கும் **வால்வான்** என்னும் ஏரி ஒன்று உளது. அஃது இரண்டு மலைத் தொடர்ச்சிக்கும் இடையில் 4500 அடி நீளமும் 70 அடி உயரம் முழுதுள்ள அணையாலானது. 1500 ஏக்கர் பரப்பும் 65 அடி ஆழமுமுள்ளது. வடகிழக்கு மூலையிலிருக்கும் மூன்றுவது நீர்நிலை **ஷிராவதா** என்னும் ஏரியாகும். அதன் பரப்பு ஐந்து சதுரமைல். அந்த ஏரியின் அணை பிரசித்திபெற்ற **அசுவான்** அணையினும் பெரிது; 7670 அடி நீளமும் 93 அடி உயரமுமுள்ளது. ஷிராவதா ஏரியினின்றும் பெருகுந் தண்ணீர் வால்வான் ஏரியிற் கலக்கும். அங்கிருந்து குழாய்களின் வழியே செயற்கை நீர்வீழ்ச்சிகள் உண்டாக்கி, மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது.

இவ்வணைகள் எல்லாம் ஒரே காலத்தில் கட்டப்பட்டன அல்ல. லோனவ்லா அணை 1911-ம் ஆண்டிலும், வால்வான் அணை 1912-ம் ஆண்டிலும், ஷிராவதா அணை 1920-ஆம் ஆண்டிலும் கட்டி முடிவடைந்தன; தண்ணீர் மலைமேலிருக்கும் சம பூமியிலிருந்து நீர்ப்பாலங்களின் வழியாகவும், கால்வாய்களின் வழியாகவும் பாய்ந்து சுரங்கங்களை யடைகிறது. அங்கிருந்து கீழேயிருக்கும் நீர்தாங்கியில் அது விழுகின்றது: அங்கே பெரிய குழாய்களில் புகுந்து 1734 அடி குதித்து, மலையடிவாரத்திலுள்ள மின்சார உற்பத்திச் சாலையில் உள்ள எந்திரங்களை ஓட்டி மின்சார சக்தியை உண்டாக்க உதவுகின்றது.

அம் மின்சாரம் அங்கிருந்து நாற்பத்து மூன்று மைல்களுக்கப்பாலுள்ள **பரேல்** என்னுமிடத்திற்குக், கம்பி மூலம் அனுப்பப்படுகிறது. உயர்ந்து நிற்கும் எஃகுக் கிடுகுகளால் தாங்கப்பட்ட கம்பிகளின் வழியாய், நீரையும், நிலத்தையும் கடந்து வரும் இம் மின்சாரத்தின் பெருமையை என்னென்றுரைப்பது! இவ்விதம் அனுப்பப்பெறும் மின்சாரம் ஆண்டொன்றுக்கு 50,000 குதிரை வலிகொண்டது. பம்பாய் ஆலை முதலாளிகள்

சிலர் இதனை வாங்கிக்கொள்வதாகக் கூறினர். நீர் மின்சாரக் கம்பெனியார் ஆண்டுதோறும் 30,000 குதிரை வலிகொண்ட மின்சார சக்தியைக் கொடுப்பதாக அவர்களுடன் ஒப்பந்தம் செய்துகொண்டனர். எஞ்சியதைப் பல தொழிற்சாலைகளுக்கு விற்க ஏற்பாடு செய்தனர்.

இத்தனை ஏற்பாடுகளுக்குப் பின்னர், கம்பெனிக்குப் பண முடை ஏற்பட்டது. செலவுக்கு வேண்டிய முதல் இல்லை. அப்பொருளை லண்டனில் சேர்க்க ஏற்பாடுகள் செய்யப் பெற்றன. அப்பொழுது பம்பாய்க் கவர்னராய் இருந்த **ஸிடன்ஹாம் பிரபு** ஷோலாப்பூரில் பிரசங்கம் செய்யுங்கால், 'நீர் மின்சாரக் கம்பெனியை இந்தியரே நடத்துவதுதான் மேன்மையைத் தருவதாகும்' என்று கூறினர். அச்சொற்களைச் செவியுற்ற செல்வர் சிலர், நாட்டுப் பற்றின் மேலீட்டால், வேண்டிய முதலைக் கொடுக்க முன்வந்தனர். 1910-ஆம் ஆண்டில் '**டாடா ஹைட்ரோ எலக்டிரிக் சப்ளை கம்பெனி லிமிடெட்**' என்னும் கம்பெனி அரசாங்கத்தில் பதிவு செய்யப்பெற்றது. அதன் மூலதனம் இரண்டு கோடி ரூபாய். அது ஆயிரம் ரூபாய் கொண்ட 20,000 பங்குகளைக் கொண்டது.

அக் கட்டிட வேலைக்கு அஸ்திவாரம் போடும்போது, டொராப்ஜி அவ்விடத்தில் மின்சார உற்பத்திக்கு அநுகூலமாக உள்ளவற்றை விளக்கிக் கூறினர். இங்கு மிக்க மழை பெய்யும். அதனால் நிரம்பத் தண்ணீர் கிடைக்கும். நீர் அதிர்ச்சிக்கு வேண்டிய உயரம் இருக்கிறது. இயற்கையாக அமைந்த பள்ளத் தாக்குகள் பல உள. உற்பத்தி செய்யும் மின்சாரத்தை நெடுந் தூரம் அனுப்ப வேண்டுவதில்லை. பக்கத்திலேயே அதை வாங்குபவர் பலர் உளர். இத்துணை வசதிகளைப் பெற்றுள்ள இத் திட்டம் இலாபம் தருவதில் ஐயம் சிறிதும் இல்லை என்று அவர் கூறி, அதனை ஆதரிக்குமாறு அனைவரையும் வேண்டினர்.

1905-ஆம் ஆண்டில் பம்பாய்க் கவர்னராயிருந்த வில்லிங்டன் பிரபு அக் கட்டிடங்களைத் திறந்து வைத்தபொழுது, வர்த்தகரும், உத்தியோகஸ்தரும், முதலாளிகளும் குழுமியிருந்தனர். கண்கவரும் மலைக் காட்சியையும், மலைத் தொடரின் மேல் அமைந்திருந்த பெரிய ஏரிகளையும், நீண்டு உயர்ந்த அணை

களையுங் கண்டு அனைவரும் பேரானந்தம் அடைந்தனர். அவற்றைக் கண்டு மகிழும் பேறு பெறாது மண்ணுலகினின்று மறைந்த ஜாம்செட்ஜியை நினையாதவர் எவரும் இலர். கவர்னரும், தம் மனக் கண்முன் நின்ற அவ்வள்ளலைப் பலபடப் புகழ்ந்து கூறினார்.

அளவற்ற மின்சார சக்தி அகப்படுவதனால், பம்பாய் ஆலைத்தொழில் அபிவிருத்தி யடைந்தது. அச்சக்தி மலிவாய்க் கிடைத்ததனால் புதிய தொழிற்சாலைகள் பல தோன்றின. சிறந்த பண்டங்கள் குறைந்த செலவில் உற்பத்தி செய்யப் பெற்றன.

அத்துணை அனுகூலங்களை அளிக்கும் இச் சக்தியை விரும்பாதார் யார்? பயன்படுத்துவோரின் தொகை பெருகியதனால், அக் கம்பெனியார் உற்பத்தியை அதிகரிக்கச் செய்ய ஏற்பாடுகள் செய்தனர். "ஆந்திர வாலிஸ்கீம்" என்ற ஒரு புதிய திட்டம் தொடங்கப்பெற்றது. அதற்கு 'லோனவ்லா' விலிருந்து 12 மைல் வடக்கே உள்ள பள்ளத்தாக்கைப் பயன்படுத்திக்கொள்ளத் தீர்மானித்தனர். அது இரண்டு மலைத்தொடருக்கு இடையில் உள்ளது; மலையடிவாரத்தில் ஒரு சிற்றாறு வளைந்து வளைந்து ஓடுகின்றது. மழை பெய்யுங்காலத்தில், அந்நீரைத் தேக்க 190 அடி உயரமும் 1800 அடி நீளமும் உள்ள அணையைக் கட்டினர். இத்திட்டம் ஒன்றே 60,000 குதிரை வலிகொண்ட மின்சாரத்தை உதவக்கூடியது.

ஜாம்செட்ஜி லோனவ்லாவில் மட்டுமே நீரின் உதவியால் மின்சாரம் உற்பத்தி செய்ய எண்ணியிருந்தார். பிற்காலத்தில் தமது சிறிய திட்டம் இவ்வளவு பெரியதாகும் என்று கருதியிரார். எனினும், அவர் நட்ட சிறு செடி, பெருமரமாக வளர்ந்து பூத்துக் காய்த்துக் குலைகுலையாய்ப் பழுத்துப் பயனளிக்கின்றது. பம்பாய் நகர மக்கள் அதனைத் துய்த்து இன்புறுகின்றனர்.

நதிகளும், ஏரிகளும், நீர்வீழ்ச்சிகளும் நிறைந்த நம் நாட்டில், அறிஞர் பிறரும் அவரைப்போல் இன்னும் எத்தனையோ திட்டங்களை வகுத்து அவ்வியற்கைச் சக்தியினால் கைத்தொழிலையும், வர்த்தகத்தையும் வளர்த்து, செல்வத்தைக் குவித்து

இந்திய நாட்டை இந்திரலோகமாகச் செய்தலே அவருக்குச் செய்யும் கைம்மாறாகும்.

---

## 4. வள்ளுவரும் காந்தியும்

K. V. ஜெகந்நாதய்யர் B.O.L.

தமிழில் உள்ள இலக்கியங்களுள் உலகம் முழுவதும் பரவத்தக்க பொருட்செறிவும், பொதுப்பண்பும் வாய்ந்தது திருக்குறள். இந்த உண்மையை உணர்ந்தே பாரதியார், குறள், உலகம் முழுவதுக்குமே சொந்தமான நூல் என்று பாடுகிறார்.

> "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு."

என்பதில் அந்தக் கருத்து தோன்றுகிறதல்லவா ?

சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பியிருப்பதோடு, வாழ்க்கைக்கு உதவும்படியான கருத்துக்கள் செறிந்திருக்கும் அநுபவ நூல் அது. வாழ்க்கையை நல்ல முறையில் நடத்துவதற்குத் துணையாக நம் நாட்டார் சுருதி ஸ்மிருதிகளைக் கொண்டிருக்கிறார்கள். அவை வாழ்க்கைச் சட்டங்கள். திருக்குறளையும் அவற்றைப்போலவே வாழ்வில் இன்பந்துய்க்க வரையறையான நீதிகளைக் கூறும் சட்ட நூல் என்று சொல்லலாம். ஆனால், இரண்டுக்கும் ஒரு முக்கியமான வேறுபாடு உண்டு. வாழ்க்கைக்கு இலக்கணம் வகுக்கும் நீதி நூல்களை மக்கள் விரும்பிப் படிப்பதில்லை. சட்ட நூலை யாரேனும் விரும்பிப் படிக்கிறார்களோ ? இலக்கண நூல்கள் எல்லாமே, மொழிக்கு இலக்கணமாக இருந்தாலும்சரி, வாழ்க்கைக்கு இலக்கணமாக இருந்தாலும்சரி, மக்களுக்குக் கவர்ச்சி தருவதில்லை ; இந்தத் திறத்தில் திருக்குறள் வேறுபடுகின்றது. அது வாழ்க்கை நியதிகளை வரையறுக்கும் நூல் ; வாழ்க்கைக்கு வரம்புகோலும் சட்ட நூல்தான் ஆயினும், சுவை நிரம்பிய இலக்கியமாகப் படிக்கப் படிக்க இன்பந்தரும் காவிய ருசியோடு விளங்குகிறது.

உலக முழுவதுக்கும் பொதுவான உண்மைகளைத் திருக்குறள் கூறுகிறது. அதனால், அதற்குப் பொதுமறை என்ற பெயர் வழங்குகிறது. எங்கும் வழங்கும் பெருமைக்கு உரியதாக இருப்பதோடு, என்றும் வழங்கும் பெருமையும் அதற்கு உண்டு. இட எல்லை கடந்து நிற்கும் தன்மையும், காலங்கடந்து நிற்கும் தன்மையும் அதன்பால் இருப்பதற்கு அது கூறும் பேருண்மைகளின் செறிவும் ஆழமுமே காரணம்.

இந்த இயல்பைத் திருக்குறளைச் சிறப்பிக்க வந்த ஒரு பாட்டு வெளியாக்குகிறது. அது வாடாதமாலை போன்றதாம்; என்றும் வாடாதது; எப்போதும் மலர்ச்சியோடு விளங்குவது. காலத்தின் மாறுபாடுகளால் கலங்காதது. எதிர்தோன்றி நிலைத்து நிற்பது. தன்னைப் பயில்வார்களுக்குத் தேன் போலச் சுவை மலிந்து விளங்குவது. இப்படி இந்தப் பாட்டில் திருக்குறளின் பெருமை சொல்லப்பெறுகிறது.

"என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்."

புதிய புதிய காலங்கள் வந்தாலும் அந்த அந்தக் காலங்களுக்கும் பொருத்தமான உண்மைகளைச் சொல்லிக் கால வெள்ளத்தில் நிலைநிற்கும் என்ற கருத்தை, "யாணர்நாள் செல்லுகினும் நின்று அலர்ந்து" என்ற பகுதி குறிப்பிக்கிறது. யாணர் நாள்—புதுக்காலம்.

உண்மை எவ்விடத்தும் எக்காலத்தும் உண்மையாகத்தான் இருக்கும். "உண்மையேயழகு" என்று கூறுவர். சிறந்த உண்மைகளைச் சொல்லும் பேரிலக்கியமாகிய திருக்குறள் அழகிய இனிய நூலாக இருப்பதில் வியப்பொன்றும் இல்லை.

இந்த இருபதாம் நூற்றாண்டில் நம் கண்முன் எத்தனையோ அதிசயங்கள் நிகழ்கின்றன. நாமும் உடனிருந்து பார்ப்பதனால் அவற்றின் உண்மையான மதிப்பை நாம் உளங்கொள்வதில்லை. ராமர் காலத்தில் வாழ்ந்த மனிதனுக்கு நம்மளவு ராமபக்தி இருக்குமா என்பது சந்தேகந்தான். இதிகாசமாகவும், காவியமாகவும், சரித்திரமாகவும் உருக்கொண்ட நிகழ்ச்சிகள் காலத்திலே ஊறி இனிமையையும், பெருமையையும் அடைந்திருக்

கின்றன. இன்று அச்செய்திகளுக்கும், அவற்ருேடு தொடர் புடைய பெரியோர்களுக்கும் உலகத்தார் அளிக்கும் மதிப்பு, அவை நிகழ்ந்த காலத்தில் இருந்திருக்குமா என்பது ஆராய்ச்சிக் குரிய விஷயம். கண்முன்னே காணும் ஒன்றில் மனம் ஆழ்ந்து பதிவதில்லை. பழகிய பாலைப்போல அந்தப் பண்டத்தில் புளிப்பு உண்டாகிவிடுகிறது. கருத்தில், கற்பனையில், எதிர்பார்க்கும் ஆர்வத்தில், ஒரு பண்டம் இருந்தால் அதன் கௌரவமே வேறு. கடவுள் கண்காணுப் பொருளாக இருப்பதனுல்தான், பெரிய மதிப்புக்கு உரியவராக விளங்குகிருர் போலும்!

இன்று இராமர் இல்லை; கிருஷ்ணர் இல்லை; புத்தபகவான் வாழவில்லை; கிறிஸ்து மகான் பேசவில்லை; முகம்மது நபீ உயிரோடு இல்லை. ஆனுலும், அவர்களுடைய அபராவதாரம் போன்ற மகாத்மா காந்தியடிகள் வாழவில்லையா? அந்தப் பெரியா ருடைய ஆற்றலால் நம் கண்முன் எத்தனை அதிசயங்கள் நிகழ்ந்து வருகின்றன! நரியைப் பரியாக்குவதும், பரியை நரியாக்குவதும் போன்ற அதிசயங்கள் அல்ல; அவற்றைக் காட்டிலும் கடின மானவை, பலதிறப்பட்ட மக்களின் மனக்குரங்கை அடக்கி யாட்டும் அதிசயம்!

காந்தியடிகள், உண்மையை உயர்வாக எண்ணுபவர். அஹிம்சையை வாழ்க்கை நெறியாக உடையவர். எத்தனையோ சமயாசாரியர்களும் பெரியோர்களும் தோன்றி அன்பு நெறியை யும், அருள் நெறியையும் வகுத்த நாடு இது. அவர் சொல் நின்ற தேசமாகிய இங்கே மற்ெருருவர் சொல் ஆட்சிபெற வேண்டு மாயின் அந்த சொல் ஆற்றலுடைய சொல்லாக இருக்கவேண்டும். சொல்லுக்கு ஆற்றல் பொருளால் வருவது. காந்தியடிகளின் சொல் பொருள் நிரம்பியது. இருதயத்துக்கு ஒரு பாஷை உண் டென்ருல் அது காந்தியடிகளின் சொல்தான். உள்ளமும், உரையும், உடலும் உண்மை நெறியிலே செல்லும் தகைமையைக் காந்தியடிகள் ஒருவரிடத்திலேதான் காண்கிருேம். அவர் தம் உள்ளத்தே தோன்றியதை என்றும் கரந்து உரையாடுவதில்லை. அவர் வாழ்க்கையே உண்மையின் உருவம். "சத்திய சோதனை" என்று அடிகள் தம் சரித்திரத்துக்குப் பெயர் கொடுத்தாலும், நாம் அதற்குச் "சத்தியத்தின் வெற்றி" என்று திருநாமம் சூட்டிப் போற்றலாம்.

இதுகாறும் உலகில் பல பாகங்களிலே அவ்வக் காலத்து வாழ்ந்த பெரியோர்களில் காந்தியடிகளைப் போலத் தம் காலத்திலேயே உலகெங்கும் பரவிய புகழுடையார் அரியரென்றுதான் சொல்லவேண்டும். இன்று கொள்கை வேறுபாடுகளால் காந்தியடிகளைத் தூற்றும் பகைவர்களும் அவருடைய தியாக உணர்ச்சியையும், உண்மைத் தன்மையையும் போற்றுகிறார்கள். வாய் திறந்து போற்றாவிட்டாலும் அவர்கள் உள்ளத்தில் அடிகளின் மதிப்பு இருக்கத்தான் இருக்கிறது.

உள்ளமறிய உண்மை நெறியில் வாழும் ஒருவர், உலகத்தார் உள்ளத்தில் வாழ்வார் என்பது ஒரு பெரிய உண்மை. இந்த உண்மையை வள்ளுவர் சொல்லியிருக்கிறார்.

> **" உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்**
> **உள்ளத்துள் எல்லாம் உளன்."**

காந்தியடிகள் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளராக இருப்பதற்கே காரணம், அவர் உள்ளத்தால் பொய்யாது ஒழுகுவதுதான்; ஒழுகுவது என்பது திரிகரணங்களையும் ஈடுபடுத்துவது. இந்தக் குறளுக்கு வியாக்கியானம் காந்தியடிகளின் வாழ்க்கை என்று இப்போது சொல்லிவிடலாமே.

காந்தியடிகள் அஹிம்சையையும், உண்மையையும் இரு வழிகளாக, இரண்டு மூச்சு நாடிகளாகக் கொண்டு வாழ்பவர்; நன்கு வாழ விரும்புவோர், தனி மனிதராயினும், தேசத்தராயினும், இவற்றை உயிர்நிலையாகக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்துபவர். மற்ற இயல்புகளெல்லாம் இவற்றுக்கு இனமாக வருபவைகளே. அஹிம்சையும் உண்மையும் நோக்கமாக மனித சமுதாயமும் வாழுமானால் போரில்லை, பொறாமையில்லை, வறுமையில்லை, துன்பமில்லை. அவ்விரண்டினின்றும் வழுவாமல் வாழும் உலகத்தைத் தேடிக்கொண்டு இன்பநிலை தானே வந்து எய்தும்.

அஹிம்சை, உண்மை—இந்த இரண்டையும் மற்ற எல்லாப் பண்புகளிலும் சிறந்தனவாக எடுத்துச் சொல்லும் காந்தியடிகள் உள்ளம், வள்ளுவர் உள்ளத்தில் இக்காலத்து உருவம். திருவள்ளுவரும் இந்த இரண்டு பண்புகளையே யாவற்றினும்

சிறந்தனவாக எடுத்துச் சொல்கின்றார். இது பெரிய வியப்பாகத் தோன்றுகிறதல்லவா ?

" நீங்கள் நூற்றுக்கணக்கான நீதிகளை அடுக்கிக்கொண்டே போகிறீர்கள். அவ்வளவையும் கடைப்பிடிக்க எனக்கு ஆற்றல் இல்லை, ஏதேனும் ஒன்று, இரண்டு எடுத்துச் சொல்லி, ' இப்படி நட ' என்று திட்டமாகச் சொல்லிவிடுங்கள் " என்று ஒருவர் திருவள்ளுவரைக் கேட்டால், அவர் என்ன சொல்வார் ? இந்த இரண்டையுந்தான் சொல்கிறார் :—

" ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று."

" ஒன்றுதான் நான் கடைப்பிடிக்க முடியும் என்றால், அதற்கு ஏற்ற நல்ல பண்பு அஹிம்சை ; இன்னும் ஒன்று மேற்கொள்வேன் என்றால், உண்மையைக் கடைப்பிடிக்கலாம் " என்பது வள்ளுவர் கருத்து. அன்று வள்ளுவர் மொழிந்த உண்மையே இன்று மகாத்மாவின் மணிவாசகமாக மலர்கிறதென்று கொள்வதில் என்ன பிழை ?

காந்தியடிகள் கண்டுபிடித்துத் தந்த ஆயுதம் சத்தியாக்கிரகம். " சத்தியாக்கிரகத்தின் ஆசிரியன் நான் " என்று அடிக்கடி அடிகள் சொல்வதுண்டு. அஹிம்சை முறையில், கொடிய நெஞ்சினர் உள்ளத்தை வசப்படுத்த ஆற்றும் போர் சத்தியாக்கிரகம் ; உண்மையின்பால் உள்ள உறுதியால் நடைபெறுவது இந்தப் போராட்டம்.

சத்தியாக்கிரகத்தின் சிருஷ்டிகர்த்தா காந்தியடிகளானாலும், அதன் வித்து இந்த நாட்டுக்குரிய பரம்பரைச் சொத்து. எதிரியைப் படைகொண்டு பொராமல் பொறுமையாலும் தவத்தினாலும் வெல்லும் செய்தியைப் புராணவரலாறுகளிலே காணலாம். ஆனால் அந்தப் போராட்டத்தைத் தவம் புரிபவர்களும், முனிவர்களும் நிகழ்த்தியதாகப் படிக்கிறோம். காந்தியடிகளோ, தவமும், தியாகமும் துறவிகளுக்கும், வனவாசிகளுக்கும் மாத்திரம் விதித்தன வல்ல ; பிரம்மசரியம் சந்நியாசிகளுக்கு மாத்திரம் ஏற்பட்டதன்று ; உண்ணாமை முனிவருக்கு மாத்திரம் உரியதன்று ; அவை இல்வாழ்வாரும் மேற்கொள்வதற்கு உரியனவே, என்று உப

தேசிக்கிறார். அவர் ஆணையின் வழி ஒழுகும் சத்தியாக்கிரகத் தொண்டரில் பல தியாகிகள், மனைவியோடு வாழ்ந்து பிரம்மசரிய விரதம் காப்பவர்; விருந்துண்ணும் வாய்ப்பிருந்தும் உண்ணா விரதம் கொள்பவர்கள்.

தவத்தின் இலக்கணம் எதுவோ அதுதான் சத்தியாக்கிரகத்தின் இலக்கணம். துறவறத்தாருக்கே உரியதென்று தனியுரிமை முத்திரை பூண்டிருந்தது, இன்று காந்தியடிகளின் உபதேசத்தால் வாழ்க்கைப் போராட்டத்திற்கும் பயன்படுவதாக நிற்கும்பொழுது, 'சத்தியாக்கிரகம்' என்ற புதுப்பெயரைப் புனைந்தது.

சத்தியாக்கிரகம், உண்மையும் அஹிம்சையும் இணைந்து நிற்பதே. உண்மையைக் குறித்து உறுதியாக நின்று அஹிம்சை நெறியில் போராடுவது சத்தியாக்கிரகம். பகைவரால் ஹிம்சைக்கு உள்ளானாலும், அதனை ஏற்றுக்கொண்டு அவர்களுக்கு எள்ளளவும் ஹிம்சை புரியாமல் போராடுவது சத்தியாக்கிரகம். இதனைக் காந்தியடிகள் தென் ஆப்ரிக்கா முதலிய இடங்களில் நிகழ்த்திய சத்தியப் போராலும், அடிகளுடைய நல்லுரையாலும் உணர்ந்து கொள்ளலாம்.

திருவள்ளுவர், தவத்தின் இலக்கணத்தைச் சொல்லும் குறள் ஒன்று உண்டு. அதனையே சத்தியாக்கிரகத்தின் இலக்கணமாகவும் கொண்டுவிடலாம்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு."

என்பது அந்தக் குறள். "தனக்கு வரும் துன்பங்களைப் பொறுமையோடு ஏற்றுக் கொள்வதும், எந்தப் பிராணிக்கும் அக்காரணத்தாலோ வேறு காரணத்தாலோ துன்பத்தை உண்டாக்காமல் இருப்பதுமாகிய அத்தகைய பண்பே தவத்துக்கு உருவம்" என்பது பொருள்.

"துன்பத்தை ஏற்றுக்கொள்; ஆனால் நீ ஒருவரையும் துன்புறுத்தாதே" என்பதற்கும், "தடியடியை முகமலர்ச்சியோடு தாங்கிக்கொள்; ஆனால் அதற்கெதிரே உன் விரலைக்கூட அசைக்காதே" என்பதற்கும் வார்த்தைகளில் வேறுபாடு

இருக்கலாம் ; கருத்து ஒன்றுதான். முன்னதற்குப் பெயர் தவம் ; பின்னதற்குப் பெயர் சத்தியாக்கிரகம். அதைச் சொன்னவர் வள்ளுவர் ; இதைச் சொன்னவர் காந்தியடிகள்.

---

## 5. விவேகானந்தர் கடிதம்

**[அறிவியல் கட்டுரைகள்]**

பி. இராமநாதன், எம். ஏ.

யோகஹாமா,
ஜூலை, 10, 1893.

அன்புள்ள ஐயா,

எனது நீண்ட பிரயாணத்தில் அடிக்கடி உங்கட்குக் கடிதம் எழுதாமல் இருந்ததைப்பற்றி மன்னிக்கும்படி வேண்டுகின்றேன். ஒவ்வொருநாளும் ஓய்வில்லை ; சிறப்பாக மூட்டை முடிச்சுகளைப் பற்றிக் கவலைப்படாத—எடுத்தறியாத என்னைப் போன்றவர்க்கு இப்பிரயாணத்தில் அவற்றைப் பாதுகாப்பதே பெரிய தொல்லையாக இருக்கிறது. ஒரு குடும்பி என்ற முறையில் இருக்கவேண்டுபவனாகிறேன். இங்ஙனம் இருத்தல் எனது நேரத்தைக் கொள்ளை கொள்ளுகிறது. இஃது உண்மையில் எனக்குத் தொல்லையாகத்தான் இருக்கிறது.

நாங்கள் பம்பாயிலிருந்து புறப்பட்டுக் கொழும்புத் துறைமுகத்தை அடைந்தோம். எங்களை ஏற்றிச் சென்ற கப்பல் அத்துறைமுகத்தில் ஒருநாள் முழுவதும் தங்கி இருந்தது. நாங்கள், நகரத்தைக் காண விழைந்து கப்பலை விட்டு இறங்கினோம் ; நகரத்தின் பல தெருக்கள் வழியே நடந்தோம். நாங்கள் பார்த்தவற்றுள் இப்பொழுது நினைவிற்கு வருவது அழகிய பௌத்த விஹாரம் ஒன்றுதான். அங்கு நிர்வாண (முத்தி) நிலையை அடையத்தகும் பரிபக்குவ நிலையில் புத்தபகவான் உருவச்சிலை அமைக்கப் பட்டிருந்தது. அது மிகவும் அழகிய வேலைப்பாடமைந்த சிலையாகும்.

நாங்கள் அடுத்தபடித் தங்கிய துறைமுகம் பினங்கு என்பது. அது மலேயா தீபகற்பத்திலிருந்து பிரிந்து கடலில் நீண்டிருக்கும் நிலப்பகுதியாகும். அங்குள்ள மக்கள் மலேயா நாட்டு முஸ்லீம்கள். நாங்கள் பினங்கிலிருந்து சிங்கப்பூருக்குச் செல்லும்பொழுது 'சுமத்ரா' தீவின் பகுதிகள் சில கண்ணெதிரே பட்டன. சுமத்ராவில் உள்ள மலை முகடுகள் எங்கள் பார்வையைத் தம்பால் இழுத்தன.

சிங்கப்பூர், மலேயாநாட்டுத் தலைநகரம் ஆகும். இங்கு, பல வகை அரிய செடி, கொடி, மரங்களைக் கொண்ட காட்சிச்சாலை ஒன்று இருக்கின்றது. 'பிரயாணிகள் கை' எனப்படும் விசிறி போன்ற இலைகளைக் கொண்ட செடிகள் ஏராளமாகக் காய்கின்றன; சென்னையில் மாமரங்கள் மிக்கிருத்தல்போல இங்கு "மங்குஸ்தான்" மிகுந்து காண்கின்றன. இங்குள்ள மாம்பழங்கள் ஒப்பற்றவை. இங்குள்ள மக்கள், சென்னை மாகாண மக்களைப்போல ஒரே அளவுள்ள உஷ்ணப்பிரதேசத்தில் இருப்பினும் அவ்வளவு கரியநிறம் உடையவர் அல்லர். சிங்கப்பூரில் அழகிய பொருட்காட்சிச்சாலை ஒன்று இருக்கின்றது.

அடுத்தது ஹாங்காங். இங்குள்ளவர் சீனர். இங்கு எல்லாக் கைத்தொழில்களையும் நடத்துபவர் சீனரே; வாணிகம் செய்பவரும் சீனரேயாவர். ஒரு கப்பல், துறைமுகத்தை அடையுமாயின் நூற்றுக்கணக்கான சிறிய, பெரிய படகுகள் வந்து கப்பலை வளைத்துக் கொள்கின்றன. அவை பிரயாணிகளை நகரத்திற்கு அழைத்துச் செல்லவே அவ்வாறு வந்து சூழ்கின்றன. ஒவ்வொரு படகிலும் படகோட்டி தன் குடும்பத்துடன் வாழ்கிறான். அவன் குடும்பத்துக்கெனப் படகில் தனி இடம் உண்டு. படகில் இரண்டு சுக்கான்கள் உண்டு. ஒன்றைக் கையாலும், மற்றொன்றைக் காலாலும் அசைத்துப் படகைச் செலுத்த வேண்டும். இவ்வேலையைப் பெரும்பாலும் படகோட்டியின் மனைவியே செய்வது வழக்கம். அவள் முதுகில் குழந்தை ஒன்று துணியால் கட்டப்பட்டிருக்கும். சீனத்தாய் எந்தத் தொழிலைச் செய்யும்பொழுதும் அக்குழந்தை அவ்வாறே முதுகில் கட்டப்பட்டு அமைதியாக இருத்தல் வியப்பைத் தருவதாகும். ஹாங்காங் துறைமுகத்திற்குள் படகுகளும், நீராவிப் படகுகளும், கூட்டம் கூட்டமாக வருதலும், போதலும் காணத் தக்க ஒரு

காட்சியாகும். தாயின் முதுகில் கட்டப்பட்டுள்ள பிள்ளைக்கு அரிசி அடை கொடுத்துவிட்டாற்போதும்; அஃது அமைதியாக அதனை அரைத்துக் கொண்டு இருக்கும். பிற காட்சிகளைப் பார்த்துக் களித்தலில் அதற்கு விருப்பம் இல்லை. இந்தியப் பிள்ளைகள் தளர்நடைப் பருவத்தில் தள்ளாடும்பொழுது, அதே வயதுடைய சீனப் பிள்ளைகள் அமைதியாக வேலை செய்யப் போதலைக் காணல் வருந்தத்தக்க காட்சியாகும். அச் சீனமகன் வாழ்க்கையின் தேவையை அவ்விளம்பருவத்திலேயே கற்றுக் கொண்டான் போலும்; சீனரது கொடிய வறுமையே இதற்குக் காரணம். ஏறத்தாழ இந்தியரும் இங்ஙனமே வறுமை வாழ்வு வாழ்கின்றனர். அவ்வறிய நிலை, அவர்களை வறுமையைத் தவிர வேறு எதனையுமே எண்ணாதபடிச் செய்கின்றது.

ஹாங்காங் மிக்க அழகு பொருந்திய நகரம். அது மலை மீதும், மலைச் சரிவுகளிலும் அமைந்துள்ளது. மலை உச்சிக்குக் கீழிருந்து போய்வர மின்சார வண்டி வசதியுண்டு. அவ்வண்டி, கம்பியாலும் நீராவியின் சக்தியாலும் நடமாடுகின்றது.

நாங்கள் மூன்றுநாள் ஹாங்காங்கில் தங்கி இருந்தோம். பின்னர், அங்கிருந்து எண்பது கல் தொலைவில் உள்ள காண்டன் நகரத்திற்கு ஆற்றுவழியே படகில் சென்றோம். அடடா! என்ன சுறுசுறுப்பான போக்கு வரவு! ஆற்றுநீர் மறைப்புண்டதோ என்று எண்ணத்தக்கவாறு எண்ணிறந்த படகுகள் போகின்றன; வருகின்றன; அவற்றுள் பல, சாமான்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஏற்றிச் செல்வனவாகும்; அவற்றுட் பல பெரியவையாகவும், பார்க்க அழகு பொருந்தியவையாகவும் இருக்கின்றன. சில படகுகளில் உள்ள வீடுகள் இரண்டு மூன்று அடுக்குகளை உடையன. சுற்றிலும் தாழ்வாரம் உடையன. இவ்வீடுகளை 'மிதக்கும் மாளிகைகள்' என்று சொல்லத் தடையுண்டோ?

சீன அரசாங்கத்தார் அந்நியர் இருத்தற்கென்று விடுத்துள்ள நிலப்பகுதியில் நாங்கள் சென்று தங்கினோம். ஆற்றின் இரண்டு கரைகளிலும் எங்களைச் சுற்றியுள்ள இடம் முழுவதும் பெரிய நகரமாகக் காணப்படுகிறது. மக்களுடைய ஓசையும் சாமான்

களைத் தள்ளும் ஓசையும், படகுகளைச் செலுத்தும் ஓசையும் செவிகளைத் துளைக்கும். அக்காண்டன் நகரம் சுறுசுறுப்புக்கு இடமானது; நெருக்கமுள்ள மக்கள் தொகையைக் கொண்டது. எனினும், அது வெறுக்கத்தக்க நகரமாகும். என்னே? அஃது இந்திய நகரம்போல அசுத்தங்கள் நிறைந்த நகரமாகுமா? எனின், இல்லை. அசுத்தமான பொருள் எதனையும் வீணாகப் போகுமாறு சீனர் விடுவதில்லை. ஆனால் சீனன், ஒருபோதும் குளிப்பதில்லை என்று சபதம் செய்துளான் போலும்! ஒவ்வொரு வீட்டின் அடிப்பகுதி கடையாகக் காண்கிறது; மேற் பகுதியிற்றான் மக்கள் குடி இருக்கின்றனர். தெருக்கள் மிகவும் குறுகலானவை. ஒரு மனிதன் கை வீசிக்கொண்டு நடந்தால் அவன் கைகள், இரண்டு பக்கங்களிலுமுள்ள கடைகளைத் தொட்டுத்தான் தீரும். தெருக்களில் பத்தடிக்கு ஒரு இறைச்சிக் கடையைக் காணலாம். நாய் இறைச்சியையும், பூனை இறைச்சியையும் விற்கும் கடைகளும் இருக்கின்றன. மிகவும் எளிய சீனரே நாய் அல்லது பூனை இறைச்சியை உண்பர்.

சீனப் பெருமாட்டிகளை வெளியிற் காணல் இயலாது. வட இந்தியாவில் இந்துப் பெண்களுக்குள்ள அந்தப்புர வாழ்க்கை இப் பெருமாட்டிகட்கும் உண்டு. தொழிலாளர் பெண்களையே வெளியிற் காண இயலும். அப்பெண்களுடைய பாதங்கள் உங்கள் மிகச் சிறிய குழந்தையின் பாதத்தைவிடச் சிறியதாகவுள்ளது வியப்பைத் தருகிறது. அப்பெண்கள் மெய்யாகவே நடக்கிறார்கள் என்று சொல்வதைவிட நொண்டி நடக்கிறார்கள் என்று கூறுதல் பொருத்தமானது.

நான் சீனர் கோயில்கள் சிலவற்றைக் காணச் சென்றேன். அவற்றுள் மிகப் பெரியது சீனநாட்டு அரசர்க்கு அர்ப்பணம் செய்யப்பட்டது ஆகும். அங்குப் புத்தர் பெருமானுடைய சிலை நடுநாயகமாக வைக்கப்பட்டுள்ளது. அதன் அடியில் முன் சொன்ன சீன முதல் அரசர் உருவச்சிலை அமைந்துள்ளது. அவற்றைச் சுற்றிலும் பௌத்த சமயத்தை முதன் முதல் தழுவிய ஐந்நூறு பௌத்த சீடர்களின் உருவச்சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. அவை அனைத்தும் மரத்தால் இயன்றவை; அழகிய வேலைப்பாடு கொண்டவை.

நாங்கள் காண்டன் நகரிலிருந்து மீண்டும் ஹாங்காங் சென்றோம். அங்கிருந்து ஜப்பானை அடைந்தோம். நாங்கள் முதன் முதல் சென்று சேர்ந்த துறைமுக நகரம் நாகசகி என்பது; நாங்கள் கப்பலைவிட்டு இறங்கி நகருக்குட் சென்றோம். என்ன நேர்மாறான காட்சி! ஜப்பானியர் மிகவும் தூய்மையாக இருக்கின்றார்கள். ஒவ்வோர் இடமும் சுத்தமாகவும், ஒழுங்காகவும் காணப்படுகிறது. எல்லாத் தெருக்களும் இயன்றவரை அகலமாகவும், நேராகவும், பதப்படுத்தப்பட்டனவாகவும் இருக்கின்றன. அவர்களுடைய வீடுகள் கூண்டுகளைப்போல் காண்கின்றன. ஒவ்வொரு நகரத்தின் அல்லது கிராமத்தின் பின் பச்சைக் கம்பளம் போர்த்தாற்போன்ற பசியமரம், செடி, கொடிகளைக் கொண்ட அழகிய குன்றுகள் நகரத்தை அல்லது கிராமத்தை அணிசெய்கின்றன. ஜப்பான் அழகுக்கு இருப்பிடம் எனலாம். ஜப்பானியர் குட்டை உருவினர்; அழகியமேனி யுடையவர்; வியப்பூட்டும் தோற்றம் கொண்டவர். அவர்களுடைய நடை, உடை, பாவனைகள் நம் கவனத்தை ஈர்ப்பன. பெரும்பாலும் ஒவ்வொரு வீட்டின் பின் புறமும் அழகிய தோட்டம் இருக்கின்றது. அதனில் செய்குளம், புல்மேடைகள், பூச்செடிகள், மருந்துச் செடிகள் முதலியன காண்கின்றன.

நாங்கள் நாகசகி என்னும் நகரத்திலிருந்து கோபே என்னும் துறைமுகத்தை அடைந்தோம். நான் ஜப்பானில் உள்ள உள்நாட்டுக் காட்சியைக் காண விழைந்து கப்பல் பிரயாணத்தை இத்துடன் முடித்துக் கொண்டேன்; கோபேயிலிருந்து பல ஊர்களைப் பார்த்துக்கொண்டே யோக்கஹாமா சேரலாம் என்று முடிவு செய்தேன்.

நான் உள்நாட்டுப் பிரயாணத்தில் மூன்று பெரிய நகரங்களைக் கண்டேன். அவை, ஓசகா, கியொடா, டோக்கியோ என்பன. ஓசகா என்பது, பொருள்களை உற்பத்தி செய்யும் பெரிய தொழிற்சாலை நகரமாகும். கியொடா என்பது, ஜப்பானின் பழைய தலை நகரம். டோக்கியோ என்பது, இப்பொழுதுள்ள கோநகரமாகும். இந்நகரம் கல்கத்தாவைப்போல இருமடங்கு பெரியது; இருமடங்கு ஜனத்தொகையும் கொண்டதாகும். இங்கு அனுமதிச் சீட்டு இன்றி எந்த வெளி நாட்டா

னும் உள்நாட்டுப் பிரயாணம் செய்ய விடப்படுவதில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

ஜப்பானியர் இன்றைய தேவைகளை நன்கு உணர்ந்தவராகக் காண்கின்றனர். அவர்களிடம் துப்பாக்கித் தாங்கி நன்கு பயிற்சி பெற்ற படைவீரர் இருக்கின்றனர். அத் துப்பாக்கிகளும், அந்நாட்டுப் படைத் தலைவர் ஒருவர் கண்டுபிடித்தனவேயாகும். அவர்கள் தொடர்ச்சியாகத் தங்கள் கப்பற் படையைப் பெருக்கிப் பலப்படுத்தி வருகின்றனர். ஜப்பான் எஞ்சினியர் ஒருவர் ஒருமைல் நீளமுள்ள புழையை மலையிற் குடைந்திருப்பதை நான் கண்டேன்.

தீப்பெட்டி செய்யும் தொழிற்சாலைகள் பார்க்கத்தக்கவை. ஜப்பானியர் தமக்கு வேண்டும் பொருள்கள் அனைத்தையும் தம் தாய் நாட்டிலே செய்ய விழைகின்றனர். ஜப்பானியக் கப்பல்கள் ஓய்வின்றி ஜப்பானுக்கும், சீனாவுக்கும் பிரயாணம் செய்கின்றன.

நான் பல கோயில்களைச் சென்று பார்வையிட்டேன். ஒவ்வொரு கோவிலிலும் பழைய வங்கமொழி எழுத்துக்களில் வடமொழி மந்திரங்கள் சில எழுதப்பட்டுள்ளன. குருமாருள் சிலரே வடமொழி படித்துள்ளார். ஆயினும், அவர்கள் மிக்க அறிவுடையவர்கள் ; இக்காலத்திற்குத் தேவையானவற்றை நன்கறிந்துள்ளனர். நான் ஜப்பானியரைப்பற்றி நினைப்பன யாவும் இச்சிறிய கடிதத்தில் எழுத முடியவில்லை. ஆண்டு தோறும் நம் இந்திய இளைஞர் சிலரேனும் ஜப்பானுக்கு வந்து போகவேண்டும் என்பது எனது அவா. உயர்வுக்கும், நல்லவற்றிற்கும் இந்தியா தாயகமானது என்பது ஜப்பானியர் எண்ணமாக இருக்கிறது.

ஆனால், நீங்களோ—இந்தியராகவுள்ள நீங்களோ—வாழ் நாள் முழுவதும் பயனற்றவற்றைப் பேசும் வீணர்களாக இருக்கிறீர்கள். நீங்கள் என்ன செய்கிறீர்கள் ? ஜப்பானுக்கு வாருங்கள் ; இம் மக்களைப் பாருங்கள் ; வீடு திரும்பி வெட்கித் தலை குனியுங்கள். நீங்கள் வெளிநாடு சென்றால் உங்கள் ஜாதி கெட்டுவிடும் என்று எண்ணும் அறிவீனர்களாக இருக்கிறீர்கள். நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக வளர்க்கப்பட்ட

மூட நம்பிக்கைகளை மேன்மேலும் வளர்த்துக் கொண்டும், தீண்டாமையைப்பற்றி நூற்றுக்கணக்கான வருடங்களாக வாதம் செய்து கொண்டும் நாட்களை வீணே கழிக்கின்றீர்கள் ; பல நூற்றாண்டுகளாக வளர்க்கப்பட்டுவந்த சமூகக் கொடுமையால் மனித இனத்தை உங்கட்கு அப்பாற்பட்டதாகச் செய்து விட்டீர்கள். என்ன செய்கிறீர்கள்? இப்பொழுது என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள்? கையில் புத்தகங்களுடன் கடற்கரையில் உலாவிக்கொண்டு மேனாட்டு ஆசிரியன்மார் அறிந்தோ, அறியாமலோ எழுதியுள்ள சில செய்திகளை மனப்பாடம் செய்துகொண்டு முப்பது ரூபாய் கூலிவரும் குமஸ்தா வேலைக்காக அல்லது சட்ட நிபுணர் பதவிக்காக நீங்கள் படும் பாடு பரிதபிக்கத் தக்கது.

இதுதானா இந்திய இளைஞரது வாழ்க்கையில் உயர்ந்த நோக்கம்? இங்ஙனம் படித்த மாணவனுடைய கால்களைச் சுற்றிக்கொண்டு அவனுடைய பிள்ளைகள் பசிப்பிணியால் இடும் இரைச்சலோ கொடிது! கொடிது!! உங்களுடைய புத்தகங்களையும், பட்டவுடைகளையும், பட்டத் தாள்களையும் பிறவற்றையும் மூழ்கடிக்கக் கடலில் நீர் இல்லையா? இங்கு வாருங்கள் ; மனிதராக இருங்கள் ; முன்னேற்றத்திற்கு எப்பொழுதும் தடையாகவுள்ள புரோகிதர்களைப் புறக்கணியுங்கள். அவர்கள் உள்ளத்தை மாற்ற முடியாது : அவர்கள் உள்ளம் ஒருபோதும் விரியாது. அவர்கள் சென்ற பல நூற்றாண்டுகளாக இருந்துவரும் மூட நம்பிக்கை, கொடுமை இவற்றினின்றும் தோன்றியவர்கள். அதனால், முதலில் புரோகிதத்தையே சமூகத்திலிருந்து களைந்து எறியுங்கள். வாருங்கள் ; மனிதராகுங்கள் ; உங்கள் குறுகிய வளைகளிலிருந்து வெளியே வாருங்கள் ; நெடுந் தொலைவு சுற்றிப் பாருங்கள் ; பிற நாடுகள் எவ்வாறு முன்னேறிச் செல்கின்றன என்பதைக் கவனியுங்கள். நீங்கள் உங்களைப்போல் உள்ள மனிதரை நேசிக்கின்றீர்களா? உங்கள் நாட்டை நேசிக்கின்றீர்களா? நேசிப்பதாயின் வாருங்கள் ; நாம் உயரிய நோக்கங்கட்காக உழைப்போம். பின்னால் திரும்பிப் பார்க்கவேண்டாம். உங்கள் உயிர்க்கு இனியரானவர் அழுதாலும் பின் நோக்கம் வேண்டாம். முன் நோக்கமே வேண்டற்பாலது.

இந்தியா, கோடிக் கணக்காகவுள்ள தன் மக்களில், குறைந்து ஆயிரம் பேருடைய தியாகத்தை விரும்புகிறது. அந்த ஆயிரம் பேரும் மனிதத் தன்மையும், தியாகவுள்ளமும் உடையவராக இருத்தல் வேண்டும். எளியவர்மேல் இரக்கம், அவர்களது பசித்த வயிற்றுக்கு உணவு, அறியாமை இருளில் ஆழ்ந்துள்ள மக்கட்கு அறிவு, உங்கள் முன்னோரால் விலங்கு நிலைக்குக் கொணரப்பட்டுத் தாழ் நிலையில் உள்ள ஏழை மக்களை மனிதராகச் செய்யும் முயற்சி, இவை அனைத்தும் இன்று வேண்டற்பாலன. இவற்றைச் செய்யத் தன்னலமற்ற, நிரம்பிய அறிவு பெற்ற இளைஞர் எத்துணையரைச் சென்னை மாகாணம் வழங்குதல் கூடும்? அமைதி, ஆரவாரமின்மை, நிதானமான தொண்டு இவையே வேண்டற்பாலன. பத்திரிகைளில் பெயரை விளம்பரப்படுத்தும் ஆடம்பர வேலை வேண்டாம்.

உங்கள் அன்புள்ள,
விவேகானந்தன்.

---

## 6. ஐக்கிய நாட்டுச் சங்கம்

வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்.

**முன்னுரை :**

உலகில் மக்கள் சேர்ந்து வாழுமியல்புடையவர். பிரிந்து வாழ அறிவுடைய மக்கள் ஒருபொழுதும் விரும்பமாட்டார். ஒரு குடும்பம் சேர்ந்து வாழ்வதில் மிகவும் மதிப்புண்டு. அவ்வாறே ஒரு கிராமம் ஒருமிக்கச் சேர்ந்து வாழுமாயின் அக்கிராமமே பிறரால் நன்கு மதிக்கப்படும். ஒரு நாடு பிளவுபடாமல் ஒத்து வாழுமாயின் அந்த நாட்டில் வாழ்வார் செய்த நல்வினை என்றே கூறவேண்டும். உலகம் ஒன்று சேர்ந்து வாழ இறைவனுக்கே திருவுள்ளமிருந்தால்தான் நடைபெறும். இப்பொழுது சில ஆண்டுகளாக உலகம் அமைதியடைந்திருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் புதிய சங்கம் ஒன்றைப் பல

நாட்டுப் பிரதிநிதிகள் ஒன்றுகூடி ஏற்படுத்தினர். இதற்கு ஐக்கிய நாட்டுச் சங்கம் என்று பெயர்.

**(1) இச்சங்கத்தின் அமைப்பு :**

இச்சங்கம், 1945-ல் இரண்டாம் உலக மகாயுத்தம் முடிவடைந்தவுடன் ஜெர்மனியை எதிர்த்துப் போர் செய்த கட்சியாகிய நேசக்கட்சி நாடுகளின் பிரதிநிதிகளால் ஸான்பிரான்ஸிஸ்கோ நகரில் கூட்டப்பட்டது. இவர்கள் கடந்த இரண்டாம் போருக்குப்பின் உலகத்தில் யுத்தம் ஏற்படாதிருக்க இந்தப்புதிய உலக அமைப்பை ஏற்படுத்தினார்கள். இந்த ஐக்கிய நாட்டுச் சங்கத்தில் அசெம்பிளி என்ற ஒரு மகாசபை உண்டு. இச்சபை அறுபது அங்கத்தினர்களாலாக்கப்பட்டது. இந்த ஐக்கிய நாட்டுச் சங்கத்தில் சேர்ந்த எல்லா நாடுகளின் பிரதிநிதிகளும் இந்தச் சபையில் வந்து கூடுவர்.

இந்தச் சபை, அரசியல், நாட்டு அமைதி, பொருளாதாரம், சமூக நிலை, கலை வளர்ச்சி, தபால் பிரயாணம் ஆகிய விஷயங்களில் ஆலோசனை கூறி ஆணையிடும். இதன் கிளையாகப் பாதுகாப்புச் சபை என்ற மற்றொரு சிறிய சபை உண்டு. இச் சபையில் அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா, சீனா ஆகிய ஐந்து நாடுகளின் பிரதிநிதிகளுக்கு நிலையான இடமுண்டு. வேறு ஆறு அங்கத்தினர்கள் இரண்டு வருடங்களுக் கொருமுறை பொது மகாசபையிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட நாடுகளில் இப்பொழுது இந்தியா ஒன்றாக விளங்குகின்றது. பாதுகாப்புக் குழுவில் இந்தியாவுக்கு இடம் கிடைத்திருப்பது, இந்தியர்க்கு ஒரு பெருமையாகும். பாதுகாப்புக் குழுவின் முதன்மையான நோக்கம் போர் வராமல் தடுப்பதேயாகும்.

இச் சங்கத்தின் அங்கத்தினர்கள் தங்களுக்கிடையில் உண்டாகும் போர்களைச் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ள வழி தேடவேண்டும். அவ்வாறு சமாதானமின்றி ஒரு நாடு போரிலிறங்கினால் அந்நாட்டின்மீது பாதுகாப்புக் குழுவினர் போர் தொடுக்க வேண்டும். சங்க அங்கத்தினர்கள் இப்பொழுது அவரவர் தம் ஆற்றலுக்கேற்பத் துணைபுரிதல் வேண்டும்.

இத்தகைய நடவடிக்கைகள் எடுக்கத் தொடங்கு முன் மேற் கண்ட ஐந்து வல்லரசுகள் உட்பட ஏழு அங்கத்தினர்களின் சம்மதம் பெற்றாலன்றி இவ்வித நடவடிக்கைகள் எடுக்கமுடியாது. இதன் இணைப்பில் சர்வதேச நீதிமன்றம் ஒன்று அமைக்கப் பட்டது. பாதுகாப்புக் குழுவினரே அம்மன்றத்தின் தீர்ப்பை நிறைவேற்றி வைக்கவேண்டும். தவிர, உலக மாந்தர்களின் பொருளாதார, சமூகச் சீர்திருத்த, பிற விஷயங்களை ஆராய்ச்சி செய்ய ஒரு சபை வேறாக ஏற்படுத்தப்பட்டது.

இவையேயன்றி, உணவு, உழவுகள் அமைப்பு, சர்வதேச பாங்கு, சர்வதேசத் தொழிலாளர் குழு, சர்வதேச நிதி, சர்வதேச அகதிகள் பாதுகாப்புக் குழு, கல்வி, சாத்திரம், கலை ஆராய்ச்சி யமைப்பு, உலக சுகாதார அமைப்பு, என்ற பலவித நிலையங்கள் உலக மக்களின் முன்னேற்றத்திற்காகவும், நன்மைக்காகவும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

## (2) உலக அமைதியும் ஒற்றுமையும் :—

உலகில் உள்ள ஒவ்வொரு நாட்டிலும் அமைதி நிலைத் திருக்கவேண்டும். ஒவ்வொரு நாடும் தன் உரிமைகளைக் கண்ணும் கருத்துமாகக் காத்துக் கொள்ளுதல் வேண்டும். அத்துடன் பிறநாடுகளில் உரிமைகளை நன்குமதித்து ஒழுகுதல் வேண்டும்.

ஒவ்வொரு இந்தியனும் தன் கடமையை நன்கு உணர வேண்டும். தன் நாடு பிறநாடுகளின் உரிமைகளை மதித்து நடக்கிறதா என்று கவனிக்கவேண்டும். பிறநாடுகள் தன் நாட்டை மதித்து நடக்கின்றனவா என்று பார்த்துக்கொள்ள வேண்டும். தன்னலமும் இனவேற்றுமையுமின்றி ஒவ்வொரு இந்தியனும், பிறநாட்டு மக்களும் நடந்து கொள்ள வேண்டும். இவ்வாறு வேறுபட்ட உள்ளமில்லாமல் வாழ்ந்தாலன்றி உலக சமாதானம் நிலைத்திருக்க முடியாது.

இப்பொழுது ஐக்கிய நாட்டுச் சங்கத்தில் ஐந்து மொழிகள் பேசப்பட்டு வருகின்றன. ஆங்கிலம், பிரெஞ்சு, ரஷ்யா, ஸ்பானிஷ், சைனீஸ் என்ற இவ்வைந்து மொழிகள் பேசப்படுகின்றன.

அரபி மொழியும் பேசப்படுகின்றது. இனிமேல் இத்தாலிமொழியும், ஜெர்மன் மொழியும் சேர்த்துக் கொள்ளப்படலாம். எந்த அங்கத்தினரும் ஏதாவது மேற்கண்ட மொழிகளில் பேச உரிமையுண்டு. திறமையுள்ள மொழி பெயர்ப்பாளர்கள் அதை மொழி பெயர்த்து மற்ற மொழிகளில் சொல்லுகிறார்கள். ஆங்கிலத்திலும், பிரெஞ்சிலும் மட்டுமே எல்லா எழுத்துப் பதிவுகளும் அச்சடிக்கப்படுகின்றன.

### (3) ஐக்கிய நாட்டுச் சங்கம் செய்துவரும் அமைதி வேலைகள் :—

பெரிய நாடுகளும், சிறிய நாடுகளும் தங்களுடைய குறைகளையும், கருத்துக்களையும் எல்லோர்க்கும் முன்னிலையில் தெரிவித்துக் கொள்ளலாம். அவ்வாறு தெரிவித்து நியாயம்பெற இடமுண்டு. உலகிலுள்ள பற்பல நாடுகளை ஒற்றுமைப்படுத்தி வறுமை, பசி, பிணி, அறியாமை, உரிமையின்மை, வாய்ப்பின்மை முதலியவற்றை நீக்கி இச்சங்கம் அமைதியை உண்டாக்கும். போரில் கொண்டு போய்விடும் பிற சமூக சூழல்களை நீக்கிச் சமூகச் சமாதானத்தை உயர்த்துவதும் இச்சங்கத்தின் வேலைகளாகும். அவசரமாகப் பிற நாடுகள் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளை நிறுத்தவும், ஒற்றுமைப்படுத்தவும் இச்சங்கம் பாடுபடுகின்றது.

(1) இந்தோனேசியாவில் டச்சுக்காரர்களுக்கும், அந்நாட்டு மக்களுக்கும் உள்ள சச்சரவைத் தீர்த்து வைத்தது.

(2) கொரியாவின் போரை நிறுத்த முயற்சி பலமாக எடுத்து வருகிறது.

(3) காஷ்மீரத்தின் பொருட்டுப் பாகிஸ்தானுக்கும், இந்தியாவுக்கும் பயங்கரமான போருண்டானபொழுது இச்சங்கம் பெரு முயற்சி எடுத்து அப்போரை நிறுத்தி முடிவான சமாதானத்தை எதிர்நோக்கி யிருக்கிறது.

(4) பாலஸ்தீனத்தில் போர் ஏற்பட்டபொழுது பொதுச் சபையும், பாதுகாப்புச் சபையும் மிகவும் பாடுபட்டு முப்பது ஆண்டுகளாக இருந்துவந்த மாறுபாட்டை ஒன்றுபடுத்தியுள்ளது.

(5) ஐக்கிய நாட்டுச் சங்கத்தின் உறுப்பினர்கள் எடுத்த முயற்சி, பெர்லினில் ஏற்பட்ட ஒற்றுமையின்மையைத் தடுத்து, ஒற்றுமைக்கு வராதவர்களையும் வரும்படிச் செய்துள்ளது.

**(4) இச்சங்கம் பொருளாதாரத் துறையில் செய்துள்ள செய்கைகள் :—**

இச்சங்கம் உலகம் முழுதும் உழவுத் தொழில் வளர்ச்சியை உண்டாக்கியுள்ளது. கிராமங்களில் பற்பல வகையான சீர் திருத்தங்களைச் செய்துள்ளது. விஞ்ஞான ஆராய்ச்சி, தொழில் ஆராய்ச்சி, பொருளாதார ஆராய்ச்சி ஆகிய இவைகள் எல்லாவற்றையும் உணவுப் பெருக்கம் சம்பந்தமாகவே இச்சங்கம் செய்து வருகின்றது ; எல்லா நாடுகளிலும் வாணிபங்களுக்காகத் தக்க ஏற்பாடுகளைச் செய்து வருகின்றது ; எல்லா நாடுகளுக்கும் பொதுவாக நிதி ஒன்று ஏற்படுத்திப் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஆவனவற்றைச் செய்துவருகின்றது.

**(5) இச்சங்கம் சமூகத் துறையில் செய்துள்ளவை :—**

இச்சங்கம் எல்லா நாடுகளிலும் தொழில் நிலையங்களை நிறுவித் தொழிலாளர்களின் நிலையை உயர்த்தப் பாடு படுகின்றது : வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கவும், வேலை செய்யும் நேரத்தை ஒழுங்குபடுத்தவும் ஏற்பாடுகளைச் செய்து வருகின்றது ; தொழிலாளர்க்குப் போதுமான சம்பளம் கொடுத்தல், பிணி, காயம் இவற்றிலிருந்து காப்பாற்றல், சிறுவர்களையும், பெண்களையும் பாதுகாத்தல் முதலியவற்றைச் செய்து வருகின்றது ; போக்குவரவு சாதனங்கள், தபால், தந்தி முதலியவற்றைச் சரிவர நடத்தும்படிச் செய்துள்ளது ; ஒரு நாட்டிலிருந்து மற்ற நாட்டிற்குப் போகும் விமான மார்க்கங்கள் அபாயமின்றியிருக்கக் கவனித்துக் கொள்கின்றது ; உலகமெங்கும் சுகாதாரம் நிலை பெற்றிருக்கச் செய்துவருகின்றது. இன்னும் இச்சங்கம், ஆயிரக் கணக்கான பசியால் வாடிய குழந்தைகளுக்குத் தக்க உணவு கொடுத்தும், பெருவாரி நோய்கள், காலரா, மலேரியா முதலிய நோய்கள் வராமல் தடுத்தும் வருகின்றது ; கோடிக்கணக்கான குழந்தைகளை க்ஷயரோகமா ? அல்லவா ? என்று பரிசோதித்து அப்பிணி வராமல் தடுக்கும் முறைகளைக் கையாளுகின்றது ;

பத்து லக்ஷம் அகதிகளுக்குப் புதிய வீடும், உணவும் கொடுத்து உதவுகின்றது ; கல்விப்பண்பாடுகளுக்குப் பெரிதும் உதவி புரிந்து வருகின்றது.

இச்சங்கம், தேர்ச்சிபெற்ற பதினன்கு பேர்களைப் பதினன்கு தேசங்களுக்கு ஆலோசனை கூற அனுப்பியுள்ளது ; நூற்றுக் கணக்கான மக்களுக்குச் சமூக நலனைப்பற்றி அயல்நாடு சென்று படிக்க அநுமதிச் சீட்டுக் கொடுத்து உதவிபுரிந்து வருகின்றது. கோடிக்கணக்கான மக்களை அடிமைப்படுத்தும் மயக்க (லாகிரி)ப் பொருள்களைக் கட்டுப்படுத்தி யிருக்கிறது. இங்குக் கூறிவந்த இவை சில உதாரணங்களாகும். இன்னும் பற்பல உதவிகளை இச்சங்கம் உலகிற்குச் செய்துள்ளது.

(6) இச்சங்கம் சுதந்திரமில்லா நாடுகளுக்குச் செய்துள்ளவை :—

சுதந்திரமில்லா நாட்டில் வாழும் மக்கள் தூய அடைக்கலப் பொருள் என்று இச்சங்கத்தின் அங்கத்தினர்கள், இந்நாடுகளைக் காப்பாற்றவேண்டிய முறையில் பொறுப்புக்களை ஏற்றுக்கொள்வதாக வாக்களித்திருக்கின்றனர். பத்துச் சுதந்திரமில்லா நாடுகள் இச்சங்கத்தின் பொறுப்பில் விடப்பட்டுள்ளது. அந்நாடுகள் துன்பம் அடையாமல் இச்சங்கம் விழிப்புடனிருந்து கவனித்து வருகின்றது.

முடிவுரை :—

இச்சங்கம் பற்பல நாடுகளை ஒன்றுசேர்த்து அவற்றின் பல விதப்பட்ட விண்ணப்பங்களை ஏற்று யாவரும் ஒப்புக்கொள்ளும் படி முடிவுகளைக் கூறிவருகின்றது. உலகம் முழுவதும் அமைதி யடையப் பாடுபடுவதுடன் சமூகப் பொருளாதாரத் துறைகளில் முன்னேறி மேனிலைக்கு வரும்படிச் செய்து வருகின்றது. உலகம் முழுவதும் துன்பப்படாமலிருக்க வழிதேடும் இச்சங்கத்தை நாம் மனமார வாழ்த்தவேண்டும்.

இச்சங்கத்தின் தினமாகிய அக்டோபர் மாதம் 24-ஆம் தேதியை நாம் ஒவ்வொருவரும், ஒவ்வொரு ஆண்டிலும் கொண்டாடவேண்டும். உலக அமைதி உண்டாக இச்சங்கம் காரணமாக உள்ளது என்பதை நாம் உள்ளத்தில் கொள்ள வேண்டும்.

---

## 7. படக்காட்சி

வித்துவான், பாலூர், து. கண்ணப்ப முதலியார்.

நாகரிகம் நாளுக்குநாள் விருத்தியாகிக்கொண்டு வரும் இவ்வுலகில் பல புதுமைகள் தோன்றிக்கொண்டே வருகின்றன. இப்புதுமைகளுக்குக் காரணமாக இருப்பது இயற்கை மின்சாரச் சக்தியே ஆகும். இதன் துணைகொண்டு எண்ணிப் பார்க்கவும் இயலாத புதுமைகளை மனிதன் செய்து முடிக்கின்றனன். இப்படிப் பல புதுமைகளைக் கண்டுபிடிப்பதற்கு மனிதனது ஆற்றலும், அறிவும் துணை செய்கின்றன.

இங்ஙனம் நவ நவமான முறைகளைக் கண்டுபிடித்து உலகுக்குதவும் பெருமை மேனாட்டறிஞர்க்கே உரியது. அவர்கள் எப்பொழுதும் இயற்கைப் பொருள்களின் துணையால் என்னென்ன செய்து முடிக்க இயலுமோ, அவற்றை எல்லாம் செய்து முடிக்க ஊக்கமும், உணர்ச்சியும் மிக்கவர்களாய் முன் நிற்கின்றார்கள். கீழ் நாட்டினரோ எனில், மேனாட்டறிஞர்களைப்போல் உலக விஷயத்தில் புக மனம் இன்றி ஆன்ம விசாரணையில் தலையிட்டவராய் வைதிக விஷயத்திலும், பரலோக ஈடுபாட்டிலும் தம் அறிவைச் செலுத்தி வருகின்றனர். மேனாட்டார் வைதீக முறையில் தம் அறிவை முற்றிலும் செலுத்தாது இலௌகீக நாட்டமே மிக்கவராகப் பல புதுமைகளைக் காண்பதிலேயே தம் அறிவைச் செலுத்தி வருகின்றனர். அப் புதுமைகள் பலவற்றுள் படக் காட்சியும் ஒன்று.

இப் படக்காட்சி, இயங்கும் படக்காட்சி, இயங்காப் படக்காட்சி, பேசும் படக்காட்சி, பேசாப் படக்காட்சி எனப் பல வகைப்படும். இயங்காத படக்காட்சி என்பது, உருவங்களைக் கண்ணாடியில் எழுதியோ, அன்றிப் புகைப்படம் பிடித்தோ, விளக்கின் துணைகொண்டு திரையில் காட்டப்படும் காட்சி. இப்படிப் படங்களைக் காட்டும் கருவியைத்தான் மாஜிக்கு லேண்டர்ன் என்று கூறுவர். இக் கருவி 17-ம் நூற்றாண்டில் கிர்ச்சர் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டது.

**இயங்கும் படக்காட்சி**: இயங்கும் படக்காட்சியைக் கண்டு பிடித்த பெருமைவாய்ந்த தாமஸ் ஆல்வா எடிசன் என்னும்

பெரியாரின் உதவி பெரிதும் பாராட்டத் தக்கது. மாஜிக்கு லேண்டர்ன் மூலமாகக் காட்டப்பட்ட படங்கள் அசைவற்று எழுத்தோவியமாகத் திகழ்ந்தன. இயங்கும் படக் காட்சியில் இயற்கை உருவம் உள்ளது உள்ளவாறே இயங்கும் பான்மையில் படம் எடுக்கப்பட்டுக் காண்பிக்கப்பட்டு வருகின்றது.

**பேசும் படக்காட்சி:** இது பேசாப் படக்காட்சியின் சம்பந்தமும் உடையது. இதற்கு இயக்க விளக்கப் படங்காட்டும் கருவியும், ஒலிப்பதிவுக் கருவியும் வேண்டும். இவ்விரண்டின் துணைக்கொண்டே பேசும் படக்காட்சிகள் தோன்றியுள்ளன. முதல் முதலில் இயங்கும்படம் காட்டப்பட்டபோது இடையில் பாடல்களோ பேச்சோ நேரிட்டால், அவற்றிற் கேற்றவாறு பாடும் கருவியை இணைத்துப்பாடியும்பேசியும் காட்டிவந்தனர். இதனால் இயங்கும்படக் காட்சியின் வேகமும், பாடும் கருவியின் வேகமும் ஒத்து வாராததினால் பல அசௌகரியங்கள் நேர்ந்தமையின், இரண்டும் ஒரே சந்தர்ப்பத்தில் ஒத்து நடக்கவேண்டுமென்று ஒலிப்படக் கருவி முறையைக் கண்டுபிடித்து, வெற்றி பெற்று அம்முறைப்படியே இப்பொழுது பேசும் படங்கள் எல்லாம் தயாரிக்கப்பட்டு வருகின்றன.

இங்ஙனம் மின்சாரத் துணைகொண்டு எத்தகைய படங்களையும் எடுத்துவிடலாம். எரிமலை, கடல், நீர்வீழ்ச்சி போன்ற இயற்கைக் காட்சிகளையும், சரித்திர சம்பந்தமான கதைகளையும் பெரியோர்களின் வரலாறுகளையும் நடிகர்களின் துணைகொண்டு படமாகத் தயாரித்துவிடலாம். ஒரு படம் தயாரிக்கப்பட வேண்டுமானால், அதற்கு ஏராளமான பொருள் வேண்டும். குதிரைப் பந்தயம், கிரிக்கட்டுப் பந்தயம், போர், அரசர் முடி சூட்டு விழா முதலியவற்றைப் படம் பிடிக்க வேண்டுமானால், அவ்வச் சம்பவங்கள் நடக்கும் இடங்களுக்குச் சென்று பிடிக்க வேண்டும். சரித்திர சம்பந்தமான நாடகப் படம் பிடிக்க வேண்டின், நடிகர்களும், கதைப் பகுதியும், கதைக்கேற்ற ஆடை அணிகளும், இயற்கைக் காட்சிகளும் தயாரிக்கப்படவேண்டும். நடிகர்கள் ஒன்றுசேர்ந்து நடிப்பதற்கு ஒரு பெரிய தனியிடம் வேண்டும். அத்தனி இடம் சாதாரண நாடகக் கொட்டகையைப் போன்றிராமல், சாஸ்திர முறைப்படிக் கட்டப்படவேண்டும்.

பேசும்படம் பிடிக்கப்பட வேண்டுமானல், நடிகர் நடிக்கு மிடத்தில் வெளிச் சத்தம் உள்ளே வரவொட்டாதபடிச் செய்துகொள்ள வேண்டும். ஏனெனில், சிறு சத்தம் வெளியி லிருந்து கேட்கப்படுமானலும், அவ்வொலியும் அப்படத்தில் பதிந்து, இடையிடையே அநாவசியமான சத்தங்கள் படம் காண்பிக்கப்படும்போது கேட்கும். ஆகவே, நடிகர்களும் படம் எடுக்கும் இடத்தில் இருக்கும்போது தும்முதல், இருமுதல், கனைத்தல் முதலிய சத்தங்களைச் செய்யாமல் இருக்கவேண்டும். அப்படிச் சத்தம் செய்யின் அச்சத்தமும் அப்படத்தில் பதிந்து விடும்.

இந்த முறைகளை எல்லாம் கவனித்துப் படம் பிடித்த பிறகு அவை தொடர்ச்சி கெடாமல் இணைக்கப்பட்டு, 'பிலிம்' என்னும் பெயர் பெறும். ஒரு பிலிம் எடுக்கப்பட்டால் அதினின்று பல பிரதிகளை எடுத்துக் கொள்ளலாம். இவ்வநுகூலம் இருப்பத னலேதான் ஒரே கதை பல இடங்களில் ஒரே சந்தர்ப்பத்தில் காண்பிக்கப்படுகிறது.

இங்ஙனம் பிலிமாக எடுக்கப்பட்ட படம் புரொஜெக்டர் என்னும் கருவியின் மூலம் மிகுதியும் வெளிச்சமுடைய மின்சார விளக்கின் உதவியால் வெண் திரையில் காண்பிக்கப்படுகிறது. அமெரிக்காவில் மேற்சொன்ன முறைகளையெல்லாம் அநுசரித்து அதிகமாகப் படங்கள் பிடிக்கப்படுகின்றன. அம் முறைகளை நன்கு, அறிந்து நம் இந்தியாவிலும் கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய இடங்களில் படம் பிடிக்கும் நிலையங்கள் அமைத்துப் பல பிலிம்களைத் தயாரிக்கின்றனர்.

படக்காட்சிகளைப் பார்ப்பதனல் பல நன்மைகள் உண்டா கின்றன. காண முடியாத பல இடங்களை நேரில் காண்பது போலக் காண்கிறோம். இலண்டன் நகரில் ஓர் அபூர்வ சம்பவம் நிகழ்ந்தால் அதனை நேரில் கண்டுகளிக்கும் பாக்கியம் தனவந்தர் களுக்கே வாய்க்கும். ஆனல், ஏழை எளியவர்களும் அந்தச் சம்பவங்களை நேரில் காண்பதுபோலப் படத்தில் காணலாம். இப் படக்காட்சி, கல்வி அபிவிருத்தி செய்வதற்கும் பல வழிகளிலும் பயன்படுகிறது.

மாணவர்கள் தாங்கள் படிக்கும் பூகோள பாடம், சரித்திர பாடம் முதலிய பாட சம்பந்தமாக இயற்கைக் காட்சிகளையும், அழகிய கட்டடங்களையும் படத்தில் கண்டு களிக்கலாம். முன்னே நடந்த வாழ்க்கை வரலாறுகளும் படமாகப் பிடிக்கப்பட்டுக் காண்பிக்கப் படுவதனால் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டியவைகளையும் படிக்காதவர்களும் படக்காட்சியின் மூலம் நன்கு அறிந்து கொள்வார்கள். தற்காலத்தில் மூலை முடுக்குகளில் எல்லாம் படம் பிடித்துக் காண்பிக்கப்பட்டு வருவதால் ஆண்களும், பெண்களும் எத்தனையோ விஷயங்களை அறிந்துள்ளார்கள் என்பது யாவரும் அறிந்ததே.

இவ்வளவு நன்மைகள் இருப்பினும் படக் காட்சியினால் சில தீமைகளும் ஏற்படுகின்றன. பார்க்கத்தகாத சில சினிமாக் காட்சிகளினால் மாந்தர் ஒழுக்கம் கெடுகிறது. இளைஞர்கள் இளமையிலேயே கெட்டு ஒழிகின்றார்கள். படக் காட்சிகளைக் காண மக்கள் பெருங் கூட்டமாக வந்து எல்லோரும் ஒரு கட்டிடத்திற்குள் புகுந்து பார்க்க நேரிடுகின்றமையின், சுகாதாரத்திற்குப் பிரதிகூலமாகிறது. அடிக்கடி படக்காட்சி பார்ப்பதனால் வெகு சீக்கிரத்தில் கண் பார்வை மங்குகிறது. ஆயினும், படக் காட்சியில் பின்னுஞ் சில அரிய சீர்திருத்தங்கள் செய்யப்படுமானால் இக் குறைகள் ஒருவாறு நீங்குதலும் கூடும்.

---

## 8. மணிமேகலை

(நாடகம்)

வித்துவான். ஆ. நா. கன்னையா.

களம் 3. காட்சி 1.

இடம்—மலர் மண்டபம்: காலம்—காலை நேரம்.

[காவிரிப்பூம் பட்டினத்தில் இந்திர விழா நடத்தக் கட்டளையிட்டான் சோழன் நெடுமுடிக் கிள்ளி என்பான். அரசனுடைய ஏவலின்படி நகரம் பற்பல துறைகளிலும்

செப்பம் செய்து அலங்கரிக்கப்பட்டது. விழா, தொடங்கியது. ஊரார் கூடி எல்லா நலன்களும் இருந்தும் நடனமாடுதலில் சிறந்த மாதவி, இவ்வருடம் நடனத் தொழிலுக்கு வராமல் இருக்கின்றாளே எனப் பழித்துரைத்தனர். அஃதுணர்ந்த சித்திராபதி என்னும் பெயர்கொண்ட மாதவியினுடைய தாய், மாதவியினுடைய தோழியாகிய வயந்த மாலையை அழைத்து " நீ சென்று ஊரார் கூறும் பழிமொழியை மாதவிக்குச் சொல்லி வா " என்று கட்டளையிட்டாள்.]

[வயந்தமாலை மண்டபத்தில் நுழைகிறாள். மணிமேகலை பூத் தொடுத்துக்கொண்டிருக்கிறாள். சுதமதியும், மாதவியும் உடனிருந்து உதவுகின்றனர்.]

வயந்தமாலை :—அம்மா ! வணக்கம்...ஆ ! ஆ ! எப்படி இருந்த உடல், இப்போது இந்த நிலையில் வாடி வதங்கி யிருக்கப் பார்க்கும் எனக்கு ஒன்றும் பேச நாவெழவில்லையே ! (துக்கம் தொண்டையை அடைக்க விம்மி, விம்மி அழுகிறாள்.)

மாதவி :—தோழீ ! ஏன் வருந்துகின்றாய் ? எனக்கு என்ன நேர்ந்துவிட்டதாக நீ துக்கிக்கின்றாய் ? பழைய நினைவு மாத்திரம் கொண்டு பார்க்கும் உன் கண்ணுக்கு என் நிலை துக்கத்துக் குரியதாகத் தோன்றுகிறது. இல்லை இல்லை என் தற்போதைய நிலை உண்மையான சுக நிலை ; இதனை ஆராயாது அழாதே ! வா ! என்ன காரணம் நீ இங்கு இன்று வந்தது ?

வயந்தமாலை :—என் உயிர் அனையாய் ! உன் கோலங் காண எனக்குப் பழைய நினைவுகள் முன் நின்று துயரமூட்டின. முன்னிலையிலும் இந் நிலையே சிறந்தது என்கிறாய் ; யான் அதை எங்ஙனம் உணர்வேன் ?

மாதவி :—உணர்வது இருக்கட்டும். வந்த காரணம் யாது ? உன் முகம் ஏதோ ஒன்றை உள்ளத்தில் கொண்டிருப்பதைக் குறிப்பிடுகிறது ; அதனைச் சொல்லமாட்டாயா ?

வயந்தமாலை :—மோருக்கு வந்து மொந்தையை ஒளித்ததுபோல என்பார்கள். அதுபோல வந்த காரியத்தைச் சொல்லாமல் பின் என்ன செய்யப்போகிறேன்.

மாதவி :—என்ன செய்தி சொல், கேட்கலாம்.

வயந்தமாலை :—உம்முடைய அன்னையார்தான் என்னை இங்கு அனுப்பிவைத்தார்.

மாதவி :—(கை கூப்பி) பெற்ற தாய்க்கு என் பேரன்புள்ள வணக்கம். (திசை நோக்கி வணங்குகிருள்.)

வயந்தமாலை :—நகரில் இந்திர விழாத் தொடங்கி நடைபெற்று வருகிறது.

மாதவி :—ஆம் ; இல்லையேல் சோழன் நாடு வளங்குன்றி, நகர் கடலால் மூழ்கடிக்கப்படும்.

வயந்தமாலை :—ஊர் மாந்தர் பலரும் பற்பலவாறு பழிமொழி தூற்றுகிருர்கள்.

மாதவி :—ஏன் ? எதற்காக? யாரை ?

வயந்தமாலை :—விழாவின்போது நடனமாடுதற்குத் தக்கவர்களில் தலைக்கோலம் என்னும் பட்டம் பெற்று, உன் தாயின் பின்ஞக நீ இருக்க, அத் துறையை விடுத்துப் பொது மக்கள் போன்று இத் தவத்துறையைக் கைக்கொண்ட உன்னைத்தான் ஊரார் பழிமொழி பேசுகின்றனர்.

மாதவி :—வயந்தமாலாய்! நீயோ என்னை இவ்வாறு நிந்திப்பது?

வயந்தமாலை :—இல்லையம்மா! இவ்வாறு நகரமக்கள் பழிச்சொல் கூறுகிருர்கள். இதனைக் கூறி உம் கருத்தை அறிந்து வரவே உம் அன்னையார் என்னை அனுப்பினுர்.

[மணிமேகலை, மலர் தொடுத்துக்கொண்டே மாதவியும், வயந்தமாலையும் பேசும் மொழிகளைக் கவனித்துக்கொண் டிருக்கிருள்.]

மாதவி :—மாலாய்! என் கணவன் மதுரையில் குற்றஞ் சாட்டப்பெற்றுக் கொலைக் காளானுர் என்ற சொல் கேட்ட

போதே யான் உயிர் விட்டிருக்க வேண்டும். அந்தச் சீரிய பதவிக்கு ஆளாகாத யான் இன்னும் உயிர் வாழ்கின்றேன்.

வயந்தமாலை :—அம்மணி ! நீயோ இவ்வண்ணம் உரை செய்தாய் ? உன் மகள் மணிமேகலையை யாகிலும் அனுப்பி நகரமாந்தரின் பழிதூற்றலையும், உன் தாயுடைய மன வருத்தத்தையும் போக்கலாகாதா ?

மாதவி :—மணிமேகலை என் வயிற்றிற் பிறந்தாளே யாயினும், அவள் என் மகள் அல்லள். கணவன் கொலையுண்டதற்குப் பொருதவளாய்க் கடுங்கோபங் கொண்டு பாண்டியன் நெடுஞ்செழியனை உண்மை உணரச்செய்து, தீயமாக்களை மதுரையோடு எரித்த பத்தினிக் கடவுளாகிய கண்ணகியினுடைய மகள் ஆவாள். அவள் தவத்துறையில் செல்வதற்குரியளே யன்றி, அவத்துறையாகிய வேறு தொழிலுக்கு உரியவள் அல்லள். ஆதலால் அவளைப்பற்றிய நினைவே கொள்ளவேண்டாம் என்று என் தாய்க்குச் சொல்லுவாயாக.

வயந்தமாலை :—அம்மா ! யான் என்ன சொல்லப் போகிறேன். எனக்கு அருமையாகக் கிடைத்த மாணிக்கம்போன்ற உன்னை இழந்து தனியே எப்படி உயிர்வாழ்வேன் ? (விம்மி அழுதுகொண்டே வணங்கிவிட்டுத் திரும்பிச் செல்கின்றாள்.)

களம் 3. காட்சி 2.

இடம்—மலர் மண்டபம். காலம் --- காலை நேரம்

[மணிமேகலையானவள் மாதவி கூறிய மொழிகளைக் கேட்டுக் கொண்டிருந்தாளாதலின் தன் தந்தை யிறந்த வரலாறுணர்ந்து கண் கலங்கி அழுதுகொண்டிருக்கிறாள் ; கையில் தொடுத்துக் கொண்டிருந்த மாலையும், கீழிருந்த மலர்களும் கண்ணீரால் நனைகின்றன.]

மாதவி:—கண்ணே என்மொழிகள் உன் மனத்தைக் கலக்கினவா? (அருகில் சென்றமர்ந்து கைகளால் கண்ணீரைத் துடைக்கிறாள்.) அழாதே ! அம்மா ! இதோ பார் நீ தொடுத்த

மாலையும், மற்ற மலர்களும் உன் கண்ணீரால் நனைந்தன. இவைகள் கடவுளுக்குச் சாத்தலாகா. வாடிய மலர்களும், கீழ் உதிர்ந்த மலர்களும், வண்டுகள் மொய்த்த மலர்களும், கடவுள் பூசனைக்கு உதவா என்பர் பெரியோர். அங்ஙன மிருக்க, கண்ணீர் பட்ட மலர் பூசனைக் குதவாது. நீயே சென்று சோலையில் வேறு மலர்கள் பறித்துவா கண்ணே! சென்று வருகிறாயா!

சுதமதி :—தாயே! மணிமேகலையை இப்போது மலர் பறித்தற்குத் தனியே அனுப்பலாகாது.

மாதவி :—ஏன் அனுப்பலாகாது என்கிறாய்!

சுதமதி :—மணிமேகலை தனித்து மலர் கொய்யச் சென்றால் வழியில் ஏதேனும் இடையூறு நேர்ந்தாலும் நேரும் அம்மா. நான் என் அனுபவத்தில் கண்டிருக்கின்றேன்; அதனால்தான் சொல்லுகின்றேன்.

மாதவி :—என்ன அநுபவம் கண்டாய்?

சுதமதி :—நான் பிறந்த ஊர் சண்பக நகரம் என்பது; என் தந்தையின் பெயர் கௌசிகன் என்பது; அந்தணன் மகளாகிய நான், தனியே செல்லப் பயப்படாமல் யார் நம்மை என்ன செய்வார் என்ற எண்ணத்துடன் செருக்குற்றவளாகிச் சோலை ஒன்றில் சென்று பூப்பறித்தேன். அங்கு ஆகாயவழியே சென்ற விஞ்சையன் ஒருவன், என்னைக் கண்டு தூக்கிக்கொண்டு வந்து இந்த நகரில் விட்டுவிட்டு நீங்கிச் சென்றான். அவனால் யான் இந்நகரில் வரலானேன். ஆதலால், மணிமேகலையைத் தனியே அனுப்பத் தகாதென்றேன். வேண்டுமானால் யானும் உடன் செல்கின்றேன்.

மாதவி :—சரி, அதுவும் நல்லதுதான்; இருவரும் சென்று வாருங்கள். (போகிறார்கள்.)

---

## 9. கஸ்தூரிபாய்

வித்துவான், R. சண்பகவல்லி.

நமது இந்தியாவின் வட பாகத்தில் கத்தியவார் நாட்டில் போர்பந்தர் என்று ஒரு சமஸ்தானம் உண்டு. அங்கே கோகுல தாஸ் மகந்தி என்றொரு வணிகர் வாழ்ந்து வந்தார். அவர் தம் குலத்திற்குரிய வாணிபஞ் செய்து வந்தார். அவருக்கு 1868-ஆம் ஆண்டு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தை தான் நம் கஸ்தூரிபாய் என்ற பெயருடையவராவர். இவருடைய பெற்றோர்கள் இவரை முதல் புதல்வியாகப் பெற்று எடுத்து அருமையாக வளர்த்து வந்தனர்.

அக்காலத்தில் போர்பந்தர் ஸமஸ்தானத்தில் கரம்சந்து காந்தி என்றொரு பெரியார் திவானாக இருந்து வந்தார். இருவரும் வணிகர் குலத்தில் பிறந்தவர்; பெரும் செல்வம் படைத்துப் புகழுடன் வாழ்ந்து வந்தனர். கோகுலதாஸ் மகந்தியும், கரம் சந்து காந்தியும் உயிர் நண்பராகப் பழகி வந்தனர். இவர் இருவரும் கொண்டிருந்த நட்பு உறவுடையதாக வேண்டுமென்று விரும்பினர்.

கரம்சந்து காந்திக்கு ஒரு அருமைப் புதல்வர் இருந்தார். அவர் தாம் இப்பொழுது உலகம் போற்றும் மகாத்மா காந்தியாவர். இந்தத் தவப் புதல்வருக்கும் கஸ்தூரிபாய்க்கும் திருமணம் நிகழ்த்தப் பெற்றோர் இருவரும் எண்ணினர். அவர்கள் விரும்பியபடி 1882-ஆம் ஆண்டு திருமணம் சிறப்பாக நடந்தேறிற்று.

காந்தியவர்கள், மணம் நிகழ்ந்தவுடன் கஸ்தூரிபாய்க்குக் கல்வி புகட்ட வேண்டுமென்று எண்ணினர். தாம் விரும்பியபடி தம் மனைவிக்குக் கல்வி புகட்டப் பற்பல காரணங்களால் இயலவில்லை. கஸ்தூரிபாய் அவர்கள், தெய்வ பக்தி, மதப் பற்று, அடக்கமுடைமை, பெரியோரிடம் மதிப்பு, உதவிபுரியும் எண்ணம் ஆகிய பல நற்குணங்கள் நிரம்பப் பெற்றிருந்தார்.

சில நாள் கழித்ததும் நம் காந்தி பாரிஸ்டர் பட்டம் பெற்றார்; பட்டம் பெற்றிருந்தும் வருமானம் போதாமையால் ஒரு கம்பெனியாருக்குப் பாரிஸ்டராகத் தென்னாப்பிரிக்காவுக்குச்

சென்றார். அவருடன் அவர் மனைவியும், அப்பொழுது அவர்க்குப் பிறந்திருந்த குழந்தைகளும் சென்றனர். அங்கு இவர்கள் வாழ்க்கை நடத்திவருகையில் ஒருநாள் காந்தி, தன் மனப்பான்மைக்குக் கஸ்தூரிபாய் மாறுபட்டு நடப்பதாக எண்ணினார். காந்தி அன்னையை அவ்வில்லத்திலிருந்து வெளியேற்றத் துணிந்தார். நம் அன்னையார் " நான் எங்கே செல்வேன். தாங்கள் இவ்விதம் செய்வது தக்கதா? நேர்மைக்கு இருப்பிடம் தாங்களல்லவா?" என்று பொறுமையோடு கேட்டனர். உடனே காந்தியின் உள்ளம் அமைதியை அடைந்தது.

காந்தியடிகள் தமது சத்திய சோதனையில் கஸ்தூரிபாய் தன்னையே பின்பற்றி நடந்ததாகக் கூறியுள்ளார். காந்தியடிகள், தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பும்பொழுது நேட்டால் இந்தியர் பல பரிசுகள் வழங்கினர்; அவர்கள் கஸ்தூரிபாய்க்கு ஒரு தங்கச் சங்கிலியைக் கொடுத்தனர். காந்தியடிகள் அதையும் தருமத்திற்கே செலவிட விரும்பினார். அப்பொழுது கஸ்தூரிபாய் தனக்கு அது வேண்டுமென்று மன்றாடினாள். தம் கணவர் கருத்துப்படி முடிவில் அவரிடம் அதனைக் கொடுத்து விட்டார். இதனால், அன்னையின் சீரிய குணம் நமக்கு விளங்கும்.

தென்னாப்பிரிக்காவில் இந்தியர் பொருட்டு காந்தியடிகள் சத்தியப் போர் செய்து சிறைக்குச் சென்றார். அன்னையுமுடன் சிறைவாசம் செய்யச் சென்றனர். எந்நிலையிலும் நம் அன்னை தம் கணவர்க்குத் தொண்டு செய்வதையே தம் கடமையாகக் கொண்டிருந்தார்.

1915-ஆம் ஆண்டில் கஸ்தூரிபாய் தம் கணவருடன் இந்தியாவுக்கு வந்தார். உடனே சில காலம் கழித்து அடிகள் சபர்மதியில் ஒரு ஆசிரமம் ஏற்படுத்தினார். அங்கு இவர்கள் வாழ்ந்து வந்தனர்; 1920-ஆம் ஆண்டில் அடிகள், பிறர் ஆட்சியின் பேரில் சத்தியப்போர் தொடுத்தார்; அடிக்கடி சிறைக்குச் செல்ல நேர்ந்தது; கஸ்தூரி அன்னையும் உடன் சிறைவாசம் செய்யத் தொடங்கினார். அன்னை தம் கணவர் கருத்தே தம் கருத்தாக எப்பொழுதும் எண்ணி வந்தார். பற்பல சமயங்களில் மகாத்மா உண்ணாவிரதம் மேற்கொள்வது உண்டு. அக்

காலங்களில் இவர் இரவும் பகலும் தம்முடைய பதிக்குத் தேவையான தொண்டுகள் பலவும் செய்து வந்தார்.

மகாத்மாவின் மனம் சிறைபுகுவதில் கலங்காமலிருப்பது போலவே இவரும் மனக்கலக்க மடையாமலிருந்தார். அன்னை பல முறை சிறை சென்றூர். இவர் உள்ளம் கலங்காதிருப்பினும் உடல் நிலை நாளுக்கு நாள் தளர்ந்து வந்தது. இவர் இறுதியாக 1942-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் மீண்டும் சிறை புகுந்தார். அன்னைக்கு அப்பொழுது வயது நிரம்ப ஆயிருந்தபடியால் மிகவும் தளர்ச்சி யடைந்திருந்தனர். ஆனுல் மனவுறுதி நிரம்ப இருந்து வந்தது; இடைவிடா உழைப்பும், சுதந்திர தாகமும், பதிசேவையும் கொண்டிருந்தனர். இவர் கிழப்பருவத்திலும் சீரிய கற்புடன் இவ்வாறு தம் கணவர் நோக்கமே தன் நோக்கமாகக் கொண்டிருந்தது போற்றத் தக்கதாகும்.

இவர் ஆகாகான் அரண்மனையில் வசித்து வந்த காலத்தில் அதாவது 1944-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 22-ஆம் தேதியன்று இவரது உடல் நிலை, நிரம்பவும் மோசமாய் விட்டது. உடலின் தளர்ச்சி, இதயக் கோளாறு, உடலின் வீக்கம் இவை யனைத்தும் ஒருங்கு சேர்ந்தன. அன்னையார் மூச்சுவிடவும் தடுமாறிக் கொண்டிருந்தனர். அடிகள் குனிந்து அன்னை அம் செவியில் அறமொழிகளைக் கூறிவந்தனர். இறுதியாக, அடிகள், "உன் உயிர்த் துன்பம் மிகுகின்றது; நீ சாந்தியுடன் ஈசன் பதமலர் சேர்வாயாக" என்று அப்பொழுது கூறவேண்டிய மொழிகளைக் கூறினுர். அடிகள் மடிமீது அன்னையின் தலையை வைத்துக்கொண்டிருக்கும்பொழுது அன்னையின் ஆவி ஈசனடிகளை அடைந்தது.

அன்னை ஈசனடியை யடைந்த பொழுது மாலை மணி 7-30 ஆகும். அன்னையின் ஆவி நீங்கிய பொழுது அங்கிருந்தார் யாவரும் ஆண்டவனுக்கு அஞ்சலி செய்து வணங்கினர். அப்பொழுது காந்தியடிகளுக்கும், அன்னைக்கும் விருப்பமான 'ரகுபதிராகவ ராஜாராம்' என்ற பாடல் பாடப்பட்டது. அப்பொழுது மக்களுக்கிருந்த துயரம் அளவிட்டறிய முடியாது.

உடனே அன்னையின் உடலம் மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டு அம்மாளிகையின் மதிலோரத்தில் அவர்கள்

கொள்கைப்படி தீக்கிரை யாக்கப்பட்டது. மகாத்மா, நெடுநேரம் அவ்விடத்திலேயே தங்கியிருந்தார். அவருடனிருந்த ஒரு பெரி யோர் காந்தியடிகளை உடன் வரும்படி அழைத்தார். அதற்கு அடிகள், "இவ்வளவு விரைவில் நான் இங்கிருந்து போகலாமா? இதற்குள் நமது வாழ்க்கையை மறந்து விட்டீர்களே என்று கஸ்தூரிபாய் கேட்பாளே" என்று கூறினர்.

பெண் பிறப்பெடுத்த யாவரும் தம் கணவர் இறப்பதற்கு முன் பரகதியடைய விரும்புவர். அந்தப் பேறு, நம் அன்னைக்கு வாய்த்தது. நம் அன்னை சுமங்கலியாக இருந்தபொழுது ஆவி நீத்துப் பரகதி யடைந்தார். அடிகள் உடனிருந்து ஈமச்சடங்கு களை நடத்த இவ்வன்னையார் கொடுத்து வைத்திருந்தார். கஸ்தூரி பாயின் அஸ்திகள் மைந்தர் தேவதாஸ் காந்தியால் அலகாபாத்துக் கருகே கங்கையில் விடப்பட்டது. அன்னையாரின் ஆவி வீட் டுலகம் எய்தி வீறுபெற்றிருந்தது.

கஸ்தூரி அன்னை, சிறந்த கற்பரசியாவார். இவ்வன்னையார் நடந்துகொண்ட ஒழுக்கம் நம் நாட்டுப் பெண்களுக்கு ஒரு எடுத்துக் காட்டாகும். புராணங்களில் செவியால் கேட்டறிந் திருந்த சீதை, துரௌபதி, தமயந்தி, சந்திரமதி, நளாயினி ஆகிய இவர்களைப்போன்ற ஒரு கற்பரசியை நாம் நேரிலேயே கண்டோம். இவ்வம்மையார் காந்தியுடன் சேர்ந்து தம்மையும், தம் வாழ்க்கை யையும் தம் பொருளையும் நாட்டின் நலத்திற்காகத் தியாகம் செய்தனர்; இன்ப துன்பங்களைச் சமமாக மதித்தனர்; பதி பக்தியே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர்; அடிகளுக்குத் தொண்டு புரிவதே தம் பிறவிப் பயன் என்று உணர்ந்தனர். அடிகள் உண்ணாவிரதம் கொண்ட காலங்களில் கணவன் உயிரைக் காலனிடமிருந்து வாதாடிப் பலமுறை மீட்டு வந்துள்ளார்.

கஸ்தூரிபாய் அன்னை நம் நாட்டில் அவதரித்து நடந்து கொண்ட ஒழுக்கத்தின் சீர்மை, நம் நாட்டுப் பெண்களுக்கே பெருமதிப்பை அளித்தது என்று நாம் கூறலாம்.

# முத்தமிழ் மாலை

## இரண்டாம் புத்தகம்

[ஐந்தாம் படிவத்திற்கு உரியது]

தொகுத்தோர் :

**வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்**

*தமிழ் ஆசிரியர், செயின்டு எப்பா பெண் உயர்நிலைப் பள்ளி,*
*மயிலாப்பூர், சென்னை.*

**வித்துவான், S. கிருஷ்ணசாமி B. A, B. O. L.**

*தமிழ் ஆசிரியர், கெலட் உயர்நிலைப் பள்ளி,*
*திருவல்லிக்கேணி, சென்னை,*

பத்மா பப்ளிஷிங் அவுஸ்

*10, தெற்கு உஸ்மான் ரோடு,*

*தியாகராய நகர், சென்னை—17.*



[விலை 1—6—0

# முன்னுரை

உலகில் கல்வி பயிலும் மாணவர்கள் அனைவருக்கும் அவரவர் தாய்மொழிப் பயிற்சி மிகவும் இன்றியமையாததாகும். தமிழைத் தாய்மொழியாகப் பயிலும் உயர்நிலைப்பள்ளிகளின் ஐந்தாவது படிவத்து மாணவர்களுக்கு ஏற்ற செய்யுட்பாடங்களும், உரை நடைப் பாடங்களும், இந்நூலுள் தொகுக்கப்பட்டுள்ளன.

1949-ம் ஆண்டு அரசாங்கத்தாரால் திருத்தி முடிவாக வெளி யிடப்பட்ட புதிய பாடத்திட்டத்தின்படி பொது, சிறப்பென்ற இருவகைப் பிரிவிற்கும் ஏற்றபாடங்கள் இந்நூலுள் தொகுக்கப் பட்டுள்ளன. இவை இரண்டிற்கும் தனித்தனியே அட்டவணைகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

இத்தொகைநூலில் சங்கச்செய்யுட்கள், நீதிச் செய்யுட்கள், தொடர் நிலைச்செய்யுட்கள், பிரபந்தங்களின் செய்யுட்கள், தற்காலப்புலவர் செய்யுட்கள் ஆகிய செய்யுட்களும், உரைநடைப் பகுதியில் தற்கால உலகியலுக்கு ஏற்றவாறு மாணவர் தகுதிக்குத் தக்கபடி தக்க சான்றோர்களிடமிருந்து வாங்கியஉரைநடைகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

செய்யுட்பகுதியில் வேண்டிய இடங்களுக்குக் குறிப்புரை களும், வினாக்களும் கொடுக்கப்பட்டுள்ளன. 'உரைநடைப் பகுதியில் அவை தேவையில்லை என்று விடப்பட்டுள்ளன.

இந்நூலுள் சேர்த்துக் கொள்ளும்படி தம் அரிய செய்யுட் களையும், கட்டுரைகளையும், வழங்கிய பேரறிஞர்கள் பலர்க்கும் எங்கள் நன்றி உரித்தாகுக.

இதனை வெளியிட்டு உதவிய பத்மா பப்ளிஷிங் கம்பெனி யார்க்கு எங்கள் நன்றியறிதலைச் செலுத்துகின்றோம்.

இந்த நூலை அன்போடு பார்த்தருளும் அரசியலாரும், உயர் நிலைப்பள்ளித் தலைமையாசிரியர்களும், தமிழாசிரியர்களும் தக்க ஆதரவு அளிப்பார்கள் என்று முற்றும் நம்புகின்றோம்.

இங்ஙனம்,

தொகுப்பாசிரியர்கள்.

இத் தொகுப்பிற்குச் செய்யுளும், உரைநடையும் உதவியவர்கள்:-

## செய்யுள்

மனோன்மணீயம்—சைவசித்தாந்தக் கழகத்தார்.
இரட்சணிய யாத்திரிகம்—கிறிஸ்டியன் லிட்டரரி சொஸைட்டியார்.
பாரதிநூல்—அரசாங்கத்தார்.
அறிவு—V. S. சுவாமிநாதன்.
தொழில்—திரு. வி. கலியாணசுந்தரனார்.
செல்வமும் சிறுமையும்—கவிமணி, தேசிக விநாயகம் பிள்ளை.
கொடிவணக்கம்—'அரசவைக் கவிஞர்' நாமக்கல், இராமலிங்கம் பிள்ளை.

## உரைநடை

தமிழ் நாட்டுப் பெண்பாலார்—K. சுப்பிரமணிய ஐயர்.
கலைகள்—திரு. வி. கலியாணசுந்தரனார்.
தமிழ்வேந்தர்இமயப்படைஎடுப்பு—இராவ்சாகிப், மு. இராகவையங்கார்.
வேதநாயகம்பிள்ளை—ரா. பி. சேதுப்பிள்ளை, B.A.B.L.
சென்னைக் கடற்கரை—டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார், M.A.
அன்னைக்கு (கடிதம்)—டாக்டர், மு. வரதராசனார். M.A.M.O.L.
உரைமொழியும் வாய்மொழியும்—டாக்டர், மா. இராசமாணிக்கனார். M.A.L.T.M.O.L.
இயற்கையோடியைந்த வாழ்வு—ஈ. த. இராசேசுவரி அம்மையார், M.A.L.T.
சோழர்கால ஓவியமும் சிற்பமும்—ஜே. எம். சோமசுந்தரம். B.A.B.L.
டாடா—பட்டுத் தொழில்—E. K. நடேச சர்மா. M.A.
இலங்கை மாட்சி—A. S. ஞானசம்பந்தன், M.A.
எங்கள் இன்பப் பயணம்—வித்துவான், V. P. நடராஜன்.
நமது குடியரசு—வித்துவான், வி. சிவக்கொழுந்து.
குடும்பக்கலை—வித்துவான், D. கண்ணம்மாள்.

இத் தொகுப்பில் இப்பகுதிகளைச் சேர்த்துக் கொள்ளுமாறு தம் இசைவு அளித்த மேற்கண்ட உரிமையாளர்களுக்கு எங்கள் நன்றியும், வணக்கமும், உரித்தாகுக.

தொகுப்பாசிரியர்கள்.

# பொருளடக்கம்

## செய்யுள்

## உரைநடை

# பொது

## செய்யுள்

I. வாழ்த்துப் பகுதி
- தேவாரம்
- திருவாய்மொழி
- தாயுமானவர் பாடல்
- திருவருட்பா

II. அறவுரைப் பகுதி
- திருக்குறள்
- நாலடியார்
- பழமொழி

III. தொடர்நிலைச் செய்யுட் பகுதி
- பெரிய புராணம்
- வில்லிபாரதம்
- இரட்சணிய யாத்திரிகம்
- மனோன்மணீயம்

IV. சிறுநூல் பகுதி
- திருவெங்கைக் கலம்பகம்
- சிலேடை
- குற்றாலக் குறவஞ்சி
- முக்கூடற்பள்ளு
- சிட்டுக்கவி

V. பல்சுவைப் பகுதி
- பாரதி நூல்
- அறிவு
- தொழில்
- கொடி வணக்கம்

## உரை நடை

- தமிழ் நாட்டுப் பெண்பாலார்
- கலைகள்
- வேதநாயகம் பிள்ளை
- சென்னைக் கடற்கரை
- அன்னைக்கு (கடிதம்)
- இயற்கைபோடியைந்தவாழ்வு
- டாடா—பட்டுத்தொழில்
- நமது குடியாக
- வாசவதத்தை (நாடகம்)
- குடும்பக் கலை

# சிறப்பு

---



---

# முத்தமிழ் மாலை

## செய்யுள்

## I. வாழ்த்துப் பகுதி

### 1. குறுந்தொகை

[குறுந்தொகை என்பது எட்டுத்தொகை நூல்களில் ஒன்று; இது ஓர் அகப்பொருள் நூல்; நான்கு அடிமுதல் எட்டடி வரை நானூறு செய்யுட்களைக் கொண்டது; இக்கடவுள் வாழ்த்து, பாரதம் பாடிய பெருந்தேவனாரால் பாடப்பட்டது.]

தாமரை புரையும் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடி யோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே.

—பாரதம் பாடிய பெருந்தேவனார்.

குறிப்புரை

இது முருகக்கடவுளின் வாழ்த்து. இதில் முருகக் கடவுளின் சேவடி, மேனி, ஆடை, வேல், கொடி முதலியவை வந்துள்ளன. புரையும், ஏய்க்கும் - ஒக்கும். (உவம உருபுகள்) செம்மை + அடி - சேவடி. (பண்புத் தொகை) குன்றி - குன்றிமணி. உடுக்கை - ஆடை. பக - பிளக்க. குன்று - கிரௌஞ்சமலை. ஏமம் - இன்பம். முருகனை வணங்குவோம் என்பது கருத்து.

விஞக்கள்

1. குறுந்தொகை என்னும் நூலைப்பற்றி நீவிர் யாது அறிவீர்?
2. முருகக்கடவுளின் சேவடி, மேனி, ஆடை இவைகளுக்குக் கூறப்பட்ட உவமைகள் எவை?

3. உலகம் இன்பத்தை அடைவதற்குக் காரணமாக இருப்பவர் யார்?
4. இவர் செய்த ஒரு வீரச் செயல் எது?

## 2. தேவாரம்

[தே+ஆரம்—தெய்வத்திற்குச் சாத்தும் செய்யுளாலான மாலை. தேவாரத்தைப் பாடியவர் மூவர். (சம்பந்தர், அப்பர், சுந்தரர்) இந்தத் தேவாரம் அப்பர் பாடியது. அப்பருக்குத் திருநாவுக்கரசர் என்ற பெயருமுண்டு. இவர் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் பிறந்தவர்; தகப்பனார்:-புகழனார்; தாய்:-மாதினியார்; முதலில் இவர் சைவ மதத்திலிருந்து, பின்பு சைனமதத்தில் சேர்ந்தார்; சிவபெருமான் அருளால் சூலைநோய்வர, இவர் மீண்டும் சைவமதத்தில் சேர்ந்தார். இவர் காலம் 7 ஆம் நூற்றாண்டு.]

மனமெனுந் தோணி பற்றி
மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும்போது
மதமெனும் பாறை தாக்கி
மறியும் போதறிய வொண்ணு(து)
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூ ருடைய கோவே.

—அப்பர்.

### குறிப்புரை

இச் செய்யுள் உருவகவணி. மதி - அறிவு. செறிகடல் - விணைத் தொகை. மறியும் - அழியும். நல்காய் - கொடுப்பாய். எனும் - என்னும். ஒண்ணுது - முடியாது. உனும் - நினைக்கும்.

### வினாக்கள்

1. நாவுக்கரசர் எந்தக் கடவுளிடம் என்ன வேண்டுகிறார்?
2. மனத்தோணியில் ஏற்றும் சரக்கு, ஊன்றும் கோல், தோணிக்குவரும் ஆபத்து இவற்றை வரைக.

## 3. திருவாய் மொழி

[திரு + வாய்மொழி = அழகான உண்மை மொழிகளாலான நூல். இது நம்மாழ்வாரால் பாடப்பட்டது; ஆயிரம் செய்யுட்கள் கொண்டது. நம்மாழ்வார் பாண்டிய நாட்டிலுள்ள திருக்குருகூரில் பிறந்தவர்; வேளாள மரபினர்; வைணவமதத்தினர்; இவர் காலம் 8-ஆம் நூற்றாண்டு.]

கடல்வண்ணன் கண்ணன் விண்ணவர்
  கருமாணிக்கம் எனதாருயிர்
படவரவி னணைக்கிடந்த பரஞ்சுடர்
  பண்டு நூற்றுவர்
அடவரும் படைமங்க ஐவர்கட்காகி
  வெஞ்சமத்து அன்று தேர்
கடவிய பெருமான் கனைகழல் காண்பது
  என்று கொல் கண்களே.

—நம்மாழ்வார்.

### குறிப்புரை

வண்ணன் - நிறமுடையவன். விண்ணவர் - தேவர். பட அரவு - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. பண்டு - முன்பு. நூற்றுவர் - துரியோதனனாதியர். மங்க - அழிய. ஐவர் - பாண்டவர். அருமை + உயிர் = ஆருயிர். வெம்சமம் - கொடியபோர் (பண்புத்தொகை) கழல்-தானியாகு பெயர். கழல் - வீரக்கழல். கனை - ஒலிக்கும். கடவுதல் - செலுத்துதல். கண்ணபிரானிடம் ஆழ்வார்க்கு உள்ள பற்றை இச்செய்யுளில் காண்க.

### வினாக்கள்

1. நம்மாழ்வார் எவற்றைக் காணவேண்டும் என்று விரும்புகின்றார்?
2. கண்ணன் யாருடைய தேரைச் செலுத்தினான்?
3. கண்ணன் தேர் செலுத்தியதால் நேர்ந்தது என்ன?

## 4. தேம்பாவணி

[தேன்+பா+அணி. இந்நூல் கிறிஸ்துவின் வரலாற்றைக் கூறுவது. பெஸ்கி என்னும் வீரமாமுனிவர், இந்நூலை இயற்றினர்; காலம் 17-ஆம் நூற்றாண்டு; மதம் கிறிஸ்தவம்.]

அறக்கடல் நீயே! அருட்கடல் நீயே!
அருங்கரு ணாகரன் நீயே!
திறக்கடல் நீயே! திருக்கடல் நீயே!
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே! நிகர் கடந்துலகில்
நிலையும் நீ! உயிரும் நீ! நிலைநான்
பெறக் கடல் நீயே! தாயும் நீ! எனக்குப்
பிதாவும் நீ! அனைத்தும் நீ! அன்றோ!

—வீரமாமுனிவர்

### குறிப்புரை

கருணாகரன் - கருணை வடிவமானவன். திரு - செல்வம். நிகர் - ஒப்பு. பிதா - தகப்பன்.

### வினாக்கள்

1. கடவுளை ஆசிரியர் எவ்வெவ்வாறு வருணிக்கிறார்?
2. கடவுள் ஒப்பற்றவன் என்பதை இதில் எந்தத்தொடர் குறிக்கின்றது.

## 5. சீறாப் புராணம்

[முகம்மது நபியின் சரிதத்தைக் கூறும் தமிழ் நூல் சீறாப் புராணம். இந்நூலை எட்டையபுரத்தில் வாழ்ந்த உமறுப் புலவர் இயற்றினர்; இவர் மதம், இஸ்லாம்; இவர் காலம், கி. பி. 17-ஆம் நூற்றாண்டு.]

சிறந்தமெய்ப் பொருளை அழிவிலா மணியைத்
தெரிந்துமுக் காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்

பிறந்தபல் லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப்(பு) என்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையு மறந்து
மண்ணினின் மதி மறந்தவரே.

—உமறுப் புலவர்.

குறிப்புரை

இதயம் ஆசனம் - மனமாகிய இடம். உறைந்து - வாழ்ந்து சுவர்க்கப்பதி - துறக்கத்துள்ள நகரம். மதி - அறிவு.

வினாக்கள்

1. கடவுள் யாவருடைய இதயாதனத்திலிருக்கின்றார்?
2. கடவுளை மறந்தவர் எவைகளை மறந்தவர் ஆவர்?

## 6. தாயுமானவர் பாடல்

தாயுமானவர், திருமறைக்காட்டில் கேடிலியப்பப் பிள்ளை என்பவருக்கு மகனாகப் பிறந்தவர்; சைவ வேளாளர்; இவர் காலம் 17–ஆம் நூற்றாண்டு; இவர் பாடல் உள்ளத்தை உருக்கவல்லன.]

### சுகவாரி

கல்லேனும் ஐயவொரு காலத்தில் உருகுமென்
கன்னெஞ்சம் உருகவிலையே
கருணைக் கிணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒரு கடவுளோ?
வல்லான் வகுத்ததே வாய்க்கால் எனும்பெரு
வழக்குக் கிழுக்கும் உண்டோ?
வானமாய் நின்றின்ப மழையாய் இறங்கியெனை
வாழ்விப்ப(து) உன்பரங் காண்!
பொல்லாத சேயெனில் தாய்தள்ளல் நீதமோ
புகலிடம் பிறிது முண்டோ?
பொய்வார்த்தை சொல்லிலோ திருவருட் கயலுமாய்ப்
புன்மையேன் ஆவனந்தோ!

சொல்லால் முழக்கிலோ சுகமில்லை மௌனியாய்ச்
　　சும்மாவிருக்க அருளாய்!
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
　　சோதியே! சுகவாரியே!

—தாயுமானவர்.

குறிப்புரை

சுகம் + வாரி = இன்பக்கடல். கல் + நெஞ்சம் = கன்னெஞ்சம். ' வல்லான் வகுத்ததே வாய்க்கால்"—இது ஒரு பழமொழி. சேய் - மகன். புன்மை - அற்பத்தன்மை. மௌனி - பேசாமலிருப்பவன். பரதெய்வமே - மேலான தெய்வமே.

வினாக்கள்

1. தாயுமானவர் தம்மிடமுள்ள குற்றங்கள் எவை என்று குறிப்பிடுகிறார்?
2. தம்மைக் கடவுள் கைவிடலாகாது என்பதற்கு ஆசிரியர் கூறும் காரணம் என்ன?
3. கடவுளிடம் தாயுமானவர் என்ன வேண்டுகிறார்?
4. கடவுளை ஆசிரியர் எப்படி அழைக்கின்றார்?

## 7. திருவருட்பா

[திரு + அருள் + பா. கடவுளின் அருளால் பாடிய பாட்டுக்கள். இந்நூலைப் பாடியவர், இராமலிங்க அடிகள்; இவர் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரில், கருணீகர் குலத்தில் பிறந்தவர்; மதம் சைவம்; தகப்பனார் இராமையபிள்ளை; தாய் சின்னம்மையார்; காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

### சித்தி விளைவு

மறப்பறியாப் பேரறிவில் வாய்த்த பெருஞ் சுகமே
　　மலவறியா நிலைநிரம்ப வயங்கிய செம்பொருளே
இறப்பறியாத் திருநெறியில் என்னைவளர்த் தருளும்
　　என்னுடைய நற்றாயே எந்தாயே நினது

சிறப்பறியா உலகமெலாஞ் சிறப்பறிந்து கொளவே
சித்தசிகா மணியேநீ சித்தியெலாம் விளங்கப்
பிறப்பறியாப் பெருந்தவரும் வியப்பவந்து தருவாய்
பெருங்கருணை அரசேநீ தருந்தருண மிதுவே.

—இராமலிங்க அடிகள்.

குறிப்புரை

செம்பொருள் - நேர்மையுள்ள இறைவன். தவர் - முனிவர். நற்றாய் - பெற்ற தாய். எந்தாய் - என் தந்தையே. தருணம் - சமயம்.

விஞக்கள்

1. இராமலிங்க அடிகள் கடவுளிடம் என்ன வேண்டுகிறார்?
2. அடிகள் கடவுளை எவ்வெப்பெயரிட்டு அழைக்கின்றார்?



# II. அறவுரைப் பகுதி

## 1. திருக்குறள்

[திரு + குறள் = திருக்குறள்—தெய்வத் தன்மையுள்ள குறள் வெண்பாக்களாலான நூல். இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. "நாலும்இரண்டும் சொல்லுக் குறுதி" என்னும் பழமொழி இதன் பெருமையை உணர்த்தும்; இந்தநூல் எல்லோராலும் போற்றப் படுகின்றது. இதன் ஆசிரியர் திருவள்ளுவர். இவர் மதம் பொதுமதம்; காலம் கடைச்சங்க காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.]

### செய்ந்நன்றி யறிதல்

*செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்*
*வானகமும் ஆற்றல் அரிது.* (1)

*காலத்தினால் செய்த நன்றி சிறிதெனினும்*
*ஞாலத்தின் மாணப் பெரிது.* (2)

*பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்*
*நன்மை கடலில் பெரிது.* (3)

*தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்*
*கொள்வர் பயன்தெரி வார்.* (4)

*உதவி வரைத்தன்(று) உதவி உதவி*
*செயப்பட்டார் சால்பின் வரைத்து.* (5)

*மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க*
*துன்பத்துள் துப்பாயார் நட்பு.* (6)

*எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்*
*விழுமம் துடைத்தவர் நட்பு.* (7)

*நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல(து)*
*அன்றே மறப்பது நன்று.* (8)

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்று நன்(று) உள்ளக் கெடும். (9)

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (10)

## கேள்வி

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. (1)

செவிக்குண(வு) இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். (2)

செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரொ(டு) ஒப்பர் நிலத்து. (3)

கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்(கு)
ஒற்கத்தின் ஊற்றாம் துணை. (4)

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். (5)

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (6)

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்துணர்(து)
ஈண்டிய கேள்வி யவர். (7)

கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. (8)

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது. (9)

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். (10)

—திருவள்ளுவர்.

### குறிப்புரை

*செய்ந்நன்றி அறிதல்*

1. *செய்யாமல் செய்த உதவி - பிறர் முன் ஓர் உதவியும் செய்யாதிருக்கையில் செய்யும் உதவி. வானகம் - தேவலோகம். ஆற்றல் - கொடுத்தல்.*

2. காலத்தினால் - காலத்தில். (வேற்றுமை மயக்கம்) ஞாலம் - பூமி. மாண - மிகவும்.

3. தூக்கார் - ஆராயாதவராய் (முற்றெச்சம்) நயன் - அன்பு.

4. தினை - மிகச் சிறிய அளவு. பனை - மிகப் பெரிய அளவு.

5. வரைத்து - அளவுடையது. சால்பு - அமைதி.

6. மாசு அற்றார் - குற்றமற்றவர். கேண்மை - நட்பு. துப்பு - பற்றுக்கோடு. மறவற்க, துறவற்க-வியங்கோள் வினை முற்றுக்கள்.

7. உள்ளுவர் - நினைப்பர். விழுமம் - துன்பம். துடைத்தவர் - நீக்கியவர். எழுபிறப்பு - தேவர், மனிதர், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம்.

8. நன்று - அறம். நன்று அல்லது - தீமை.

9. இன்னா - துன்பம். கெடும் - நீங்கும். உள்ள - நினைக்க.

10. கொன்றார் - அழித்தார். உய்வு - பிழைப்பு. கொன்ற - மறந்த.

## கேள்வி

1. செல்வத்துள் செல்வம் - மிகச்சிறந்த செல்வம். செவிச் செல்வம் - கேள்வியால் வரும் அறிவு.

2. போழ்து - பொழுது (மரூஉ) செவிக்கு உணவு - கேள்வி.

3. அவி - தேவர் உண்ணும் உணவு. நிலம் - இம்மண்ணுலகம்.

4. ஒற்கம் - தளர்ச்சி; ஊற்றும் - பற்றுக் கோடாம்.

5. இழுக்கல் - வழுக்குதல். இடை - இடம். ஊன்று + கோல்–ஊற்றுக் கோல்.

6. எனைத்தானும் - மிகச் சிறியதானாலும். ஆன்ற - நிறைந்த

7. பேதைமை - (ஆகுபெயர்) அறிவற்ற சொற்கள். பிழைத்து - தவறாக. இழைத்து - நுண்ணியதாக.

8. தோட்கப்படுதல் - துளைக்கப் படுதல் - கேளாத்தகைய செவிடாம் தன்மையன.

9. நணங்கிய - நட்பமான. வணங்கிய - பணிந்த. வாயி னர் - சொற்களை உடையவர்.

10. செவியில் சுவை - காதால் கேட்டு அறியும் சுவைகளை. வாய் உணர்வு - அறுவகைச் சுவையையும் அறியும் உணர்வு. அவியினும் - இறந்தாலும். என் - என்ன ?

வினாக்கள்

1. 'வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' எதற்கு ?
2. ஞாலம், கடல் - இவற்றினும் பெரியவை எவை?
3. உதவியின் சிறப்பு எதைப் பொருத்துள்ளது ?
4. யாருடைய நட்பை விடலாகாது ?
5. எதனை மறக்கலாகாது ? எதை மறக்கவேண்டும் ?
6. செய்ந்நன்றி மறத்தலின் தீமை எவ்வாறு கூறப்பட்டுள்ளது ?
7. பொருள் தருக :- கொன்றன்ன இன்னா; செய்யாமல் செய்த உதவி.

வினாக்கள்

1. செல்வத்துள் செல்வம் எது ?
2. சிறிது வயிற்றிற்கும் ஈயப்படும் ? எப்பொழுது ?
3. கேள்வியுடையாரின் சிறப்பென்ன ?
4. ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல் - எது போன்று உதவி செய்யும் ?
5. கேள்வியினால் வரும் நன்மைகளை எழுது.
6. பொருள்தருக :- செல்வத்துள் செல்வம், அவிபுணவின் ஆன்றார், வணங்கிய வாயினர், தோட்கப்படாத செவி.
7. 'அவியினும் வாழினும் என் ?' என்று ஆசிரியர் யாரைக் கூறுகிறார்.

## 2. நாலடியார்

[நான்கு + அடி + ஆர். நான்கு அடிகளுள்ள வெண்பாக்களால் ஆன நூல். இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. இந்நூலைப் பாடியவர் சமணமுனிவர்கள். இந் நூல் தொகுக்கப்பட்ட காலம் கி. பி. 8-ஆம் நூற்றாண்டு.]

## தக்கார்க்குச் செய்த அறம்

உறக்குந் துணையதோர் ஆலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்கு—அறப்பயனும்
தான்சிறி தாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். (1)

## பொறையொடு வாழ்தல்

அறிவ(து) அறிந்தடங்கி அஞ்சுவ(து) அஞ்சி
உறுவ(து) உலகுவப்பச் செய்து—பெறுவதினால்
இன்புற்று வாழும் இயல்புடையார் எஞ்ஞான்றும்
துன்புற்று வாழ்தல் அரிது. (2)

## ஊழ்வினையின் வன்மை

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. (3)

## கோதான பொருளைக் கூற்றமுங் கொள்ளாது

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும்
கல்லாதார் வாழ்வ(து) அறிதிரேல்—கல்லாதார்
சேதனம் என்னுமச் சேறகத் தின்மையால்
கோதென்று கொள்ளாதாம் கூற்று. (4)

## நல்லோர் நட்பு நாள்தோறும் வளரும்

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. (5)

—சமண முனிவர்கள்.

குறிப்புரை

1. உறக்கும் துணை - கிள்ளியெடுக்கும் அளவு. இறப்ப - மிகுதியாக. பயந்தாஅங்கு - உயிரளபெடை.

2. அறிவது - படித்தற்குரிய நூல். அஞ்சுவது - பழி, பாவங்கள். உலகு - உலக மக்கள். எஞ்ஞான்றும் - எப்பொழுதும்.

3. ஆ - பசு. குழக்கன்று - மிகச்சிறிய கன்று. கோடல் - கொள்ளுதல். தொல்லை - பழைய. கிழவன் - உரிமையுடையவன்.

4. வீதல் - இறத்தல். சேதனம் - அறிவு. சேறு - சாரம்.

5. கேண்மை, தொடர்பு - நட்பு. நந்தும் - வளரும். வைகல் - நாள். வான் ஊர் - ஆகாயத்தில் செல்லும்.

வினாக்கள்

1. தக்கார்க்குச் செய்யும் உதவி எத்தகையது?
2. எப்பொழுதும் துன்பமில்லாமல் வாழ்கின்றவர் யார்?
3. கல்லாதார் உயிருடன் வாழ்வதற்குக் காரணம் என்ன?
4. பெரியவர் நட்பு வளருவது எப்படி?
5. சிறியவர் நட்பு தேய்வதற்குக் கூறப்பட்ட உவமை என்ன?
6. "பழவினையும் அன்னதகைத்தே" - எத்தகைத்து?
7. கீழ்வரும் உவமைகள் எவற்றை விளக்க வந்தன :—
   (a) ஆலம் வித்து நிழல் பயத்தல்.
   (b) ஆவின் கன்று தாய் நாடிக் கோடல்.
   (c) பிறைபோல நாளும் நந்துதல்.

## 3. பழமொழி

[ஒவ்வொரு பழமொழியை இறுதியில் பெற்ற நானூறு வெண்பாக்களை உடைய நூல் 'பழமொழி' என்று வழங்குகின்றது. இது பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. இந்நூலின் ஆசிரியர் முன்றுறை அரையனார். முன்றுறைப்பதியின் அரசர்; சமண மதத்தினர்; கடைச் சங்க காலத்தினர்.]

### கல்லாரிடம் கட்டுரைத்தல் பொல்லாதாம்

*கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்*
*பொல்லாத தில்லை ஒருவற்கு—நல்லாய்*
*இழுக்கத்தின் மிக்க இழிவில்லை இல்லை*
*ஒழுக்கத்தின் மிக்க உயர்வு.* (1)

### தன் சொல்லாலே தன்னைத் துயர்ப்படுத்தல்

*பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்*
*சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்*
*மண லுள் முழுகி மறைந்து கிடக்கும்*
*நுண லுந்தன் வாயால் கெடும்.* (2)

### கெட்டார்க்கு நட்டார் இல்லை

*முட்டின்(று) ஒருவர் உடைய பொழுதின்கண்*
*அட்டிற்றுத் தின்பவர் ஆயிரவர் ஆபவே*
*கட்டலர்தார் மார்ப கலியூழிக் காலத்துக்*
*கெட்டார்க்கு நட்டாரோ இல்.* (3)

### பெருஞ்செல்வர் தரித்திரப்பட்டாலும் தாழார்

*நாடறியப் பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து*
*வாடிய காலத்தும் வட்குபவோ—வாடி*
*வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்*
*புலித்தலையை நாய்மோத்தல் இல்.* (4)

### அற்பரிடத்தில் அதிகாரம் கொடார்

*உடைப்பெருஞ் செல்வத்(து) உயர்ந்த பெருமை*
*அடக்கமில் உள்ளத்தன் ஆகி—நடக்கையில்*
*ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்*
*கொள்ளி கொடுத்து விடல்.* (5)

—முன்றுறை அரையனார்.

குறிப்புரை

1. ஒழுக்கம் × இழுக்கம். கட்டுரை - உறுதிச்சொல். நல்லாய் - மகடூஉ முன்னிலை.

2. பேதை - அறிவில்லாதவன். துயர்ப்படுக்கும் - துன்பத்தில் அகப்பட்டுக்கொள்ளும். நுணல் - தவளையின் ஒரு வகை.

3. முட்டு - குறைவு. அட்டிற்று - சமைத்தது. (உணவு) அலர்தார் - பூமாலை. கலியூழி - கலியுகம்.

4. வட்குபவோ - தாழ்வரோ. வலித்து - நரம்பு தொய்ந்து. திரங்கி - சுருங்கி. மோத்தல் - மோந்து பார்த்தல்.

5. உள்ளத்தன் - மனமுடையவன். நடக்கை - ஒழுக்கம். ஒள்ளியன் — தூயவன். கொள்ளி - கொள்ளிக்கட்டை.

வினாக்கள்

1. "இழுக்கத்தின் மிக்க இழிவு இல்லை" இச்செய்யுளில் கூறியுள்ள இழுக்கம் எது?
2. 'நுணலும் தன் வாயால் கெடும்'—இப் பழமொழி எதற்காக எடுத்தாளப்பட்டது?
3. "முட்டின்று"—என்று தொடங்கும் செய்யுளின் கருத்தென்ன?
4. 'பெரியோர் வறுமையினும் தாழார்' என்பதற்காகக் கூறப்பட்ட பழமொழி எது?
5. 'குரங்கின்கைக் கொள்ளி கொடுத்து விடல்'—எது?

## 4. அறநெறிச்சாரம்

[அறம் + நெறி + சாரம். அறவழிகளின் சாரமானவற்றைக் கூறும் நூல். இதனை இயற்றியவர் முனைப்பாடியார்; மதம் சமணம்; காலம் 15–ஆம் நூற்றாண்டு.]

### புறங்கூறலின் தாழ்வு

முன்னின் றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்குஞ் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை. (1)

## கீழ்மக்கள் இயல்பு

வைகலும் நீருட் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்—அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. (2)

## செல்வத்தின் பயன்

உப்புக் குவட்டின் மிசையிருந் துண்ணினும்
இட்டுணைக் காலத்துக் கூராதாம்—தொக்க
உடம்பும் பொருளும் உடையான் ஓர் நன்மை
தொடங்காக்கால் என்ன பயன். (3)

## அன்போடு அறம்கூறுபவர்

காலொடு கையமுக்கிப் பிள்ளையை வாய்நெரித்துப்
பாலொடு நெய் பெய்யும் தாயனையர்—சால
அடக்கத்தை வேண்டி அறன்வலித்து நாளும்
கொடுத்துமேற் கொண்டொழுகு வார். (4)

## மீதூண் கேடுதரும்

புகாப் பெருக ஓட்டிற் புலன்கண்மிக் கூறி
அவாப் பெருகி அற்றந் தருமால்—புகாவுமோர்
பெற்றியா னூட்டிப் பெரும்பயன் கொள்வதே
கற்றறிந்த மாந்தர் கடன்.

—முனைப்பாடியார்.

### குறிப்புரை

1. சான்றோர் - இங்குக் கீழ்மக்கள். இமையார் - இமையாதவராய்.

2. வைகல் - நாள். சால - மிகவும். இது உரிச்சொல். கீழ்கள் - கீழ் மக்கள். வல் - கடினத்தன்மை.

3. குவடு - மலை. கூராதாம் - உறைக்காதாம்.

4. நெய் - விளக்கெண்ணெய். பெய்யும் - புகட்டும். அறன் வலித்து - தருமங்கடைப் பிடித்து.

5. புகா - உணவு. மிக்கு ஊறி - மிகுதியாகக் கொழுத்து. அற்றம்- தீமை.

வினாக்கள்

1. தேவர் ஏன் இமை கொட்டாமலிருக்கின்றனர்?
2. கீழ்மக்களியல்பு மாறாது என்பதற்குக் கூறப்படும் உவமை என்ன?
3. பொருள்பெற்றவர் உடனே செய்யவேண்டியது என்ன?
4. தாய் பிள்ளைக்கு நெய் பெய்வது எதற்கு? இவ்வுவமை விளக்குவது யாது?
5. மீதூணால் வரும் தீமைகளை வரைக.

## 5. ஏலாதி

[இது பதினெண் கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. ஏலம்+ஆதி=ஏலம் முதலான ஏழு சரக்குகள் சேர்ந்த மருந்து. அதுபோல் ஒவ்வொரு செய்யுளிலும் ஏழு கருத்துக்கள் அடங்கிய நூலுக்கு ஏலாதி என்று பெயர். இந்நூலின் ஆசிரியர் கணிமேதையார்; இவர் காலம் கடைச்சங்க காலம்.]

### போகத்தகாத இடங்கள்

கொலைக்களம் வார்குத்துச் சூதாடு மெல்லை
அலைக்களம் போர்யானை யாக்கு—நிலைக்களம்
முச்சாரிகை யொதுங்கு மோரிடத்து மின்னவை
நச்சாமை நோக்காமை நன்று. (1)

### விண்ணோரால் விரும்புவோன்

சிதைவுரையான் செற்றம் உரையான் சீறில்லான்
இயல்புரையான் ஈனமுரையான்—நசையவர்க்குக்
கூடுவ(து) ஈவானைக் கொவ்வைபோல் செவ்வாயாய்
காடுவர் விண்ணோர் நயந்து. (2)

## நண்பர்க்கு உள்ள குணங்கள்

சாதல் பொருள்கொடுத்தல் இன்சொல் புணர்வுவத்தல்
நோதல் பிரிவில் கவறலே—ஓதலின்
அன்புடையார்க்(கு) உள்ளன ஆறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து. (4)

## குடிபெருகி வாழ்பவன்

களியான் கள்ளுண்ணான் களிப்பாரைக் காணான்
ஒளியான் விருந்திற்கு உலையான்—எளியாரை
எள்ளான் ஈத்துண்பானேல் ஏதமில் மண்ணாண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து. (4)

## பொருளை ஈயுமிடங்கள்

தாயிழந்த பிள்ளை தலையிழந்த பெண்டாட்டி
வாயிழந்த வாழ்வினார் வாணிகம்—போயிழந்தார்
கைத்தூண் பொருளிழந்தார் கண்ணிலவர்க் கீந்தார்
வைத்து வழங்கி வாழ்வார். (5)

—**கணிமேதையார்.**

### குறிப்புரை

1. வார்குத்து - வெள்ளத்தின் சுழி. அலைக்களம் - சிறைக்கூடம். யாக்கும் - கட்டும். முச்சாரிகை - யானை, தேர், குதிரை, ஓடு மிடங்கள். நச்சாமை — விரும்பாமை.

2. சிதைவு - கீழ்மை. செற்றம் - பகைமை. நசையவர் - விரும்பி வந்தவர். கொவ்வை - கோவைக்கனி. விண்ணோர் - தேவர்.

3. கவறல் - வருந்துதல். மென்புடையார் - மென்மைத் தன்மை வாய்ந்த சான்றோர்.

4. களிப்பார் - கள்ளுண்பவர். உலையான் - தளரமாட்டான் ஏதம் — குற்றம்.

5. தலை — கணவன். வாயிழந்த வாழ்வினார் — ஊமை.

### வினாக்கள்

1. சோத்தகாத இடங்கள் எவை?
2. தேவரால் விரும்பப்படுபவர் யாவர்?
3. நண்பர்க்கு உரிய ஆறு குணங்கள் எவை?
4. குடிபெருகி வாழ்பவன் யாவன்?
5. பொருளை யாருக்குக் கொடுப்பது நல்லது?

## 6. திருமந்திரம்

[இது சைவத் திருமுறைகளில் ஒன்று. இந்நூலை இயற்றியவர் திருமூலர்; மதம் சைவம்; காலம் பத்தாம் நூற்றாண்டு.]

### அன்புடைமை

அன்பு சிவ மிரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ(து) ஆரும் அறிகிலார்
அன்பே சிவம் ஆவதாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே. (1)

### சரீரசித்தி யுபாயம்

உடம்பினை முன்னம் இழுக்கென்(று) இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று
உடம்பினை யானிருந்(து) ஓம்புகின்றேனே. (2)

### இதோபதேசம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி இல்லை நுஞ்சித் தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. (3)

### கல்வி

நில்லா நிலைமைய நிலையா நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென்(று) உணர்வீர்காள்
எல்லா வுயிர்க்கும் இறைவனே ஆயினும்
கல்லாதார் நெஞ்சத்துக் காண வொண்ணாதே. (4)

## வாய்மை

செய்தா(ன்) அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்
மெய்தான் உரைக்கில் **விண்**ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந்திலங்கு மிடறுடையோனே. (5)

—**திருமூலர்.**

### குறிப்புரை

1. ஆரும் – யாரும். 2. இழுக்கு – குற்றம். உத்தமன் – கடவுள். ஓம்புதல் – காத்தல். 3. நமன் – எமன். சித்தம் – உள்ளம். உய்மின் – பிழைப்பீர். 4. குரம்பை – உடம்பு. 5. விண்ணோர் – தேவர். மிடறு – கழுத்து.

### வினாக்கள்

1. சிவத்திற்கும் அன்பிற்குமுள்ள தொடர் பென்ன?
2. உடம்பைப் பாதுகாக்க வேண்டியது ஏன்?
3. திருமூலரின் பொது மதவுணர்ச்சியைச் சுட்டும் செய்யுள் எது?
4. கடவுள் யார் நெஞ்சத்துள் புகமாட்டார்?
5. வாய்மை கூறுகின்றவர் அடையும் சிறப்பென்ன?

---

# III. தொடர் நிலைச் செய்யுட் பகுதி

## 1. சிலப்பதிகாரம்

[சிலம்பு + அதிகாரம்; சிலம்பால் விளைந்த கதை. இது ஐம் பெருங்காப்பியங்களில் ஒன்று. இந்நூலில் இயல் இசை நாடகம் எனும் மூன்று தமிழும் அமைந்திருத்தலால் இதனை 'முத்தமிழ் நூல்' என்று கூறுவர். இந்நூலின் ஆசிரியர் '**இளங்கோவடிகள்**' இவரிளமையிலேயே துறவு பூண்டவர்; இவர் சமணர்; காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு. பாடப்பகுதி மதுரைக் காண்டத்திலுள்ளது.]

### வழக்குரை காதை

### வாயிற்காவலன், பாண்டியனை அடைந்து கண்ணகியின் வருகையை அறிவித்தல்

வாழி! எம்கொற்கை வேந்தே வாழி!
தென்னம் பொருப்பின் தலைவ வாழி!
செழிய வாழி! தென்னவ வாழி!
பழியொடு படராப் பஞ்சவ வாழி!
அடர்த்தெழு குருதி அடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை அல்லள்
அறுவர்க்(கு) இளைய நங்கை இறைவனை
ஆடல் கண்(டு) அருளிய அணங்கு சூருடைக்
கானகம் உகந்த காளி தாருகன்
பேருரம் கிழித்த பெண்ணும் அல்லள்
செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்
பொற்றொழில் சிலம்பொன்(று) ஏந்திய கையள்
கணவனை இழந்தாள் கடையகத் தாளே
கணவனை இழந்தாள் கடையகத் தாளே; யென
வருக மற்றவள் தருக ஈங்கென,

### கண்ணகி, பாண்டியன் அவையை அடைந்து வழக்குரைத்தல்

வாயில் வந்து கோயில் காட்டக்
கோயில் மன்னனைக் குறுகினள் சென்றுழி,
நீர்வார் கண்ணை! எம்முன் வந்தோய்!
யாரை யோநீ! மடக்கொடி யோய்! எனத்
தேரா மன்ன! செப்புவ(து) உடையேன்
எள்ளறு சிறப்பின் இமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்
வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்றன்
அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்
பெரும் பெயர்ப் புகாரென் பதியே அவ்வூர்
ஏசாச் சிறப்பின் இசை விளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி
வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்பச்
சூழ்கழல் மன்ன! நின்னகர்ப் புகுந்திங்(கு)
என்காற் சிலம்புபகர்தல் வேண்டி நின்பால்
கொலைக்களப்பட்ட கோவலன் மனைவி
கண்ணகி என்பதென் பெயரே யென,

### அரசன் கள்வனைக் கொல்லுதல் முறை என்றல்

.....................பெண்ணணங்கே!
கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று
வெள்வேல் கொற்றம் காணென,

### கண்ணகி அரசன் பிழையை வெளிப்படுத்தல்

........................ஒள்ளிழை
நற்றிறம் படராக் கொற்கை வேந்தே
என்கால் பொற்சிலம்பு மணியுடை அரியே, எனத்
தேமொழி உரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே

தருகெனத் தந்து தான்முன் வைப்பக்
கண்ணகி அணிமணிக் காற்சிலம்(பு) உடைப்ப
மன்னவன் வாய்முதல் தெறித்தது மணியே,

## அரசன் சோர்ந்து விழுதல்

......................மணிகண்டு

தாழ்ந்த குடையன் தளர்ந்த செங்கோலன்
பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட
யானோ அரசன்? யானே கள்வன்;
மன்பதை காக்கும் தென்புலம் காவல்
என்முதல் பிழைத்தது கெடுகவென் ஆயுளென
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே,

## கோப் பெருந்தேவி உயிர்விடுதல்

......................தென்னவன்

கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ(து) இல்லென்(று)
இணையடி தொழுதுவீழ்ந் தனளே மடமொழி.

—இளங்கோவடிகள்.

### குறிப்புரை

கொற்கை வேந்து - பாண்டியன். பொருப்பு - பொதிய மலை. தென்னவன், செழியன், பஞ்சவன் - பாண்டியன். குருதி - இரத்தம். மடக்கொடி - கொற்றவை. அறவர்க்கு இளைய நங்கை - சத்த மாதாக்களில் ஏழாவதிளையாள். (பிடாரி) ஆடல் கண்டருளிய அணங்கு - காளி. செற்றனள் - வெறுத்தனள். உகந்த - விரும்பிய. உரம் - மார்பு. செயிர் - மனக்கோபம். வாயில், கோயில் - ஆகு பெயர்கள். கண்ணை - கண்களை புடையவனே! தேரா - ஆராயாத. என் அறு - பழித்தல் இல்லாத. நடுங்க - அசைய. உகுநீர் - சிந்தும் நீர் (வினைத்தொகை). ஆழி - சக்கரம். அணங்கு - பெண் தெய்வம். கோறல் - கொல்லுதல். ஒள்ளிழை - அன்மொழித்தொகை. அரி - சிலம்பின் உள்ளீடு. மன்பதை - மக்கள் தொகுதி. தென்புலம் - பாண்டியன் நாடு. மடமொழி - அன்மொழித் தொகை (கோப்பெருந்தேவி).

வினாக்கள்

1. கண்ணகி வருகையை வாயிற்காவலன், பாண்டியனிடம் எவ்வாறு அறிவித்தான் ?
2. கண்ணகி, சோழர்கள் நீதி முறையை விளக்கக் கூறிய வரலாறுகள் எவை ?
3. பாண்டியன், எப்பொழுது தன் பிழையை உணர்ந்தான்?
4. தன் அநீதியை உணர்ந்த பாண்டியன், என்நிலையை அடைந்தான் ?
5. கோப் பெருந்தேவி, யாது சொல்லி வருந்தினள் ?
6. இடம் குறிப்பிடுக :—
   (a) " தாருகன் பேருரம் கிழித்த பெண்ணுமல்லள் "
   (c) " கள்வனைக் கோறல் கடுங் கோலன்று "
   (b) " கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில் "
7. பாண்டியனைக் குறிக்கும் தொடர்களைக் கூறுக.

## 2. பெரிய புராணம்

### மெய்ப்பொருள் நாயனார் புராணம்

[பெரியர்+புராணம்: பெருமை வாய்ந்த சிவனடியார் வரலாற்றைக் கூறும் நூல். இது சைவத் திருமுறையில் பன்னிரண்டாவதாகும். பெரிய புராணத்தின் ஆசிரியர் சேக்கிழார்; இவர், தொண்டைநாட்டில் குன்றத்தூரில் சைவ வேளாளகுலத்தில் பிறந்தவர்; இரண்டாம் குலோத்துங்க சோழன் காலத்தவர். (கி.பி. 12-ஆம் நூற்றாண்டு) இவர் இந்நூலுக்கு இட்டபெயர் திருத்தொண்டர் புராணம் என்பது.]

### நாயனாரது அரசாட்சிச் சிறப்பும் சிவவழிபாடும்

சேதிநன் னாட்டுநீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாகர் அன்பின் வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை விளங்கிட மேன்மைபூண்டு
காதலாலீசர்க் கன்பர் கருத்தறிந் தேவல் செய்வார். (1)

அரசியல் நெறியின்வந்த அறநெறி வழாமல்காத்து
வரைநெடுந் தோளால் வென்று மாற்றலர் முனைகள்மாற்றி
உரைதிறம் பாதநீதி யோங்குநீர் மையினில்மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையான்அன்பர் வேடமே சிந்தை செய்வார்.

மங்கையைப் பாகமாக உடையவர் மன்னுங்கோயில்
எங்கணும் பூசைநீடி ஏழிசைப் பாடல் ஆடல்
பொங்கிய சிறப்பின் மல்கப் போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கள்நா யகருக் கன்பர் தாளலால் சார்பொன் றில்லார். (3)

தேடிய மாடு நீடு செல்வமும் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க் காவன ஆகும் என்று
நாடிய மனத்தி னோடு நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக் குறைவறக் கொடுத்து வந்தார். (4)

## நாயனருடன் முத்தநாதன் என்பவன் போர்செய்து தோற்றுப்போதல்

இன்னவா றொழுகு நாளில் இகல்திறம் புரிந்தோர் மன்னன்,
அன்னவர் தம்மை வெல்லும் ஆசையால் அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடையானை பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப் பரிபவப் பட்டுப் போனான். (5)

## முத்தநாதன் நாயனரை வெல்லச் சூழ்ச்சி செய்தல்

இப்படி இழந்த மாற்றான் இகலினால் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம் அறிந்துவெண் நீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே அற்றத்தில் வெல்வா னாகச்
செப்பரு நிலைமை எண்ணித் திருக்கோவ லூரிற் சேர்வான். (6)

## முத்தநாதனுடைய பொய்ச் சிவவேடம்

மெய்யெலாம் நீறு பூசி வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே என்ன மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு புகுந்தனன் முத்த நாதன். (7)

### அரசவீதியின் சிறப்பு

மாதவ வேடங் கொண்ட வன்கணன் மாடந் தோறும்
கோதைசூழ் அளக பாரக் குழைக்கொடி ஆட மீது
சோதிவெண் கொடிகள் சூடுஞ் சுடர்நெடு மறுகிற் போகிச்
சேதியர் பெருமான் கோயில் திருமணி வாயில் சேர்ந்தான். (8)

### முத்தநாதன் நாயனர் மாளிகையுட் செல்லுதல்

கடையுடைக் காவ லாளர் கைதொழு தேற நின்றே
"உடையவர் தாமே வந்தார் உள்ளெழுந் தருளும்" என்னத்
தடைபல புக்க பின்பு தனித்தடை நின்ற தத்தன்
"இடைதெரிந் தருளவேண்டும் துயில்கொளும் இறைவன்"
[என்றான். (9)

### முத்தநாதன் பள்ளியறையை யடைதல்

என்றவன் கூறக்கேட்டு "யானவற் குறுதிகூற
நின்றிடு நீயும்" என்றே அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்திகழ் பள்ளிக்கட்டில் புரவலன் துயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல் மாதேவி இருப்பக்கண்டான். (10)

### [முத்தநாதன் பொய்வேடத்தை நாயனர் வணங்குதல்.]

கண்டுசென் றணையும்போது கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலையானை எழுப்பிட உணர்ந்து மன்னன்
அண்டர்நாயகனர் தொண்டரா மெனக் குவித்த செங்கை
கொண்டிழிந் ததிரே சென்று கொள்கையின் வணங்கி நின்று.

### முத்தநாதன், ஆகமநூல் கொண்டுவந்தேன் எனல்

"மங்கலம் பெருக மற்றென் வாழ்வு வந்தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப்பெற்ற தென்கொலோ" என்று கூற,
"உங்கள் நாயகனர் முன்னம் உரைத்த ஆகமநூல் மண்மேல்
எங்குமில்லாத தொன்று கொடுவந்தேன் இயம்ப"என்றான். (12)

### நாயனார் அந்த நூலை வாசித்தருள்க எனல்

"பேறெனக் கிதன்மேல் உண்டோ பிரானருள் செய்த இந்த
மாறிலாகமத்தை வாசித் தருள்செய்ய வேண்டும்" என்ன
"நாறு பூங்கோதை மாது தவிரவே நானும்நீயும்
வேறிடத்திருத்தல் வேண்டும்" என்றவன் விளம்ப வேந்தன். (13)

### தேவியாரை அந்தப்புரத்திற்கு அனுப்புதல்

திருமக ளென்ன நின்ற தேவியார் தம்மை நோக்கிப்
பரிவுடன் விரையவந்தப் புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத்தானைத் தவிசின்மேலிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி "இனியருள் செய்யும்" என்றார். (14)

### [முத்தநாதன் கொலைச் செயலும், நாயனார் உயர்குணமும்]

கைத்தலத் திருந்த வஞ்சக் கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தக மவிழ்ப்பான் போன்று புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தவப் பரிசே செய்ய
"மெய்த்தவ வேடமே மெய்ப்பொருள்" எனத் தொழுது
வென்றார். (15)

### நாயனார் தத்தனைத் தடுத்தல்

மறைத்தவன் புகுந்தபோதே மனம் அங்கு வைத்த தத்தன்
இறைப்பொழுதின்கட் கூடி வாளினால் எறியலுற்றான்
நிறைத்த செங்குருதி சோரவீழ்கின்றார், நீண்ட கையால்
தரைப்படும் அளவில் "தத்தா! நமர்" எனத்தடுத்து
வீழ்ந்தார். (16)

### நாயனார் தத்தனுக்கு ஆணையிடுதல்

வேதனை யெய்தி வீழ்ந்த வேந்தரால் விலக்கப்பட்ட
தாதனும் தத்தன் தானும் தலையினால் வணங்கித் தாங்கி
"யாது நான் செய்கேன்" என்ன "எம்பிரான் அடியார் போக
மீதிடை விலக்காவண்ணம் கொண்டுபோய் விடுநீ" என்றார் (17)

## தத்தன், இறைவன் ஆணையை அறிவித்தல்

அத்திறம் அறிந்தா ரெல்லாம் "அரசனைத் தீங்கு செய்த [போது
பொய்த்தவன் றன்னைக் கொல்வோம்" எனப்புடை சூழ்ந்த
தத்தனு மவரை எல்லாம் தடுத்துடன் கொண்டு போவான்
"இத்தவன் போகப் பெற்ற திறைவனதாணை" என்றான். (18)

## தத்தன் முத்தநாதனை அழைத்துப் போதல்

அவ்வழி அவர்களெல்லாம் அஞ்சியே யகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன் திருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவாள் ஏந்தி ஆளுருக் கானஞ் சேர
வெவ்வினைக் கொடியோன் தன்னை விட்டபின் மீண்டு
போந்தான். (19)

## நாயனார், தத்தன் நன்மொழிகேட்க ஆவிதாங்கி இருத்தல்

மற்றவன் கொண்டு போன வஞ்சனை வேடத் தான்மேல்
செற்றவர் தம்மை நீக்கித் தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச் சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்றான் கோமகன் குறிப்பில் நின்றான்.(20)

## தத்தன் நாயனாரிடம் மீண்டு சென்று கூறல்

சென்றடி வணங்கி நின்று "செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூறின்றி விட்டனன்" என்று கூற,
"இன்றெனக் கையன் செய்த திடார்செய்ய வல்லார்" என்று
நின்றவன் தன்னை நோக்கி நிறைபெருங் கருணை கூர்ந்தார்.(21)

## நாயனார் பொன்னம்பலத்தானை நினைதல்

அரசியலாயத் தார்க்கும் அழிவுறுங்காத லார்க்கும்
விரவிய செய்கை எல்லாம் விளம்புவார் "விதியினாலே
பரவிய திருநீற் றன்பு பாதுகாத் துய்ப்பீர்" என்று
புரவலர் மன்று ளாடும் பூங்கழல் சிந்தை செய்தார். (22)

## நாயனார் இறைவன் திருவடி நீழலையடைதல்

தொண்டனார்க் கிமயப் பாவை துணைவனா ரவர்முன் தம்மைக்
கண்டவா றெதிரே நின்று காட்சிதந் தருளி மிக்க
அண்டவா னவர்கட் கெட்டா அருட்கழல் நீழல் சேரக்
கொண்டவர் இடைய றாமல் கும்பிடுங் கொள்கை யீந்தார்.(23)

—சேக்கிழார்.

### குறிப்புரை

1. மன்னி - நிலைபெற்று. மாதொருபாகர் - சிவபெருமான். மலாடு - மலையமான் ஆண்ட நாடு; மரூஉமொழி.

2. வரை - மலை. மாற்றலர் - பகைவர். உரைதிறம்பாத - சொன்ன வார்த்தை தவறாத. நீர் - கங்கை.

3. எங்கணும் - எவ்விடத்திலும். சிறப்பு - திருவிழா. சார்பு - பற்றுக்கோடு. ஏழிசை - ச, ரி, க, ம, ப, த, நி.

4. மன்று - சபை. அணைந்த - சேர்ந்த. போது - பொழுது.

5. இகல் - போர். அமர் - போர். உடை - தோற்றிப்பட்டம். பரிபவம் - அவமானம்.

6. மாற்றான் - பகைவன். சீலம் - ஒழுக்கம். அற்றம் - சமயம். செப்பரு நிலைமை - கொலைத் தொழில்.

7. கரந்த - மறைத்த. கவளி - சுவடித்தூக்கு. கறுப்பு - கோபம்.

8. வன்கணன் - அஞ்சாநெஞ்சமுடையான். அளகம் - கூந்தல். குழைக்கொடி - மகளிர். மறுகு - தெரு. சேதியர் பெருமான் - மெய்ப்பொருள் நாயனார். வாயில் - இலக்கணப் போலி.

9. உடையவர் - சிவபக்தர். தடை - வாயில்.

10. புரவலன் - அரசன். மாடு - பக்கம் மன்றல் - மணம்.

11. கதுமென - விரைவாக. அண்டர் நாயகன் - சிவபெருமான். கொள்கை - முறைப்படி.

12. மங்கலம் - நன்மை. ஆகமநூல்-சைவவாகமநூல். மண்மேல் - உலகில்.

13. பேறு - பாக்கியம். மாறு - தீவினை. நாறு - மணம்வீசும்.

14. பரிவு - அன்பு. தவிசு - வீற்றிருக்குமிடம்.

15. கைத்தலம் - கையிடம். பத்திரம் - வாள். பரிசு - தன்மை. நினைந்த அப்பரிசு - இங்குக்கொலை என்னும் பொருள்.

16. மறைத்தவன் - தவத்தில் மறைந்தவன். இறைப்பொழுது - சிறிதுபொழுது. குருதி - இரத்தம்.

17. தாதன் - அடியவன். எம்பிரான் - சிவபெருமான்.

18. புடை - பக்கம். ஆணை - கட்டளை.

19. போந்து - வந்து. வெவ்வினை — பாவம்.

20. செற்றவர் - கோபித்தவர். கொற்றவன் - அரசன்.

21. ஐயன் - தந்தன். கருணை கூர்ந்தார் - மிக்கஅருள் செய்தார்.

22. விரவிய - உள்ளத்தில் நிறைந்த. உய்ப்பீர் - இறுதிவரை செலுத்துவீர். மன்று - பொன்னம்பலம். பூங்கழல் - பொலிவுள்ள திருவடிகள். கழல் - தானியாகு பெயர்.

23. இமயப்பாவை - பார்வதி. நீழல் - விகாரம். அண்டம் - விண்ணுலகம்.

## வினாக்கள்

1. மெய்ப்பொருள் நாயனார் அரசாண்ட விதத்தை விளக்கு.
2. நாயனார் எதனையே சார்பாகக் கொண்டிருந்தார்?
3. முத்தநாதன் செய்த சூழ்ச்சி என்ன?
4. (a) முத்தநாதன் கொண்ட சிவனடியார் வேடத்தை வருணித்து வரைக.

   (b) "மைபொதி விளக்கே என்ன" இதன் உபமேயம் கூறி நன்கு விளக்குக.
5. தன் ஆகமத்தைப்பற்றி முத்தநாதன் யாது கூறினான்?
6. முத்தநாதன் பேச்சைக்கேட்டு மெய்ப்பொருள் நாயனார் உரைத்ததென்ன?
7. "தான் முன் நினைந்த அப்பரிசே செய்ய" நினைந்த பரிசு என்ன? செய்தவன் யார்? எப்பொழுது செய்தான்?

8. "தொழுது வென்றார்?" வென்றார் என்று சொல்வது பொருந்துமா? ஆராய்க.

9. தத்தனிடம் நாயனார் என்ன வேண்டினார்?

10. சிவபெருமான் நாயனாருக்கு எப்படி அருள் புரிந்தார்?

11. இடம் குறித்துப் பொருள் கூறு :—

(a) "இடை தெரிந்து அருளவேண்டும்"

(b) "உங்கள் நாயகனார் முன்னம் உரைத்தது"

(c) "இன்று எனக்கு ஐயன் செய்தது யார் செய்ய வல்லார்"

## 3. கம்ப ராமாயணம்

[கம்பரால் பாடப்பட்ட இராமன் கதை, கம்பராமாயணம் என்று பெயர்பெறும். 'கல்வியில் பெரியவன் கம்பன்' என்று புகழப்படும் கம்பர், சோழநாட்டிலுள்ள திருவழுந்தூரில் உவச்சர் குலத்தில் தோன்றினார்; மதம் வைணவம்; காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. பாடப் பகுதி, அயோத்தியா காண்டத்திலுள்ளது.]

### குகப் படலம்

#### பரதன் கங்கையை அடைதல்

பூவிரி பொலன்கழற் பொருவில் தானையான்
காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
தாவர சங்கம மென்னுந் தன்மைய
யாவையு மிரங்கிடக் கங்கை யெய்தினான். (1)

#### பரதனைத் தொடர்ந்துசென்ற சேனை

கான்றலை நண்ணிய காளை பின்படர்
தோன்றலை யவ்வழி தொடர்ந்து சென்றன
ஆன்றவ ருணர்த்திய அக்கு ரோணிகள்
மூன்றுபத் தாயிரத் திரட்டி முற்றுமே. (2)

## குகன் பரதன் சேனையைக்கண்டு கோபித்தல்

அப்படை கங்கையை யடைந்த வாயிடைத்
துப்புடைக் கடலினீர் சுமந்த மேகத்தை
ஒப்புடை யண்ணலோ டுடற்ற வேகொலாம்
இப்படை எடுத்ததென் றெடுத்த சீற்றத்தான். (3)

குகனெனப் பெயரிய கூற்றி னாற்றலான்
தொகைமுரண் சேனையைத் துகளின் நோக்குவான்
நகைமிகக் கண்கள் தீ நாற நாசியில்
புகையுறக் குனிப்புறும் புருவப் போர்விலான். (4)

கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்கண் தீயினன்
கொட்டிய துடியினன் குறிக்குங் கொம்பினன்
இட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினான். (5)

## குகன் தன் படைகளை அழைத்தல்

எலியெலா மிப்படை யரவம் யானென
ஒலியுலாஞ் சேனையை யுவந்து கூயினான்
வலியுலா முலகினில் வாழும் வள்ளுகிர்ப்
புலியெலா மொருவழி புகுந்த போலவே. (6)

## படைகள் வருதல்

மருங்கடை தென்கரை வந்து தோன்றினான்
ஒருங்கடை நெடும்படை யொல்லெ னார்ப்பினோ
டருங்கடை யுகந்தனி லசனி மாமழை
கருங்கடல் கிளர்ந்தெனக் கலந்து சூழவே. (7)

## வேடரைப் பார்த்துக் குகன் கூறுதல்

தோன்றின புளினரை நோக்கிச் "சூழ்ச்சியின்
ஊன்றிய சேனையை யும்ப ரேற்றுதற்
கேன்றனெ னென்னுயிர்த் துணைவற் கீகுவான்
ஆன்றபே ரரசுநீ ரமைதிரா" மென்றான். (8)

## குகனது கட்டளை

"துடியெறி நெறிகளும் துறையுஞ் சுற்றுற
ஓடியெறி வம்பிகள் யாது மோட்டலிர் ;
கடியெறி கங்கையின் கரைவந் தோர்களைப்
பிடியெறிபட" வெனுப் பெயர்த்தும் கூறுவான். (9)

## வேடரிடம் குகன் கூறுதல்

அஞ்சன வண்ணனென் னுருயிர்
நாயக னாளாமே
வஞ்சனை யாலர செய்திய
மன்னரும் வந்தாரே !
செஞ்சர மென்பன தீயுமிழ்
கின்றன செல்லாவோ !
உஞ்சிவர் போய்விடின் நாய்க்குக
னென்றெனை யோதாரோ ! (10)

ஆழ நெடுந்திரை யாறு
கடந்திவர் போவாரோ !
வேழ நெடும்படை கண்டு
விலங்கிடும் வில்லாளோ !
தோழமை யென்றவர் சொல்லிய
சொல்லொரு சொல்லன்றோ !
ஏழமை வேட னிறந்தில
னென்றெனை யேசாரோ ! (11)

முன்னவ னென்று நினைந்திலன்
மொய்புலி யன்னானோர்
பின்னவன் நின்றன னென்றில
னன்னவை பேசானேல்
என்னிவ னென்னை யிகழ்ந்ததிவ்
வெல்லை கடந்தன்றோ
மன்னவர் நெஞ்சினில் வேடர்
விடுஞ்சரம் வாயாவோ ! (12)

மாமுனி வர்க்குற வாகி
வனத்திடை யேவாழுங்
கோமுனி யத்தகு மென்று
மனத்திறை கொள்ளாதே
ஏழுலை யுற்றிடி லேழு
கடற்படை யென்றாலும்
ஆழுலை யிற்சிறு கூழென
விப்பொழு தாகாதோ ! (13)

## சுமந்திரன் குகனைப்பற்றிப் பரதனிடம் கூறுதல்

"கங்கையிரு கரையுடையான்
கணக்கிறந்த நாவாயான்
உங்கள் குலத் தனிநாதற்
குயிர்த்துணைவ னுயர்தோளான்
வெங்கரியி னேறனையான்
விற்பிடித்த வேலையினான்
கொங்கலரு நறுந்தண்டார்க்
குகனென்னுங் குறியுடையான்." (14)

"கற்காணுந் திண்மையான்
கரைகாணக் காதலான்
அற்காணிற் கண்டனைய
வழகமைந்த மேனியான்
மற்காணுந் திருநெடுந்தோள்
மழைகாணு மணிநிறத்தாய்
நிற்காணு முள்ளத்தா
னெறியெதிர் நின்றனன்" னென்றான். (15)

## பரதன் குகனைக்காணப் புறப்படுதல்.

தன்முன்னே யவன்றன்மை
தந்தைதுணை முந்துரைத்த
சொன்முன்னே யுவக்கின்ற
துரிசிலாத் திருமனத்தான்

"மன் முன்னே தழீஇக்கொண்ட
மனக்கினிய துணைவனேல்
என் முன்னே யவற்காண் பென்
யானேசென்" றெனவெழுந்தான். (16)

## பரதன் நிலையைக்கண்டு குகன் வியத்தல்

என்றெழுந்து தம்பியொடு
மெழுகின்ற காதலொடுங்
குன்றெழுந்து சென்றதெனக்
குளிர்கங்கைக் கரைகுறுகி
நின்றவனை நோக்கினன்
திருமேனி நிலையுணர்ந்தான்
துன்றுகரு நறுங்குஞ்சி
எயினர் கோன் துண்ணென்ருன். (17)

## குகன், பரதன்நிலை கண்டு விம்முதல்

வற்கலையி னுடையானை
மாசடைந்த மெய்யானை
நற்கலையின் மதியென்ன
நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் கனிகின்ற
துயரானைக் கண்ணுற்றான்
விற்கையினின் றிடைவீழ
விம்முற்று நின்றொழிந்தான். (18)

## குகன், இராமனிளையோர் பிழை செய்யாரெனல்

"நம்பியுமென் னாயகனை
யொக்கின்ற னயனின்றான்
தம்பியையு மொக்கின்றான்
தவவேடந் தலைநின்றான்
துன்பமொரு முடிவில்லை
திசைநோக்கித் தொழுகின்றான்
எம்பெருமான் பின்பிறந்தா
ரிழைப்பரோ பிழைப்" பென்றான். (19)

### குகன் பரதனிடம் வருதல்

"உண்டிடுக்க ணொன்றுடையா
னுலையாத வன்புடையான்
கொண்டதவ வேடமே
கொண்டிருந்தான் குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்து பெயர்கின்றேன்
காமின்க ணெறி" யென்னாத்
தண்டுறையோர் நாவாயி
லொருதனியே தான்வந்தான். (20)

### குகன் பரதனை வணங்க, பரதன் குகனைத் தழுவுதல்

வந்தெதிரே தொழுதானை
வணங்கினான் மலரிருந்த
அந்தணனுந் தனை வணங்கு
மவனுமவ னடிவீழ்ந்தான்.
தந்தையினும் களிகூரத்
தழுவினன் தகவுடை யோர்
சிந்தையினுஞ் சென்னியினும்
வீற்றிருக்குஞ் சீர்த்தியான். (21)

### பரதன், தான்வந்த காரிய முரைத்தல்

தழுவின புளிஞர் வேந்தன்
தாமரைச் செங்கணானை
"எழுவினு முயர்ந்த தோளாய்
எய்திய தென்னை" என்ன
"முழுதுல களித்த தந்தை
முந்தையோர் முறையி னின்றும்
வழுவின னதனை நீக்க
மன்னனைக் கொணர்வா" னென்றான். (22)

### குகன், மீண்டும் பரதனை வணங்குதல்

கேட்டனன் கிராதர் வேந்தன்
கிளர்ந்தெழு முயிர்ப்ப னாகி
மீட்டுமண் ணதனில் வீழ்ந்தான்
விம்மின னுவகை வீங்கத்

திட்டரு மேனி மைந்தன்
　　சேவடிக் கமலப் பூவில்
பூட்டிய கையன் பொய்யி
　　லுள்ளத்தன் புகலலுற்றான். (23)

### குகன், பரதனைப் புகழ்தல்

“தாயுரை கொண்டு தாதை
　　யுதவிய தரணி தன்னைத்
தீவினை யென்ன நீத்துச்
　　சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை யென்ற போழ்து
　　புகழினோய் தன்மை கண்டால்
ஆயிர மிராமர் நின்கே
　　ழாவரோ தெரியி னம்மா! (24)

### பரதனது வினாவும் குகனது விடையும்

அவ்வழி யவனை நோக்கி
　　யருள்தரு வாரி யன்ன
செவ்வழி யுள்ளத் தண்ணல்
　　தென்றிசைச் செங்கை கூப்பி
“எவ்வழி யுறைந்தா னம்முன்”
　　என்றலு மெயினர் வேந்தன்
“இவ்வழி வீர யானே
　　காட்டுவ லெழுக” என்றான். (25)

### இராமன் படுத்த இடத்தைப் பரதன் கண்டுவருந்துதல்

காரெனக் கடிது சென்றான்
　　கல்லிடைப் படுத்த புல்லின்
வார்சிலைத் தடக்கை வள்ளல்
　　வைகிய பள்ளி கண்டான்
பார்மிசைப் பதைத்து வீழ்ந்தான்
　　பருவரற் பரவை புக்கான்
வார்மணிப் புனலான் மண்ணை
　　மண்ணுநீ ராட்டுங் கண்ணான். (26)

### இலக்குமணன் தங்கிய இடத்தைப் பரதன் வினவுதல்

தூண்டர நிவந்த தோளான்
　　பின்னருஞ் சொல்லுவான் "அந்
நீண்டவன் துயின்ற சூழ
　　லிதுவெனி னிமிர்ந்த நேயம்
பூண்டவன் றொடர்ந்து பின்னே
　　போந்தவன் பொழுது நீத்த
தியாண்"டென வினிது கேட்டான்
　　எயினர்கோ னிதனைச் சொன்னான். (27)

### குகனது விடை

"அல்லையாண் டமைந்த மேனி
　　யழகனு மவளுந் துஞ்ச
வில்லையூன் றியகை யோடும்
　　வெய்துயிர்ப் போடும் வீரன்
கல்லையாண் டுயர்ந்த தோளாய்
　　கண்கணீர் சொரியக் கங்குல்
எல்லைகாண் பளவு நின்றான்
　　இமைப்பில னயனம்" என்றான். (28)

### பரதன் தன்னை நோதல்

என்பத்தைக் கேட்ட மைந்தன்,
　　"இராமனுக் கிளையா றென்று
முன்பொத்த தோற்றத் தேமில்
　　யானென்று முடிவி லாத
துன்பத்துக் கேது வானேன்
　　அவனது துடைக்க நின்றான்
அன்பத்துக் கெல்லை யுண்டோ?
　　அழகிதென் னடிமை" என்றான். (29)

### பரதன் தன்னை அக்கரையில் சேர்க்குமாறு குகனை வேண்டுதல்

அவ்விடை யண்ண றானு
　　மன்றரும் பொடியின் வைகித்
"தெவ்விடை தராநின் றார்க்குஞ்
　　செறிகழற் புளினர் கோமான்

இவ்விடைக் கங்கை யாற்றி
னேற்றினை யாயி னெம்மை
வெவ்விடர்க் கடலின் றேற்றி
வேந்தன்பால் விடுத்த" தென்றான். (30)

குறிப்புரை

1. பூ - அழகு. பொலன் - பொன். தானை - சேனை. ஒரீஇ- நீங்கி. சங்கமம் - இயங்கும் பொருள்.

2. கான் - காடு. கானை - உவமவாகு பெயர் (இராமன்)

3. அ+இடை = ஆயிடை. துப்பு - வலி. கோல் - ஐயம். சீற்றத்தான் - கோபமுடையவன். (குகன்)

4. கூற்று - எமன். ஆற்றல் - வலிமை. துகள் - புழுதி. கால - தோன்ற. காசி - மூக்கு. குனிப்பு - வளைவு.

5. சுரிகை - உடைவாள். துடி - உடுக்கை. கொம்பு - ஊது கொம்பு. அமர் - போர்.

6. அரவம் - பாம்பு. கூவினன் - கூப்பிட்டான். உகிர் - நகம். "ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை நாகம் உயிர்ப் பக் கெடும்"—குறள்.

7. மருங்கு - பக்கம். 'ஒல்' - ஒலிக்குறிப்பு. கடையுகம் - இலக்கணப் போலி. அசனி - இடி.

8. புலினர் - வேடர். சூழ்ச்சி - தந்திரம். உம்பர் - வீர சுவர்க்கம். என்றனென் - தொடங்கினேன். அமைதிர் - ஒப்புக் கொள்வீர்.

9. துடி - இக்கு பறை. ஒடி - அழி. அம்பி - தோணி. கடி- மணம். பெயர்த்தும் - மீண்டும்.

10. அஞ்சனம் - மை. அருமை+உயிர் = ஆருயிர். சரம் - அம்பு. உஞ்ச - போலி.

11. திரை - அலை. வேழம் - யானை. வில்லாள் - வில்வீரன். ஏழமை - எளிமை. ஏசாரோ - பழிக்கமாட்டார்களோ.

12. முன்னவன் - அண்ணன். மொய்புலி - வலிமையுள்ள புலி. வாபாவோ - பொருந்தமாட்டாவோ? பின்னவன் - இலக்கு வன்.

13. சோ - இராமன். முனியத்தகும் - கோபிக்கக்கூடும். இறை - சிறிது. ஏ - அம்பு. கூழ் - பயிர். ஆ - பசு.

14. கணக்கு இறந்த - எண்ணற்ற. நாவாய் - படகு. கரி பேறு - ஆண்யானை. வேலை - சேனைக்கடல். கொங்கு - தேன். குறி - பெயர்.

15. மல் - வலிமை. அல் - இருட்டு. கல் - மலை. நெறி - வழி.

16. தந்தை தனை - சுமந்திரன். முந்து - முன். துரிசு - களங்கம். தழீஇக்கொண்ட - நட்புக்கொண்ட.

17. குறுகி - நெருங்கி. குஞ்சி-தலைமயிர். எயினர் - வேடர். திருமேனி - அழகிய உடல்.

18. வற்கலை - மரவுரி. மெய்யான் - உடம்பை உடையவன். நகை - ஒளி. கனிகின்ற - முதிர்கின்ற.

19. நம்பி - ஆடவரில் சிறந்தவன். எப்பெருமான் - இராமன். இழைப்பரோ - செய்வார்களோ.

20. உலையாத - நீங்காத. குறிப்பு - மனக்கருத்து. பெயர்கின்றேன் - வருகின்றேன். காமின் - பாதுகாத்திருங்கள். (பன்மை ஏவல்), ஒரு தனி - தன்னந்தனி.

21. தொழுதானை - பரதனை. மலர் இருந்த அந்தணன் - பிரமன். கீர்த்தி - மிக்கபுகழ். சென்னி - தலை.

22. புளிஞர் - வேடர். செம்மை + கண் = செங்கண். எழுந்தான். எய்தியது - அடைந்தது. வழுவினன் - தவறினன்.

23. கிராதர் - வேடர். உயிர்ப்பன் - பெருமூச்சு விட்டவனாய். விம்மினன் - உடம்பு பூரித்தவனாய். தீட்டுஅரு - சித்திரத்தில் வரைதற்கு அரிய.

24. தரணி - பூமி. சிந்தனை - கவலை. போழ்து - மருவு. கேழ் - ஒப்பு.

25. அருள் தருவாரி - கருணைக்கடல். செவ்வழி - நல்வழி. நம்முன் - நம்முடைய அண்ணன். காட்டுவல் - காட்டுகிறேன்.

26. கார் - மேகம். வார்சிலை - நீண்ட வில். தடக்கை - பெரியகை. பள்ளி - படுக்கை. பருவரல் - துன்பம். பரவை - கடல். மண்ணும் - நீராட்டும்.

27. தூண்தர - துணை ஒப்ப. நீண்டவன் - திரிவிக்ரமன். சூழல் - இடம். நேயம் - அன்பு. நீத்தது - கழித்தது.

28. அல் - இருள். அழகன் - இராமன். கல் - மலை. கங்குல் - இரவு. நயனம் - கண்.

29. என்பத்தை - விகாரம். தோற்றத்தேம் - பிறப்பை யுடையேம். ஏது - காரணம்.

30. அண்ணல் - பரதன். பொடி - புழுதி. தெவ் - பகை வர். இடைதர - தோற்றோட. ஆர்க்கும் - ஒலிக்கும். இடர்க் கடல் - துன்பக்கடல் (உருவகம்).

### வினாக்கள்

1. பரதன் புறப்பட்ட நிலை எப்படிக் கூறப்பட்டுள்ளது ?
2. குகன் கோபமடைந்த தோற்றத்தை வரைக.
3. குகன் பரதன் சேனையைக் கண்டு என்ன எண்ணினான்?
4. தன் படைகளிடம் குகனிட்ட கட்டளைகள் எவை ?
5. இராமன் பொருட்டு உயிர்விடவும் துணிந்தான் குகன் என்பதற்குச் சான்று தருக.
6. குகன் தான் பரதனைத் தடுக்காவிட்டால் பிறர் தன்னை எப்படி ஏசுவர் என்று கூறுகின்றான் ?
7. கம்பர், திருக்குறளின் கருத்தை எடுத்தாண்ட ஓரிடத் தைக் குறி.
8. குகனைப்பற்றிச் சுமந்திரன் பரதனிடம்கூறியவை எவை?
9. பரதன் கருத்தை அறிந்த குகன் என்ன செய்தான் ?
10. இலக்குமணனைப் பரதன் எவ்வாறு பாராட்டுகிறான் ?
11. பரதன் குகனிடம் வேண்டிய உதவி என்ன ?
12. "ஆழியில் சிறு கூழ்"; இதன் உபமேயம் யாது ?

13. இடங்குறித்துப் பொருள் கூறு :—

(a) "எலியெலாம் இப்படை அரவம் யான்".

(b) "எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு"

(c) "ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ".

(d) அன்பத்தக் கெல்லையுண்டோ? அழகிதென் அடிமை?

## 4. வில்லி பாரதம்

[பரத வமிசத்தவரது வரலாற்றைக் கூறும் நூல் பாரதம். வடமொழியிலுள்ள பாரதத்தைத் தமிழில் பாடியவர் பலர். அவர்களுள் வில்லிபுத்தூர் ஆழ்வாரும் ஒருவர். இவர் நடுநாட்டிலே சனியூரிலே, வீரராகவாச்சாரியருக்கு மகனாகத் தோன்றினார்; மதம்வைணவம்; காலம் 15-ஆம்நூற்றாண்டு; இவரை ஆதரித்தவன் வரபதியாட்கொண்டான்.]

### திரௌபதி மாலையிட்ட சருக்கம்

#### பாஞ்சாலன் உட்கோள்

வரத்தினாற் பிறந்த வாறும்
வான்மொழி புகன்ற வாறும்
சிரத்தினால் வணங்கிக் கேட்பத்
தேசிகன் உரைத்த வாறும்
உரத்தினாற் கெடாத வாறும்
உணர்ந்துதன் பேதை யின்னமு
சரத்தினால் உயர்ந்த வின்மைத்
தனஞ்செயற் குரியள் என்று. (1)

#### துருபதன் ஓலை அனுப்ப மன்னர் வருதல்

தான்வரித் தவற்கே எய்த
உரியளென் தனயை யென்று
கான்வரிச் சுரும்புண் மாலைக்
காவலர்க் கோலை போக்க

மான்வரிக் கண்ணிக் கேற்ற
வதுவை நாண் மலர்ப்பூ வொன்றைத்
தேன்வரித் தென்ன வந்து
திரண்டது குமரர் சேனை. (2)

## பாண்டவர் சுயம்வரத்திற்குப் புறப்பாடு

ஆங்கது நிகழ்ந்த மாற்றம்
அந்தண னொருவன் வந்தோன்
ஈங்கிவர்க் குரைப்ப மைந்தர்
ஐவரும் யாயும் கேட்டுப்
பாங்குடைப் பதியில் வாழும்
பார்ப்பன மாக்க ளோடும்
தாங்கரும் கொடிய கானம்
தம்மனத் தேரிற் போனார். (3)

## நன்னிமித்தம்

வெறிபடு முளரி மொக்குள்
விரிபதன் நோக்கிச் சுற்றும்
பொறிவரி வண்டின் ஈட்டம்
புறத்திருந் திரங்க வண்டொன்
றிறகரால் வீசி உள்புக்
கின்மது நுகர்தல் கண்டு
நெறியில்நல் நிமித்த மாக
நெஞ்சுற நினைந்து சென்றார். (4)

வண்டுறை மருங்கின் ஆங்கோர்
மாங்கனி வீழ்தல் கண்டே
தண்டுறை மீன்கள் எல்லாம்
தத்தமக் கிரையென் றெய்த
விண்டுறை கிழிய வோடி
வென்றொரு வாளை தன்வாய்க்
கொண்டுறை வலிமை நோக்கிக்
குறிப்பினால் உவகை கூர்ந்தார். (5)

## பாண்டவர் சுயம்வர மண்டபத்தை அடைதல்

ஆங்கண்நல் தவத்தால் மிக்க
அன்னையை இருத்தி மைந்தர்
தாங்கள்முன் துணையாய் வந்த
தாபதன் தன்னொ டெய்தித்
தூங்கணங் குரீஇயின் மஞ்சத்
தலந்தொறும் தூங்கு கின்ற
தேங்கண்மாத் தெரியல் வேந்தர்
சேர்ந்தபே ரவையில் ஆனார். (6)

## திரௌபதியைத் தாதியர் தேற்றல்

ஆதியிற் குந்தி மைந்தர்
ஐவர்க்கும் உரிய ளாமென்
றோதிய விதியி னால்நெஞ்
சலப்புறு உவகை கூர்வாள்
சோதிடம் பொய்யா தென்றும்
தோன்றுவர் உரியோர் என்றும்
தாதியர் தேற்றத் தேற்றத்
தன்மனத் தளர்வு தீர்வாள். (7)

## பாஞ்சாலியின் மனவுறுதி

ஆண்டெரிப் பிறந்த போதே
அன்பினால் எந்தை நேர்ந்த
பூண்டெரி மார்பன் இன்றிப்
பொன்னவை பொலியத் தோன்றி
ஈண்டெரி முன்னர் மன்னர்
இழிவுற வேட்டி லானேல்
மீண்டெரி புகுவன் என்னும்
எண்ணமே விளையும் நீராள். (8)

## திரௌபதியின் முகமலர்ச்சி

மங்குலின் மங்குல் மூடி
வயங்கொளி மறைந்து தோன்றாச்
செங்கதிர்ச் செல்வன் போலச்
சீர்கெழு வடிவம் மாறி

அங்கவர் இருந்த தன்மை
அறிந்ததோ? செறிந்த பொய்கைப்
பங்கயம் போன்ற தாலப்
பரிவுறு பாவை பார்வை. (9)

## திட்டத்துய்மன் மன்னர்களைப் பார்த்துக் கூறல்

மணக்கடுங் காதல் விம்ம
மாலைதாழ் புயங்கள் வாட
எனக்கெனக் கென்றென் றேமாந்
திருந்தகா வலரை நோக்கிச்
சினக்கடம் ஒழுகும் கன்னக்
களிற்றான் திட்டத் தாய்மன்
நினைக்கவும் அரிய தொன்றை
நினைவினோ டுரைசெய் வானே. (10)

" சிலையிது ; சிலீமு கங்கள்
இவை; கடுந் திரிகை வேகத்
திலமுகத் துழலு கின்ற
எந்திரத் திகிரி நாப்பண்
நிலையிலா இலக்கம் அஃதே
நெஞ்சுற யாவன் எய்தான்
கலைவலீர் அவற்கே இந்தக்
கன்னியும் உரியள் " என்றான். (11)

## மன்னர் மனங்கலங்குதல்

கண்போல் அம்பும் நுதல் போலும்
கடுங்கார் முகமும் காண்டொறுமத்
திண்போர் வேந்தர் மனக்கலக்கம்
செப்பும் தகைத்தன் றானாலும்
விண்போய் உழன்று சுழல் இலக்கை
மெய்யே எய்து வீழ்த்தி மலர்ப்
பெண்போல் வாளைக் கைப்பிடிக்கும்
பேரா சையினாற் பேதுற்றார். (12)

## தூதி, மன்னவர் திரண்டமையைக் கூறுதல்

"வில்லாண் மையினால் வெங்கருப்பு
வில்லோன் தனக்கே நிகரென்னப்
பல்லார் புகழும் பான்மையினாற்
பதினெண் புவிக்கும் பதியாய
எல்லா அரசும் நின் பொருட்டால்
ஈண்டே திரண்ட இன்னமுதச்
சொல்லாய் நல்லாய் மென்பூவாய்
தோகாய் பாவாய் திரௌபதியே." (13)

## சில மன்னர் ஆண்மைகூறி எழுதல்

முத்தநகைப் பவளஇதழ்க் குளிர்வெண் டிங்கள்
முகத்தாளைக் கைத்தாயர் மொழிந்த காலைச்
சித்திரமொத் துணர்வழிந்து தத்தம் பைம்பொன்
திகழரியா சனத்திருந்தார் சிற்சில் வேந்தர்
அத்தனுவின் பெருமையையும் இலக்கத் துள்ள
அருமையையும் கருதாமல் ஆண்மை கூறி
எத்தனை எத்தனை வேந்தர் ஆசை கூர
யான்யானென் றெழுந்திருந்தார் யானைபோல்வார். (14)

## சில மன்னருடைய திறமையற்ற நிலை

பலருமுடன் அசங்சரித்து மேரு சாரப்
பாரவரி சிலையின்நிலை பார்த்து மீண்டார்
பலரு மொரு கையிற்பிடிக்க அடங்கா வில்லின்
பருமைதனைக் குறித்துமனம் பதைக்கப்போனார்
பலருமலர்க் கைப்படுத்திப் பெயர்க்க மாட்டார்
பணைத்தோள்நொந் தமையுமெனப் பயந்து நின்றார்
பலருமெடுத் தலர்மணிநாண் பூட்ட வாராப்
பரிசொடுமற் றதன் வலிமை பகர்ந்தே விட்டார். (15)

## சல்லியன், பகதத்தன் தோல்வி

வல்லியப்போல் நடந்துதனு இருகையாலும்
வாரியெடுத் தெதிர்நிறுத்தி மல்லல் வாகுச்
சல்லியனும் நாணேற்ற முடியா தந்தத்
தனுவுடனே தன்தனுவும் தகர வீழ்ந்தான்

வில்லியரின் முன்னெண்ணத் தக்க வின்மை
வேந்தடு போர்ப் பகதத்தன் வில்வே தத்தில்
சொல்லியவா றெடுத்தூன்றி மற்றைக் கையால்
தொல்வலிநா ணியுமெடுத்துத் தோளுஞ் சோர்ந்தான். (16)

## சராசந்தன், நீலன், துரியோதனன் தோல்வி

பூகதனு கியவன்றே பகைவ ரெல்லாம்
போற்றவளர்க் துலகாளப் புனைந்த மௌலி
மாகதனும் வில்லெடுத்து வரிநாண் வில்லின்
மார்பளவும் போக்கினன் வன்போர் நீலன்
சாகதனென் றவைதுதிக்க நெடுநாண் கொற்றத்
தனு வொருசாண்எனக்கொணர்ந்தான் சாணேயல்ல
வேகதனு நால்விரலென் றுரைக்க நாணி
வீக்கினன் வலம்புரித்தார் வேந்தர் வேந்தே. (17)

## கன்னன் தோல்வி

கலைவருத்தம் அறக்கற்ற கன்னன் என்னுங்
கழற்காளை அரனிருந்த கயிலை யென்னும்
மலை வருத்தம் அறவெடுத்த நிருதன் என்ன
மன்னவையின் வலியுடனே வந்து தோன்றி
நிலைவருத்தம் அறிநின்று பரிய கோல
நீள்வரிநாண் மயிர்க்கிடைக்கீழ் நின்றதென்னச்
சிலைவருத்தம் அறவளைத்து வளைந்த வண்ணச்
சிலைக்கால்தன் முடித்தலையைச் சிந்த வீழ்ந்தான். (18)

## அர்ச்சுனன், திட்டத் துய்மனைப்பார்த்து வினவுதல்

அரவ நெடுங் கொடியுயர்த்தோன் முதலா உள்ள
அனைவருமங் கொருதனுவுக் காற்றார் ஆகி
உரவுமெலிந் தெழில்மாழ்கிச் செயல்வே றின்றி
உள்ளமழிந் திருந்ததற்பின் உருமே றென்னக்
கரவுடனந் தணர்நாப்பண் இருந்த கொற்றக்
கருமுகில்வா கனன்புதல்வன் கரிய மேனி
இரவிகுலச் சிறுவனைப்போல் எழுந்து மன்றல்
இளங்கொடிதம் முனைநோக்கி இயம்பினனே. (19)

## திட்டத் துய்மன் விடை

"மன்மரபிற் பிறந்திருந்தோ ள்வலியால் இந்த
மண்ணுளு மவர்க்கன்றி மறைநூல் வாணர்
தொன்மரபிற் பிறந்தவரும் இலக்கு வீழ்த்தால்
சூட்டுமோ தொடையல் இளந் தோகை?" என்னத்

தன்மரபுக் கணிதிலக மான வீரன்
"தகவன்றோ மன்றலுக்குத் தாழ்வோ?" வென்றான்
வின்மரபிற் சிறந்தநெடு வில்லை யீசன்
மேருகிரி எடுத்ததெனை விரைவிற் கொண்டான். (20)

## அருச்சுனன் இலக்கை வீழ்த்தல்

இளர்மகுட வயவேந்தர் நாண்கள் எல்லாம்
கிழாகத் தனிநெடுநாண் கிளர ஏற்றித்
தனர்வறுசா யகந்தொடுத்துக் கற்றோர் யாரும்
தனு நூலுக் காசிரியன் தானே யென்ன

உளர்திகிரிச் சுழலிலக்கை அவையோர் தங்கள்
ஊக்கமுடன் விழவெய்தான் உரவுத் தோளான்
வளரு மருந் தவவேள்வி முனிவர் ஆர்த்தார்
வாசநறு மலர் சொரிந்து வானோர் ஆர்த்தார். (21)

## திரௌபதி அர்ச்சுனனுக்கு மாலை சூட்டுதல்

தாஞ்சாரற் கரியதனு வளைத்தா னென்று
தரணிபர்தம் முகங்கருகத் தனுவி னோடும்
பூஞ்சாரல் மணிநீல கிரிபோல் நின்ற
பூசுரனை இவனவனே போன்மென் றெண்ணிப்

பாஞ்சாலர் பதிகன்னி இருதன் செங்கண்
பங்கயத்தாற் பாங்காகப் பரிந்து நோக்கித்
தேஞ்சார நறுங்கழுநீர்ச் செய்ய தாமம்
செம்மணிகால் அருவியெனச் சேர்த்தினாளே. (22)

—வில்லிபுத்தூர் ஆழ்வார்.

## குறிப்புரை

1. வான்மொழி - அசரீரி. தேசிகன் - குருவான உலூகன். உரத்தினர் - அறிவுடைய பாண்டவர். பேதை - மகள். தனஞ்செயன் - அர்ச்சுனன்.

2. வரித்தவற்கே-தேர்ந்தெடுத்தவனுக்கே. தனையை - மகள். கான் - மணம். சுரும்பு - வண்டு. வதுவை - திருமணம்.

3. ஆயும் - குந்தியும். பதி - வேத்திரகியம் என்னும் ஊர்.

4. வெறி - மணம். முளரி - தாமரை. பதன் - சமயம். (ஈற்றுப்போலி) ஈட்டம் - கூட்டம். இரங்க - ஒலிக்க. இறகர் - சிறகு. (ஈற்றுப்போலி)

5. தண்துறை - குளம். உறை - நீர்.

6. தாபதன் - தௌமியமுனிவன். குரீஇ- குருவி. மஞ்சம் - அணையிட்டஆசனம். தெரியல் - மாலை.

7. உலப்பு - அழிவு. தேற்றத்தேற்ற - அடுக்குத்தொடர். தளர்வு - வருத்தம்.

8. பொலிய - விளங்க. இழிவுற - வெட்கமடைய. வேட்டல் - மணத்தல். நீராள் - தன்மையுடையவள்.

9. மங்குல் - ஆகாயம், மேகம். கதிர்ச்செல்வன் - சூரியன். பங்கயம் - தாமரை.

10. கடம் - மதம். களிறு - ஆண்யானை.

11. சிலீமுகம் - அம்பு. காப்பண் - நடு. இலக்கம் - குறி. உழலுகின்ற — சுழலுகின்ற.

12. நுதல் - நெற்றி. கார்முகம் - வில். மலர்ப்பெண் - திருமகள். பேதுற்றார் - மயங்கினர்.

13. கருப்பு வில்லோன் - மன்மதன். நிகர் - ஒப்பு. பூவை - நாகணவாய்ப்புள். தோகாய் - மயில்போன்றவனே. அமுதச்சொல் - உவமத்தொகை. பாவை - உவமையாகு பெயர்.

14. கைத்தாயர் - செவிலியர். பசுமை + பொன் = பைம்பொன். தனு - வில்.

15. வரிசிலை - கட்டமைந்தவில். பனை - பருத்த.

16. வல்லியம் - புலி. வின்மை - வில்வித்தை. நாண் - வில்லின் நாண். வென்றி - விருத்தி.

17, பூதகன் — பூமியில் பிறந்தவன். மௌலி - முடி. மாக தன் - சராசந்தன். சாகதன் - எதனையும் முடிக்கக் கூடியவன். விக்கினன் - கட்டினன். வலம்புரி - நந்தியாவட்டமலர்.

18. அரன் - சிவன். நிருதன் — இராவணன். கோலம் - அழகு.

19. அரவ நெடுங்கொடி உயர்த்தோன் - துரியோதனன். எழில் - அழகு. உருமேறு - இடிபேறு. முகில்வாகனன் - இந்திரன். இரவிகுலச்சிறுவன் - இராமன். இளங்கொடி - திரௌபதி. தம்முன் - தமையன்.

20. மன்மரபு - அரசர்குலம். மறை நூல்வாணர் - அந்தணர். தொடையல் - மாலை. மன்றல் - திருமணம்.

21. ஒளர் - விளங்கும். சாயகம் - அம்பு. திகிரி - சக்கரம். ஆர்த்தார் - ஆரவாரித்தனர்.

22. சாரற்கு - நெருங்குதற்கு. தரணியர் - அரசர். பூசுரன் - அந்தணன். போன்ம் - போலும். (மகரக்குறுக்கம்) தாமம் - மாலை.

## வினாக்கள்

1. பாண்டவர்கள் இறக்கவில்லை என்று பாஞ்சாலன் துணியக் காரணங்கள் எவை?
2. பாண்டவர் வழியில் கண்ட நன்னிமித்தங்கள் எவை?
3. திரௌபதியைத் தூதியர் என்ன சொல்லித் தேற்றினர்?
4. திரௌபதியின் முகமலர்ச்சிக்கு ஆசிரியர் கூறும் காரணம் எது?
5. திட்டத்துய்மன் அரசர்களைப் பார்த்துக் கூறியது என்ன?
6. திட்டத்துய்மன் வார்த்தைகளைக் கேட்ட வேந்தர் எந் நிலையை அடைந்தனர்?

7. வில்லை வளைக்க மன்னர் எடுத்த முயற்சிகளைக் குறித்து 15 வரிகள் எழுதுக.

8. அந்தண வடிவத்துடனிருந்த அர்ச்சுனன், திட்டத்துய்மனைப் பார்த்து என்ன கேட்டான்?

9. அர்ச்சுனன் வில் வளைத்ததை ஆசிரியர் எப்படிக் கூறியுள்ளார்?

10. கீழ் வருவன எவற்றை விளக்க வந்தன?

(a) மலர்ப்பூ ஒன்றைத் தேன் வரித்தல்.

(b) செம்மணிக்கால் அருவி.

(c) இரவிகுலச்சிறுவன்.

(d) அரனிருந்த கயிலை என்னும் மலை எடுத்த விருதன்.

11. பின்வருவன யாரைக் குறிக்கும்? ஏன்?

(a) தனஞ்செயன்.

(b) முகில் வாகனன்.

(c) வலம்புரித்தார் வேந்து.

(d) மாகதன்.

12. இடம் குறி :—

(a) "கலைவலீர் அவற்கே இந்தக்கன்னியும் உரியள்."

(b) "தகவன்றே மன்றலுக்குத் தாழ்வோ."

---

## 15. திருவிளையாடல் புராணம்

[திரு + விளையாடல் + புராணம் — மதுரையிலுள்ள சோம சுந்தரக் கடவுள் அடியார் பொருட்டு விளையாடிய 64 திருவிளையாடல்களையும் கூறும் நூல் திருவிளையாடல் புராணம். இதன் ஆசிரியர், பரஞ்சோதி முனிவர்; வேதாரணியத்தில் பிறந்தவர்; சைவமதத்தினர்; இவர் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தனர் என்பர்.]

## தருமியின் வரலாறு

அந்த வேலையி லாதி சைவரில்
வந்த மாணவன் மணஞ்செய் வேட்கையான்
முந்தை யாச்சிம முயலும் பெற்றியான்
தந்தை தாயிலான் தருமி என்றுளான். (1)

## தருமிஇறைவன் முன் நின்று வேண்டல்

தந்தை தாயிலேன் தனிய னாகிய
மைந்த னேன்புது வதுவை வேட்கையேன்
சிந்தை நோய்செயும் செல்லல் தீர்ப்பதற்கு
எந்தை யேயிது பதமென் றுஏத்தியே. (2)

ஐய யாவையும் அறிதியே கோலாம்
வையை நாடவன் மனக்க ருத்துணர்ந்(து)
உய்ய வோர்கவி உரைத்தெ னக்கருள்
செய்ய வேண்டுமென் றிரந்து செப்பினான். (3)

## இறைவன் பாடல் இயற்றித் தருதல்

தென்ன உன்குல தெய்வ மாகிய
மன்னர் கொங்குதேர் வாழ்க்கை இன்தமிழ்
சொன்ன லப்பெறச் சொல்லி நல்கினார்
இன்னல் தீர்ந்தவன் இறைஞ்சி வாங்கினான். (4)

## தருமி பாடலுடன் சங்கம் சாருதல்

பொற்ற னிச்சடைப் புவன நாயகன்
சொற்ற பாடல் கைக் கொண்டு தொன்னிதி
பெற்றெ டுத்தவன் போன்று பீடுறக்
கற்ற நாவலர் கழக நண்ணினான். (5)

## சங்கப்புலவர் அப்பாடலைக் கண்டு மகிழ்தல்

கல்வி யாளர்தங் கையி னீட்டினான்
வல்லை யாவரும் வாங்கி வாசியாச்
சொல்லின் செல்வமும் பொருளுந் தூக்கியே
நல்ல நல்லவென் றுவகை நண்ணினார். (6)

### பாண்டியன் பாடல் கண்டு மகிழ்தல்

அளக்கில் கேள்வியா ரரசன் முன்புபோய்
விளக்கி யக்கவி விளம்பி னர்கள்தன்
உளக்க ருத்துநே ரொத்த லாற்சிரம்
துளக்கி மீனவன் மகிழ்ச்சி தூங்கினான். (7)

### கிழியறுக்கும் தருமியைக் கீரன் தடுத்தல்

வேந்த னேவலால் விபுதர் தம்மொடும்
போந்து மீண்டவைப் புறம்பு தூங்கிய
ஆய்ந்த பொற்கிழி யறுக்கும் நம்பியை
கேர்ந்து கீரன்நில் எனவி லக்கினான். (8)

### நக்கீரன் இக்கவி குற்றமுடைத்தெனல்

குற்ற மிக்கவிக் கென்று கூறலும்
கற்றி லானெடுங் காலம் வெம்பசி
உற்ற வன்கலத் துண்ணு மெல்லைகைப்
பற்ற வாடினான் பண்பு பற்றினான். (9)

### தருமி வாடிய மனத்துடன் இறைவனை அடைதல்

உலர்ந்த நெஞ்சுகொண் டொதுங்கி நாயகன்
நலந்த ருங்கழல் நண்ணி னனவன்
மலர்ந்த பாடல்கொண் டறிஞர் வைகிடத்(து)
அலர்ந்த சிந்தைகொண் டடைந்த மைந்தனே. (10)

### தருமி இறைவனிடம் சென்று முறையிடுதல்

செய்யுள் கொண்டுபோய்த் திருமுன் வைத்துளப்
பையுள் கொண்டவப் பனவ னென்னை நீ
மையுள் கண்டஇவ் வழுவு பாடலைக்
கையுள் நல்கினய் கதியி லேற்கெனா. (11)

வறுமைநோய் பிணிப்பப் பன்னாள் வழிபடு மடியே னின்பால்
பெறுபொரு ளிழந்தே னென்று பேசிலேன் யார்க்கு மேலாங்
கறைகெழு மிடற்றோய் நின்றன் கவிக்குற்றம் சில்வாழ் நாட்சிற்
றறிவுடைப் புலவர் சொன்னா லாருனை மதிக்க வல்லார். (12)

## இறைவன் தமிழ்ப் புலவனாய்த் தோன்றல்

எந்தையிவ் விகழ்ச்சி நின்ன தல்லதை எனக்கியா தென்னுச்
சிந்தைநோ யுழந்து சைவச் சிறுவனின் றிரங்க யார்க்கும்
பந்தமும் வீடும் வேதப் பனுவலும் பயனுமான
சுந்தர விடங்க னங்கோர் புலவனாய்த் தோற்றம் செய்தான்.(13)

## இறைவன் கொண்ட கோலங்கள்

கண்டிகை மதாணி யாழி கதிர்முடி வயிரம் வேய்ந்த
குண்டலம் குடிகொண் டாகத் தழகெலாங் கொள்ளை கொள்ளத்
தண்டமிழ் மூன்றும் வல்லோன் தானெனக் குறியிட்டாங்கே
புண்டர நுதலிற் பூத்துப் பொய்யிருள் கிழித்துத் தள்ள. (14)

விரிகதிர்ப் படாத்திற் போர்த்த மெய்ப்பையு ளடங்கிப் பக்கத்
தெரிமணிக் கடகத் திண்டோ ளிளையவ ரடைப்பை யோடுங்
குருமணிக் களாஞ்சி யம்பொற் கோடிகம் தாங்க முத்தால்
புரிமதிக் குடைக்கீழ்ப் பொற்கால் கவரிபால் புரண்டுதுள்ள(15)

## இறைவன் புலவனாய்ச் சங்கம் அடைதல்

சொல்வரம் பிகந்த பாத மென்பது தோன்ற வேதம்
நல்லபா துகையாய்ச் சூட நவின்றன கற்றுப் பாட
வல்லவர் மறையி னறு மனுமுதற் கலைபோற் பின்பு
செல்லநூ லாய்ந்தோர் வைகுந் திருந்தவைக் களத்தைச் சேர்ந்
[தான். (16)

## இறைவன் இக்கவிக்குக் குற்றங்கூறியவன் யாரெனல்

ஆரவை குறுகி நேர்நின் றங்கிருந் தவரை நோக்கி
யாரைநம் கவிக்குக் குற்ற மியம்பினு ரென்னு முன்னம்
கீரனஞ் சாது நானே கிளத்தினே னென்று நின்ற
சீரணி புலவன் குற்றம் யாதெனத் தேராக் கீரன். (17)

## நக்கீரன் இக்கவியில் பொருட் குற்றமெனல்

சொற்குற்ற மின்று வேறு பொருட்குற்றம் என்றான் தூய
பொற்குற்ற வேணியண்ணல் பொருட்குற்ற மென்னை என்றான்
தற்குற்றம் வருவதோரான் புனைமலர்ச் சார்பாலன்றி
அற்குற்ற குழற்கு நாற்ற மில்லையே என்றான் ஐயன். (18)

### நக்கீரன் கூந்தற்கு மணம் செயற்கையாலெனல்

பங்கய முகமென் கொங்கைப் பதுமினி குழலோ என்ன
அங்கது மணத்தே என்றான் ஆலவா யுடையான் தெய்வ
மங்கையர் குழலோ வென்ன அன்னது மந்தாரத்தின்
கொங்கல ரளைந்து நாறுங் கொள்கையாற் செய்கைத் தென்றான். (19)

### நக்கீரன் தான் வழிபடும் அம்மன் கூந்தலும் அவ்வாறே எனல்

பரவிநீ வழிபட் டேத்தும் பரஞ்சுடர் திருக்கா ளத்தி
அரவுநீர்ச் சடையார் பாகத் தமர்ந்தஞா னப்பூங் கோதை
இரவினீர்ங் குழலு மற்றோ வெனவஃது மற்றே யென்னா
வெருவிலான் சலமே முற்றச் சாதித்தான் விளைவுநோக்கான். (20)

### நக்கீரன் நும்பாடல் குற்றங் குற்றமேயெனல்

கற்றைவார் சடையா னெற்றிக் கண்ணினைச் சிறிதே காட்டப்
பற்றுவான் இன்னும் அஞ்சான் உம்பரார் பதிபோ லாகம்
முற்றுநீர் கண்ணு ளுலும் மொழிந்த நும்பாடல் குற்றங்
குற்றமே என்றான் தன்பா லாகிய குற்றந் தேரான். (21)

### நெற்றிக்கண் தீபாய நக்கீரன் வாவியுள் வீழ்தல்

தேய்ந்த நாண்மதிக் கண்ணியான் நுதல்விழிச் செந்திப்
பாய்ந்த வெம்மையிற் பொருதுபொற் பங்கயத் தடத்துள்
ஆய்ந்த நாவலன் போய்விழுந் தாழ்ந்தன னவனைக்
காய்ந்த நாவல னிம்மெனத் திருவுருக் கரந்தான். (22)

—பரஞ்சோதி முனிவர்.

### குறிப்புரை

1. வேட்கையான் - விருப்பமுள்ளவன். முந்தை ஆச்சிமம் - பிரமசரியநிலை. பெற்றி-தன்மை.

2. வதுவை - திருமணம். செல்லல் - துன்பம். பதம் - சமயம். ஏத்தி - துதித்து.

3. வையைநாடவன் - பாண்டியன். உய்ய-நன்மையடைய. இரங்கு - பாசித்து.

4. தென்னவன் - பாண்டியன். சொக்கு - மகரந்தம், இக்கு மணம். இன்னல் - துயரம்.

5. புவனநாயகன் - சிவபிரான். கிதி - பொருள். பீடு - பெருமை. கழகம் - சங்கம்.

6. வல்லே - விரைவு. தூக்கி - ஆராய்ந்து. உவகை - மகிழ்ச்சி.

7. சிரம் - தலை. துளக்கி - அசைத்து. மீனவன் - மீன் கொடியுடைய பாண்டியன். தூங்கினன் - தங்கினன்.

8. விபுதர் - புலவர். போந்து - போய். தூங்கிய - தொங் கிய. நேர்ந்து - அழைத்து.

9. கலம் - உண்கலம். எல்லே - சமயம். பண்பு - தன்மை.

10. நாயகன் - கடவுள். கழல் - திருவடி. நண்ணினன் - அடைந்தான். மலர்ந்த - திருவாய் மலர்ந்த.

11. பையுள் - துன்பம். பனவன் - அந்தணன். வழுவு - குற்றமுள்ள. கதி இலேன் - ஒருபற்று மில்லாதேன்.

12. கறை - நஞ்சுக் கறுப்பு. கெழு - பொருந்திய. மிடறு - கழுத்து.

13. உழந்து - வருந்தி. பந்தம் - பற்று. பனுவல் - மறை நூல். விடங்கன் - உளிபடாத இறைவன், அழகன்.

14. கண்டிகை - மகரகண்டிகை. மதாணி - பதக்கம். ஆழி- மோதிரம். குண்டலம் - காதணி. ஆகம் - மார்பு. புண்டரம் - திருநீற்றின் கீற்று. நுதல் - நெற்றி.

15. படாம் - ஆடை. மெய்ப்பை - உடலங்கி, சட்டை, அடைப்பை - வெற்றிலைப்பை. களாஞ்சி - தாம்பூலத்தட்டு, உமி ழுங்கலன். கோடிகம் - பூந்தட்டு. கவரி - சாமரம்.

16. இகந்த - கடந்த. நவின்றன - கூறியருளிய பாசுரங்கள்.

17. ஆரவை - அரிய அவை, புலவர் நிறைந்த அவை. ஊைத்தினேன் - கூறினேன்.

18. தூய - தூய்மையான. வேணி - சடை. அற்கு உற்ற குழல் - இருளைபொத்த கூந்தல்.

19. பங்கயம் - தாமரைமலர். பதுமினி - பதுமினிப் பெண். கொங்கு - மணம். அளைந்து - கலந்து.

20. இரவின் ஈர் குழல் - இரவைப் போன்ற தண்ணிய கூந்தல். வெருவு - அச்சம். சலம் - பொய், சினம். சாதித்தல் - படைத்து மொழிதல்.

21. உம்பரார்பதி - இந்திரன். தேரான் - அறியாதவன்.

22. கண்ணி - தலைமாலை. பொற்பங்கயத் தடம் - பொற்றாமரைக் குளம். காய்ந்த - சினந்து ஒறுத்த. இம்மென - விரைவுக் குறிப்பு. கரந்தான் - மறைந்தான்.

வினாக்கள்

1. தருமி இறைவனை நோக்கி, எவ்வாறு வேண்டுகின்றான் ?
2. பாண்டியனைக் குறிக்கும் தொடர்கள் எவை ?
3. இறைவன் பாடிக்கொடுத்த செய்யுளின் தொடக்கம் யாது ? அச்செய்யுளின் கருத்தென்ன ?
4. "நல்ல நல்ல வென்றுவகை நண்ணினார்" இதன் சந்தர்ப்பம் யாது ?
5. நக்கீரர் கவிக்குக் குற்றம் சொன்ன பொழுது தருமி யடைந்த நிலைமைக்குக் கொடுத்துள்ள உவமை யாது ?
6. இறைவன் புலவன் கோலங்கொண்டதை வருணித்துத் தொகுத்து வரைக.
7. "தண்டமிழ் மூன்றும் வல்லோன் தானென" இவ்வாறு அறிவிப்பவை யாவை ?
8. இறைவற்கும் நக்கீரர்க்கும் நடந்த வாதத்தைச் சம்பாஷணை முறையில் வரைந்து காட்டுக.

## 6. இரட்சணிய யாத்திரிகம்

[இந்நூலின் ஆசிரியர் H. A. கிருஷ்ணப் பிள்ளை, திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள ரெட்டியார் பட்டியில் வேளாளர் குலத்தில் பிறந்து பின் கிறிஸ்தவராக மாறினார்; இவர், காலம் 19-ஆம் நூற்றாண்டு. கிறிஸ்தவன் வீட்டுலகம் செல்லும் விதத்தைக் கூறும் நூல், இரட்சணிய யாத்திரிகம். ஆங்கிலத்திலுள்ள ஜான் பனியன் என்பார் இயற்றிய "The pilgrim's progress" என்னும் நூலைப் பின்பற்றியது இந்நூல்.]

## மகளிர், கிறிஸ்து அடைந்த கலிலேய நாட்டிற்குச் செல்லுதல்

*உன்ன தேசன் உயிர்த்தெழுந் தாரெனச்
சொன்ன சொல்லமு(து) அஞ்செவி தோய்தலும்
மன்னு நித்திய வாழ்வுகை வந்தெனப்
பொன்ன னார்க்குட் சிறந்தது புத்துயிர். (1)*

*உரையி றந்த உவகைப் பெருங்கடல்
கரைபு ரண்டு கதித்ததுக் காக்கினி
விரைவின் மாய்ந்திட மெல்லியலா ரெழுந்(து)
உரைசெய் வாந்திருத் தொண்டர்க்(கு) என்றோடினர்.(2)*

## கிறிஸ்துநாதர் தோன்றுதல்

*தூதர் சொற்ற சுமங்கல வார்த்தைகொண்
டேத மில்லவர் ஏகுழி எம்முயிர்
காதன் கண்ணெதிர் தோன்றி நலங்கிளர்
மாதரீர் நன்கு வாழ்கென வாழ்த்தினர். (3)*

*அருளின் வாழ்வை அறங்கிளர் ஆரணப்
பொருளை யன்பின் புணரியைப் புங்கவர்
தெருளுஞ் சின்மய தேசிக மூர்த்தத்தை
மறுவொன் றின்றி மடந்தையர் நோக்கியே. (4)*

*உழுவ லன்பொ டுளங்கனிந் தொல்லெனக்
கழுதின் வன்றலை யைத்தெறு காற்றுணை
தொழுது வீழ்ந்தனர் பன்முறை தோத்திரித்(து)
எழுது பாவையன் னாரினி(து) ஏத்தினர். (5)*

## கிறிஸ்துநாதர் அருளி மறைதல்

*நன்று யாவும் நவிவுறு சீடருக்(கு)
இன்றி யம்பி எனைக்கலி லேயநாட்
டொன்ற வின்னுமின் உள்ளங் கலங்கன்மின்
என்று ரைத்தக் கரந்தனர் எம்பிரான். (6)*

## இயேசுநாதர் தரிசனம் அளித்தல்

ஆன போழ்தத் தடியவர் காப்பனே
தூந லந்திகழ் மேனியில் தோன்றிகத்
தீன ரட்சக தெய்வதம் மெய்ச்சமா
தான நல்கித் தழைக்க என்றாரரோ! (7)

அண்டர் நாயகன் தோன்றி அலரிதழ்
விண்ட வாய் மொழி கேட்டும் விழிக்கெதிர்
கண்டும் இன்னுங் கலங்கின தன்றி மெய்த்
தொண்ட ருள்ளம் துறந்தில(து) ஐயமே. (8)

அய்ய முந்திகி லுங்கலந்(து) அம்புவி
உய்ய வந்திங்(கு) உயிர்த் தெழுந்துன்னத
தெய்வி கந்திகழ் மேனியைத் தேர்கிலார்
வெய்ய ஆவியி தென்று வெருண்டனர். (9)

## இயேசுநாதர் இன்மொழி இயம்பல்

சிந்தை தேருந் திருத்தகு தெய்விக
மைந்தன் ஓர்ந்து மனங்கலங் காதிர்நீர்
எந்த ஆவியும் யானுறு மானவ
விந்தை யாக்கை படைத்தில மெய்ம்மையால். (10)

பாரு மின்பரி சித்தென் பதாதியை
ஓரு முன்னுரை யானன்றி உண்மைவே
றூரு மில்லர்மற் றையுற லீர்எனுத்
தேரு மாறு தெருட்டினர் சிந்தனை. (11)

## சீடர் சித்தம் தெளிவடைதல்

இத்தி றங்கிறிஸ் தியேசுவி னிறிலா
மெய்த்த வத்திரு மேனி விளங்கலின்
சித்த சஞ்சல நீங்கித் திகழ்ந்தனர்
சுத்த மெய்விசு வாசத்திற் றேமிலார். (12)

## காவலர் இச்செய்தியைக் குருமார்க்கு அறிவித்தல்

அஞ்சி நெஞ்ச மழுங்கி யயர்ந்து வீழ்ந்
துஞ்ச காவல ரோடி உலப்பிலான்
எஞ்சு ருத எழுச்சியும் யாவையும்
வஞ்ச கக்குர வர்க்கு வகுத்தனர். (13)

## அரசன் முதலியோர் அஞ்சுதல்

மன்ன னஞ்சி வறிதுள மாழ்கினன்
ஒன்ன லார்நெஞ் சுரங்கிழி பட்டனர்
பன்ன லாந்தர மன்று வெம் பாழ்மதி
துன்னி யோரெவ ருந்துனுக் குற்றனர். (14)

## கிறிஸ்துநாதர் அடியவர்க்குச் செய்வன கூறுதல்

"நண்பு ளீருல கெங்கணும் நரசமூ கங்கட்
கெண்பெ றுஞ்சுவி சேடத்தை இயம்புமின் இதயக்
கண்ப டைத்தவன் கதிநலம் பெறுகுவன் காணும்
பண்பி லாதவ னுக்கினைத் தீர்ப்பினுட் படுவான். (15)

"கண்டு கேட்டமெய்ச் சான்றுநீர் கருதிலேன் தந்தை
விண்ட வாறினி யருட்பலம் விண்டலத் திழிந்து
மண்ட லத்துமை மருவுமட் டெருசலேம் மருவித்
தொண்ட ரீர்மலங் காதவண் தரித்திரும் துன்னி. (16)

"ஒன்றி நும்முட னிருப்பன்யான் உலகமுள் ளளவும்
என்று வாய்மையி னிலகுசெவ் வாய்மலர்ந் தியம்பி
நின்றெ ழிற்றிருக் கரங்களை வானுற நிமிர்த்தி
நன்று மங்கல விடையரு ளாசியும் நவின்றார். (17)

## இயேசுநாதர் துறக்கம் எய்துதல்

ஆசி மங்கள சாதன மருளிய அமயம்
மாசி லாவருள் முகிலையோர் மழைமுகில் வளைப்பத்
தேசு மல்கிய திருவுருக் காண்கிலார் சீடர்.
மூசு பைம்புயல் விசும்புற முடுகுதல் கண்டார். (18)

மிக்க பேரதி சயத்தொடு மேலுற நோக்கித்
தொக்கு நின்றவே தியர்மருங் கோரிரு தூதர்
புக்கிவ் வாண்டகை பேசிய புதுமையே போல
மைக்க ரும்புயல் மீதுற மீண்டினி வருவார். (19)

மேக வாகன ரூடராய் விட்புலந் துருவி
மாக மீதுமீ துயர்பதம் யாவையும் வரைந்து
சோக நீங்கிய சுரகணந் தொழுதுவாழ்த் தெடுப்ப
ஏக நாயகன் சந்நிதி யடைந்தனர் எம்மான். (20)

—H. A. கிருஷ்ணப் பிள்ளை.

குறிப்புரை

1. உன்னத + ஈசன் = உன்னதேசன். உயிர்த்து - உயிர் பெற்று. மன்னு - நிலைபெற்ற. பொன்னனூர் - திருமகள் போன்றவர்.

2. இறந்த - கடந்த. உவகை - மகிழ்ச்சி. கதித்த - பெருகின. துக்காக்கினி - துக்க அக்கினி.

3. ஏதம் - குற்றம். நலம் - அழகு.

4. புணரி - கடல். புங்கவர் - மேன்மக்கள். தெருளும் - தெளிவடையும். சின்மயம் - ஞானமயம். மூர்த்தம் - வடிவம். மருள் - மயக்கம்.

5. உழுவலன்பு - எழுமையுந்தொடருமன்பு. கழுது - தீவினையாகிய பேய். தெறு - அழிக்கின்ற.

6. நலிவு - வருத்தம். நாட்டு — நாட்டிற்கு. ஒன்ற — பொருந்த. கரந்தனர் — மறைந்தனர்.

7. நாப்பண் - நடுவில். தீனரட்சகன் — ஏழைகளைக் காப்பவன்.

8. இதழ்விண்ட - திருவாய் மலர்ந்த. துறத்தல் - விடுதல்.

9. அம்புவி - உலகம். உய்ய - பிழைக்க. உன்னதம் - உயர்வு. வெருண்டனர் - பயப்பட்டனர்.

10. ஓர்ந்து - எண்ணி. விந்தை - வியப்பு.

11. பரிசித்தல் - தொடுதல். தெருட்டல் - தெளியப்பண்ணுதல்.

12. சித்தம் - உள்ளம். சஞ்சலம் - கலக்கம்.

13. உலப்பிலான் - அழிவிலான். எஞ்சுதல் - குறைதல்.

14. ஒன்னலார் - பகைவர். உரம் - மார்பு. பன்னல் - சொல்லுதல்.

15. நரசமூகம் - மக்கட்தொகுதி. இதயம் - உள்ளம்.

16. மருவி - அடைந்து. துன்னி - அமைந்து.

17. இலகு - விளங்கு. எழில் - அழகு.

18. அமயம் - சமயம். மாசு - குற்றம். தேசு - ஒளி. புயல் - மேகம்.

19. அதிசயம் - வியப்பு. தொக்கு - ஒன்றுசேர்ந்து.

20. வாகனரூடர் - வாகனத்திலேறியவர். மாகம் - வானம். சாரணம் - தேவர்தொகுதி.

### வினாக்கள்

1. "கழுதின் வன்தலையைத் தெறுகாற்றுமினை". இதன் பொருள் வரைந்து இடமுங் குறிப்பிடுக.
2. "மெய்ச் சமாதானம் நல்கித் தழைக்க" இடங்குறிப்பிடுக.
3. "தெருமாறு தெருட்டினர் சிந்தனை" யார் யாரைத் தெருட்டினர்? தெருட்டிய சொற்கள் எவை?
4. கிறிஸ்துநாதர், தம் அடியவர்க்குப் பணித்த மொழிகள் எவை?
5. இயேசுநாதர் துறக்கத்திற்குச் சென்றது பற்றிச் சுருக்கி வரைக.

## 7. சீறாப் புராணம்

[இந்நூல், முகம்மது நபியின் வரலாற்றைக் கூறும் நூல். இதனை இயற்றியவர், உமறுப் புலவர்; இவர், இஸ்லாம் மதத்தினர்; எட்டைய புரத்திலிருந்த கடிகைமுத்துப் புலவரின் மாணவர்; இவர் காலம், 17-ஆம் நூற்றாண்டு.]

## நபி அவதாரப் படலம்

பெருகிய கோடி சந்திரப் பிரகாசமாய்
வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே
கருணைவீற் றிருந்தசெங் கமலக் கண்ணினைத்
திருநபி வருமவ தாரஞ் செப்புவாம். (1)

## அப்துல்லாவின் இயல்புகள்

கொன்னுனை வெண்ணிறக் கோட்டு வாரணச்
செந்நிறக் குருதியில் திமிர்ந்து வாய்கழீஇ
மின்னவிர் கணமணி விளங்கு மாமுடி
ஒன்னலர் உயிரைமேய்ந் துறங்கும் வேலினர். (2)

முடங்கலங் கைதைமுள் ளெயிற்று வெண்மணிப்
படங்களா யிரத்தினும் பரித்த பாரெலாம்
இடங்கொள் பூதரப் புயத்திருத்தி ஏதிலார்
மடங்கலே றெனுமன வலியின் மாட்சியார். (3)

மாக்கட னெடும்புவி விளைந்த வன்கலி
நீக்கிய வெண்குடை நீழ லோம்புவோர்
வீக்கிய கழலடி வேந்தர் பொன்முடி
தாக்கிய மறுச்செழுங் கமலத் தாளினர். (4)

## அப்துல்லா அரசுபுரிந்த நல்ல நகரம்

வரபதி யுலகெலாம் வாழ்த்து மக்கமா
புரபதிக் கதிபதி என்னும் பூபதி
பரபதி அரசர்கள் பணிந் திறைஞ்சிய
நரபதி அப்துல்லா என்னும் நாமத்தார். (5)

## அப்துல்லாவின் அரிய மேன்மை

செழுமழை முகிலென அமுதஞ் சிந்திட
வழிகதிர் நபியென வகுத்த பேரொளி
பொழிகரத் தப்துல்லா விடத்திற் பொங்கியே
எழில்தரு திருநுத லிடத்தி லங்குமே. (6)

### ஆமினுவி னளவிடற் கரிய அழகு

அயிலுறை செழுங்கரத் தப்துல் லாவெனும்
பெயரிய களிறுக்கோர் பிடியும் போலவர்
உயிரென இருந்தசைந் தொசிந்த பூங்கொடி
மயிலெனு மாமினு என்னு மங்கையே. (7)

### ஆமினுவின் அரிய கற்பு

இற்புகுந் தெழுமதி யிலங்கு மாமணி
விற்புரு வக்கடை மின்க ணுயகம்
பொற்பெலாம் பொதிந்தபொற் கொடிநற் பூவையர்
கற்பெலாந் திரண்டுருக் கொண்ட கன்னியே. (8)

### ஆமினுவின் அறமுதலிய இயல்புகள்

அறத்தினுக் கில்லிட மருட்கோர் தாயகம்
பொறுத்திடும் பொறுமையிற் பூமிக் கெண்மடங்
குறைப்பெருங் குலத்தினுக் கொப்பி லாமணி
சிறப்பினுக் குவமையில் லாத செல்வியே. (9)

குணிப்பருங் குறைஷியங் குலமென் றோங்கிய
மணிப்பெருங் கடலிடை வளருஞ் செல்வமே
தணிப்பிலா தெடுத்தெறி தரங்க மேனடுப்
பணிப்படா தெழுந்தசெம் பவளக் கொம்பனுர். (10)

### ஆமினுவினது இல்லற வாழ்க்கை

இத்தகைக் குலமயி லாமி னுவெனும்
முத்தவெண் ணகைக்கனி மொழியு மோகனச்
சித்திர அப்துல்லா என்னும் செம்மலும்
ஒத்தினி தமுதமுண் டுறையும் நாளினில். (11)

### முகம்மது நபியின் அவதாரம்

நெறிநிலை திரியா மருள்மத மிகுந்து நெடுநிலம் எங்கணும் பரந்து
துறவறந் தவறி இல்லற மடிந்து சுடரிலா மனையது போலக்
குறைபடுங் காலம் இருளெனுங் குபிரின் குலமறுத் தறநெறி
[விளங்க
மறுவிலா தெழுந்த முழுமதி போல முகம்மது நபிபிறந் தனரே.
(12)

—உமறுப்புலவர்.

## குறிப்புரை

1. மதியம் - சந்திரன். கமலம் - தாமரைமலர். கண்ணிணை - இரண்டு கண்கள். அவதாரம் - பிறப்பு.

2. கொன் - பெருமை. கோடு - தந்தம். வாரணம் - யானை. குருதி - இரத்தம். ஒன்னலர் - பகைவர். மேய்ந்து - உண்டு.

3. கைதை - தாழை. எயிறு - பல். பரித்த - தாங்கிய. பார் - பூமி. பூதரம் - மலை. ஏதிலார் - பகைவர். மடங்கலேறு - ஆண் சிங்கம்.

4. புவி - உலகு. கலி - வறுமை. ஓம்புதல் - காத்தல். வீக்கிய - கட்டிய. மறு - கறை.

5. புரம் - நகரம். அதிபதி - தலைவன். பூபதி - அரசர். நரபதி - மக்கட்குத் தலைவன்.

6. முகில் - மேகம். கரம் - கை. எழில் - அழகு. நுதல் - நெற்றி.

7. அயில் - வேல். பிடி - பெண்யானை. ஒசிந்த - துவண்ட.

8. பொற்பு - அழகு. பொதிந்த - ஒன்றுகூடிய. பூவையர் - பெண்கள்.

9. தாயகம் - பிறப்பிடம். பெற்றுத்திடும் - தாங்கிடும்.

10. தணிப்பு - தணிவு. தரங்கம் - அலை.

11. செம்மல் - உதவியாளன். உறைதல் - வாழ்தல்.

12. நெறி - நல்வழி. மறுவிலாது - கறையிலாது. மதி - சந்திரன்.

## வினாக்கள்

1. அப்துல்லாவிடம் அமைந்துள்ள இயல்புகளைத் தொகுத்து எழுதுக.
2. அப்துல்லாவின் திருவடிகளில் காணப்படும் மறுக்கள் எப்படி ஏற்பட்டன?
3. ஆமினாவின் கற்பின் திறத்தை ஆசிரியர் எவ்வாறு வருணிக்கின்றார்?
4. நபி பிறந்ததற்குக் கொடுத்துள்ள உவமை யாது?

# 8. மனோன்மணீயம்

[இந்நூல், பாண்டியன் மகளான மனோன்மணியின் கதையை நாடகவடிவில் கூறும். இந்நூலின் ஆசிரியர், P. சுந்தரம் பிள்ளை, M. A. இவர், திருவாங்கூர் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராக இருந்தவர்; சைவர்; காலம் 19 – ஆம் நூற்றாண்டு.]

அங்கம் 4] [களம் 1

## ஜீவகன் கூறுதல்

**ஜீவ** :—விந்தம் அடக்கினோன் தந்தநற் றமிழ்மொழி
தற்சுதந் தரமறும் அற்பர் வாய்ப்படுமோ?

**படைகள்** :—தமிழ்மொழிக்கு ஜே! ஜே!

**ஜீவ** :—பழையோர் பெருமையுங் கிழமையுங் கீர்த்தியும்
மன்னிய அன்பினும் அன்னையார் பாடி
நித்திரை வருவகை யொத்தறுத் துமது
தொட்டில்தா லாட்ட அவ் இட்டமாம் முன்னோர்
தீரமும் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணுங் கண்ணீர் நிறையக்
கண்டுயி லாதுநீர் கனிவுடன் கேட்ட
வண்டமிழ் மொழியால் மறித்திக் காலம்
ஆற்றிலம் ஆண்மையும் உரிமையும் ஒருங்கே
தோற்றனம் எனச்சொலத் துணிபவர் யாவர்?

**படைகள்** :—சீச்சீ!

**ஜீவ** :—இன்றுநீர் சிந்தும் இரத்தமோர் துளியும்
நின்றுகம் பலவு நிகழ்த்துமே இந்தப்
பாண்டியர் உரிமை பாராட்டும் பண்பினர்
நீண்டன்பின் இருந்தலீர்! அவர்தம் செருக்குற

சுதந்தரம் அவர்க்குயிர் ! சுவாசமற் றன்று !
நினையுமின் நன்ருய்க் கனவிலும் இதனை
எனமுர சறையுமே எத்திசை யார்க்கும்
இத்தனிப் போரில்நீ ரேற்றிடும் காயம்
சித்தம் களித்துச் செயமா தூமக்கு
முத்தமிட்(டு) அளித்த முத்திரை யாகி
எத்தனை தலைமுறைக்(கு) இலக்காய் நிற்கும் !

படைகள் :—ஜே ! ஜே !

ஜீவ :—போர்க்குறிக் காயமே புகழின் காயம்
யார்க்கது வாய்க்கும் ? ஆ ! ஆ ! நோக்குமின் !
அனந்தம் தலைமுறை வருந்தனி மாக்கள்
தினந்தினந் தாமனு பவிக்கும் சுதந்தரம்
தந்ததம் முன்னோர் நொந்தபுண் ணெண்ணிச்
சிந்தையன் புருகிச் சிந்துவர் கண்ணீர் !
என்ருலப்புண், 'இரந்து கோட்டக்கது'
அன்ரே ? அறைவீர் ! ஐயோ ! அதுவும்
புண்ணே ? புகழின் கண்ணே ! எவரே
புண்படா துலகில் புகழுடம் படைந்தார் ?
புகழுடம் பன்றியில் விகழுடம் போமெய் ?
பிறந்தார் என்போர் புகழுடன் சிறந்தோர்
அப்பெரும் புகழுடம் பிப்படி யின்றிதோ !
சுலபமாய் நுமக்கெதி ரணுகலால் துதித்துப்
பலமுறை நுமது பாக்கியம் வியந்தோம் !
ஒழுக்கமற் றன்றது வெனினும் உம்மேல்
அழுக்காறுஞ் சிறி(து) அடைந்தோம் ! நும்மோடு
இத்தினம் அடையும் இணையிலாப் பெரும்புகழ்
எத்தனை யாயிரம் ஆயிரம் கூறிட்டு
ஒத்ததோர் பங்கே யுறுமெனக் கெனவே
ஓடுமோர் நினைவிங் கதனல் வீரர்காள் !
நீடுபோர் குறித்திவண் நின்றோர் தம்முள்
யாரே யாயினும் சீராங் தங்கள்
உயிருடம் பாதிகட் குறுமயர் வுன்னிச்
சஞ்சலம் எய்துவோர் உண்டெனில் சாற்றுமின் !

படைகள் :—இல்லை ! இல்லை ! இங்கத்தகைப் புல்லியர்.

ஜீவ :—குறையெனக் கருதன்மின் ! எம்புகழ்க் கூறு
சிறிதா மெனவுனிச் செப்பினேம் ! அதனால்
பிறிதுநீர் நினையிர் ! பேசுமின் உண்மை !

—P. சுந்தரம் பிள்ளை

குறிப்புரை

விந்தம் அடக்கினேன் - அகத்தியன். மன்னிய - நிலைபெற்ற. பரிவு - அன்பு. கனிவு - உருக்கம். ஆற்றிலம் - செய்திலம். உகம் - யுகம். செருக்கு - அகங்காரம். சுவாசம் - மூச்சு. செயமாது - வெற்றித்திருமகள். இலக்கு - அடையாளம். காயம் - புண், உடம்பு. அனந்தம் - பல. கோட்டக்கது - கொள்ளத் தக்கது. அறைவீர் - கூறுவீர். அழுக்காறு - பொறாமை. இணையிலா - ஒப்பில்லாத. கூறிட்டு - பங்கிட்டு. இவண் - இங்கு. அயர்வு - தளர்ச்சி. உன்னி - நினைத்து. சஞ்சலம் - கலக்கம். எய்துவோர் - அடைவோர். சாற்றுமின் - சொல்வீர்.

வினாக்கள்

1. விந்தம் அடக்கினேன் யார்? அவ்வாலாறு என்ன ?
2. தமிழ் மொழி தந்தவர் யார் ? எவ்வாறு தந்தனர் ?
3. "கண்டியிலாது நீர் கனிவுடன் கேட்ட" கேட்டது யாது? கேட்டவர் யார் ? யார் மொழியக் கேட்டனர் ? எப்பொழுது கேட்டனர் ?
4. வீரர்கள் போரில் ஏற்றிடுமே காயம் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளது ?
5. 'இரந்து கோட்டக்கது' எது ? எப்படி ? இத்தொடர் எந்தக் குறளின் பகுதி ?
6. "புகழுடம் பன்றியிவ் விகழுடம் போமெய் ?" இத்தொடர், எந்தக்குறளின் கருத்தடங்கியது ?
7. "உம்மேல் அழுக்காறும் சிறிதடைந்தோம்" இப்படிக் கூறக்காரணமென்ன ?
8. ஜீவகன், படைகளை நோக்கி, ஊக்கமுண்டாகக் கூறும் மொழிகளைச் சுருக்கிவரைக.

# IV. சிறு நூல் பகுதி

## 1. கோயில் நான்மணி மாலை

[வெண்பா, கட்டளைக்கலித்துறை, ஆசிரியவிருத்தம், ஆசிரியப்பா என்ற நான்குவகையான செய்யுள் விரவி நாற்பது பாடுவது நான்மணி மாலையாம். சிதம்பரத்திலுள்ள சிவபெருமான்மேல் பட்டினத்து அடிகள் பாடிய நூல் கோயில் நான்மணி மாலை. பட்டினத்தடிகளின் இயற்பெயர் திருவெண்காடர்; காவிரிப்பூம் பட்டினத்தில் வைசிய குலத்தில் தோன்றியவர்; சைவர்: காலம் கி. பி. 10–ஆம் நூற்றுண்டு.]

### வெண்பா

பூமேல் அயன் அறியா மோலிப் புறத்ததே
நாமே புகழ்ந்தளவை நாட்டுவோம்—பாமேவும்
ஏத்துகந்தான் தில்லை இடத்துகந்தான் அம்பலத்தே
கூத்துகந்தான் கொற்றக் குடை. (1)

### கட்டளைக் கலித்துறை

குடைகொண்டிவ் வையமெலாங் குளிர்வித் தெரிபொற்றிகிரிப்
படைகொண் டிகல்தெறும் பார்த்திவராவதிற் பைம்பொற் [கொன்றைத்
தொடைகொண்ட வார்சடை அம்பலத்தான் தொண்டர்க் [கேவல் செய்து
கடைகொண்ட பிச்சைகொண் டுண்டிங்குவாழ்தல் களிப்புடைத் [தே. (2)

### ஆசிரிய விருத்தம்

கவிவந் தமுதூறிக் கல்மனத்தை எல்லாங்
கசியும் படிச்செய்து கண்டறிவார் இல்லா
வெளிவந் தடியேன் மனம்புகுந்த தென்றால்
விரிசடையும் வெண்ணீறுஞ் செவ்வானம் என்ன

ஒளிவந்த பொன்னிறமும் தோல்கடமும் காட்டும்
உடையான் உயர்தில்லை அம்பலமொன் றல்லால்
எளிவந் தினிப்பிறர்பால் சென்றவர்க்குப் பொய்கொண்
டிடைமிடைந்த புன்மொழியால் இச்சையுரை யோமே. (3)

## ஆசிரியப்பா

உரையின் வரையும் பொருளின் அளவும்
இருவகைப் பட்ட எல்லையும் கடந்து
தம்மை மறந்து நின்னை நினைப்பவர்
செம்மை மனத்தினுந் தில்லைமன் றினும்கடம்
ஆடும் அம்பல வாண நீடு
குன்றக் கோமான் தன்திருப் பாவையை
நீலமேனி மால்திருத் தங்கையைத்
திருமணம் புணர்ந்த ஞான்று பெருமநின்
தாதவிழ் கொன்றைத் தாரும் ஏதமில்
வீர வெள்விடைக் கொடியும் போரில்
தழங்குந் தமருகப் பறையும் முழங்கொளித்
தெய்வக் கங்கை யாறும் பொய்தீர்
விரையாக் கலியெனும் ஆணையும் நிரைநிரை
ஆயிரம் வகுத்த மாயிரு மருப்பின்
வெண்ணிறச் செங்கண் வேழமும் பண்ணியல்
வைதிகப் பரவியும் வான நாடும்
மையறு கனக மேருமால் வரையுஞ்
செய்வயல் தில்லையாகிய தொல்பெரும் பதியுமென்
றொருபதி னுயிரந் திருநெடு நாமமும்
உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்
தென்னையும் எழுத வேண்டுவன் நின்னருள்
ஆணை வைப்பில் காணுறை அணுவும்
வானுற நிமிர்ந்து காட்டுங்
கானில்வால் நுளம்புங் கருடனு தலினே. (4)

—பட்டினத்தடிகள்.

குறிப்புரை

1. அயன் - பிரமன். மோலி - முடி. எத்து - புகழ். தில்லை - சிதம்பரம்.

2. பார்த்திவர் - அரசர். தொடை - மாலை.

3. எளிவந்து - மிகத்தாழ்ந்து. மிடைந்த - கலந்த.

4. அம்பலவாணை - சபையில்வாழ்பவனை. குன்றக் கோமான் - இமவான். ஞான்று - பொழுது. பெரும - விளி. தாது - மகரந்தம். , விடை - எருது. மருப்பு - தந்தம். வேழம் - யானை. பண் - தவிசு. அறுகு - அறுகம்புல். நளம்பும் - வீசும்.

வினாக்கள்

1. பட்டினத்து அடிகள், எந்தவாழ்வை விரும்புகிறார்? எந்த வாழ்வை விரும்ப வில்லை?

2. அடிகள், பிறர்பால் இச்சை வார்த்தைகள் சொல்லமாட்டார் என்பதை எப்படி அறிவிக்கிறார்?

3. பட்டினத்தார், கடவுளை என்ன செய்யும்படி வேண்டிக் கொள்கிறார்?

4. சிவபெருமான் திருமணப் பந்தரை அடிகள், எப்படி வருணித்துள்ளார்?

## 2. அழகரந்தாதி

[ஒரு செய்யுளின் ஈற்றடியோ, சீரோ, எழுத்தோ அடுத்த செய்யுளுக்கு முதலாக அமையப்பாடுவது அந்தாதியாம். திருமாலிருஞ் சோலை அழகர் மீது பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் பாடியது அழகரந்தாதி. இவர், சோழநாட்டில் திருமங்கை என்ற ஊரில் அந்தணர் குலத்தில் பிறந்தவர்; வைணவர்; காலம் கி. பி. 13-ஆம் நூற்றாண்டு.]

தெய்வம் பலவவர் நூலும் பலஅவை தேர்பொழுதில்
பொய்வம் பலவென்று தோன்றும் புல்லோர்கட்குப் போத நல்லோர்
உய்வம் பலனு மவனே யென்றோதி யுணர்வர் நெஞ்சே
கொய்வம் பலர்சொரியுஞ் சோலை மாமலைக் கொண்டலையே. (1)

கொண்டலை யாநிற்கும் மைப்புலக் கோண்மக ரங்களினீர்ப்
புண்டலை யார்பிற விக்கடல் மூழ்குவ ருத்தமனைத்
தண்டலை யார்திரு மாலிருஞ் சோலைத் தனிச்சுடரைப்
புண்டலை யால்வணங் காரணங் கார்வினை போகவென்றே. (2)

என்று தரங்கலங் தேனற்றை நான்றுதொட் டிற்றைவரை
நின்று தரங்கிக்கின் றேற்கருள் வாய்நெடுங் கான்கடந்து.
சென்று தரங்கக் கடல்தூர்த் திலங்கையில் தியவரைக்
கொன்று தரங்குவித் தாய்சோலை மாமலைக் கோவலனே. (3)

—பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்.

குறிப்புரை

1. தேர்பொழுதில் - ஆராயும்பொழுதில். போதம்-ஞானம் உய்வம் - பிழைப்போம். வம்பு - மணம். கொண்டல் - மேகம்.

2. மகரம் - சுறுமீன். தண்டலை - குளிர்ச்சியானஇடம் (சோலை) புண் - தசை. அணங்கு - வருத்துகின்ற. போக - வியங்கோள். பேதையர் என்ற எழுவாலை வருவிக்க.

3. தரங்கிக்கின்றேன் - அலைகின்றேன். கான் - காடு. தரங்கம் - அலை. உதரம் - வயிறு.

வினாக்கள்

1. புல்லோர், தெய்வங்களையும் நூல்களையும் பற்றி என்ன எண்ணுவர்?
2. ஞானிகள், சோலை மலையழகரை என்ன நினைத்துப் போற்றுகின்றனர்?
3. பிறவிக்கடலில் மூழ்குபவர்யார்? மூழ்காமல் கரையேற என்ன செய்யவேண்டும்?
4. பிள்ளைப்பெருமான் ஐயங்கார், அழகரிடம் என்ன முறையிட்டுக் கொள்ளுகிறார்?

## 3. பிள்ளைத்தமிழ்

[பிள்ளைத்தமிழ் என்பது, தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. கடவுளரையேனும், சான்றோர்களையேனும் குழந்தையாகநினைத்துப் பாடுவது. இது ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ்

என்று இருவகைப்படும். குமர குருபர சுவாமி பாடிய இருவகைப் பிள்ளைத் தமிழையும் கீழ்க்காண்க. குமர குருபரர், திருநெல்வேலி ஜில்லா ஸ்ரீவைகுண்டத்தில் தோன்றியவர்; சைவர்; வேளாளர் ; காலம் 16 -ஆம் நூற்றுண்டு.]

## மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்
### வருகைப் பருவம்

தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகு நறுஞ்
சுவையே ! அகந்தைக் கிழங்கை யகழ்ந்(து)
எடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே ! வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே ! எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்துநின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ(கு)
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே ! மதுகரம்வாய்
மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே ! வருகவே
மலையத் துவசன் பெற்றபெரு
வாழ்வே ! வருக வருகவே. (1)

## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ்
### அம்புலிப்பருவம்

கங்கைமுடி யடிகட்கோர் கண்ணு யிருத்தியக்
கண்ணினுண் மணியிவன் காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்றுமொண்
கலைமுழுதும் நிறைய நின்றுன்
எங்குமிர வோனெனத் திரிதியிவ னடியவர்
எவர்க்குமிர வினையொழித்தான்
இருநிலத் தங்குரிக் கும்பயிர் வளர்த்தியிவன்
எவ்வுயிரும் வாழச் செய்தான்

பொங்கமுத மமுதா சனர்க்குதவி ஞயிவன்
புத்திமுத் தியுமளித்தான்
புவனம் படைத்தவிவ னின்னின் மிக்கானெனப்
புகல்வதோர் பொருளன்று காண்
அங்கண்மறை யோலிட் டரற்றநின் றவனுடன்
அம்புலீ ! யாடவாவே
அழகுபொலி கந்தபுரி தழையவரு கந்தனுடன்
அம்புலீ ! யாடவாவே. (2)

—குமர குருபர சுவாமிகள்.

## குறிப்புரை

[பிள்ளைத்தமிழிற்குப் பத்து பருவங்கள் உண்டு. இவற்றுள் ஆண்பால் பிள்ளைத்தமிழிற்கு 1. காப்பு, 2. செங்கீரை, 3 தால், 4. சப்பாணி, 5. முத்தம், 6. வருகை, 7. அம்புலி, 8. சிற்றில், 9. சிறு பறை, 10 சிறுதேர் என்ற பத்துப் பருவங்கள் உண்டு. பெண்பால் பிள்ளைத்தமிழுக்கு முதல் ஏழும் முன் சொல்லியவையே; ஈற்றிலுள்ள மூன்று பருவங்கட்குப் பதில் அம்மானை, நீராடல், ஊசல் என்பவற்றைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.]

1. கடவுள்பழம்பாடல் - வேதம். நறை - தேன். அகந்தை - அகங்காரம். தொழும்பர் - அடியார். சிமயம் - முடி. பொருப்பு - மலை. தரங்கம் - அலை. மலையத்துவசன் - பாண்டியன். (மீனாட்சியைப் பெற்றெடுத்தவன்)

2. இராவோன் - இரவில் திரிவோன். (சந்திரன்) இரவினை - யாசகத்தை. அமுதாசனர் - தேவர். அம்புலி - சந்திரன்.

## வினாக்கள்

1. மீனாட்சியை ஆசிரியர் எவ்வெவ்வாறு விளிக்கின்றார்?
2. ஆசிரியருக்குத் தமிழிலுள்ள ஆர்வத்தைக் காட்டுவது எத்தொடர்?
3. செவிலியர், அம்புலியை முருகனுடன் விளையாட வரும்படி என்னென்ன காரணங்கள் கூறுகின்றனர்?

4. முருகன், சந்திரனைவிடச் சிறந்தவன் என்பதைக் காரணங்கள் காட்டி விளக்குக.

## 4. திருவெங்கைக் கலம்பகம்

[இந்நூலைப் பாடியவர், சிவப்பிரகாச சுவாமிகள் ; வீர சைவ மதத்தினர் ; வாழ்ந்த காலம் 17 ஆம் நூற்றாண்டு.]

### மறம்

விற்ற தார்கலை பாதியோடு வனத்தி லேயழ
 விட்டதார் ?
வெஞ்சிறைப் புகவிட்டதார் துகிலுரிய
 விட்டு விழித்ததார் ?
உற்ற தாரமும் வேண்டு மென்றினி மன்னர்
 பெண்கொள வொண்ணுமோ ?
உமியடா மணமென்ற வாய்கிழித் தோலை
 காற்றிலுருட்டடா.
வெற்றி யாகிய முத்தி தந்தருள் வெங்கை
 மாநகர் வேடர்யாம்
விமல ரானவர் எமைய டுத்தினி தெங்கள்
 மிச்சில் மிசைந்தபின்
பெற்ற வேலர் தமக்கு யாமொரு பெண்
 வளர்ப்பினி லீந்தனம்
பெற்ற பிள்ளை கொடுப்ப ரோவிதென்
 பேய்பி டித்திடு தூதரே.

—துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்.

### குறிப்புரை

'மறம்' - பெண் வேண்டிய அரசன் தூதனை, மறவன் இகழ்ந்து கூறுவது போன்று பாடப்படும் கலம்பகத்தின் உறுப்பு. கலை - ஆடை. தாரம் - மனைவி. விமலர் - குற்றமற்றவர். மிச்சில் - எச்சில். மிசைந்த - உண்ட. வேலர் - முருகன்.

### வினாக்கள்

1. மறவன், அரசர்கள் பெண் கொள்ளத் தகுதியற்றவர் என்பதற்குக் கூறும் காரணங்கள் எவை ?

2. வேடர் தங்களுடைய சிறப்பை எப்படித் தெரிவித்துக் கொள்ளுகிறார் ?

3. வேடர் தூதனை எவ்வாறு இகழ்கிறார் ?

## 5. சிலேடை

[காளமேகப் புலவர், இச் சிலேடைச் செய்யுளைப் பாடியவர்; இவரை வைணவரென்றும் சைவர் என்றுங் கூறுப; இவர் காலம் கி. பி. 15–ஆம் நூற்றாண்டு.]

### பாம்பும் எலுமிச்சம் பழமும்
### சிலேடை

பெரியவிட மேசேரும் பித்தர்முடி யேறும்
அரியுண்ணு முப்புமே லாடும்—எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம்.

—காளமேகப் புலவர்.

குறிப்புரை

விடம் - விஷம். (இடம்) பித்தர் - சிவன். (பைத்தியக்காரன்) அரி - காற்று. (அரிதல்) எரிகுணம் - கோபிக்கும் குணம். (எரியும் குணம்) வரை - மலை. ஒரு சொல்லோ, தொடரோ இருபொருள் படப்பாடுவது, சிலேடை எனப்படும்.

வினாக்கள்

1. சிலேடை என்றால் என்ன ?

2. "அரியுண்ணு முப்புமேலாடும்" - இத்தொடரின் சிலேடைப் பொருள்களை வரைக.

## 6. குற்றாலக் குறவஞ்சி

[திருக்குற்றாலத்தைப் பற்றிய குறவஞ்சி நூல். குறத்தி, தான் வாழும் மலைவளத்தைக் கூறுவதுபோன்று பாடப்படும் நூல், குறவஞ்சி. இந்நூலின் ஆசிரியர், திரிகூட ராசப்பக் கவிராயர்; மதம் சைவம்; காலம் 17-ஆம் நூற்றாண்டு.]

## மலை வளம்

முழங்குதிரைப் புனலருவி கழங்கென முத்தாடும்
முற்றமெங்கும் பரந்து பெண்கள் சிற்றிலைக் கொண்டோடும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவின் ஈசர்
வளம்பெருகும் திரிகூட மலையெங்கள் மலையே. (1)

## நாட்டு வளம்

சூழமேதி யிறங்குந் துறையில் சொரியும்
பாலைப் பருகிய வாளை
கூழை வாசப் பலாவினில் பாயக் கொழும்
பலாக்கனி வாழையில் சாய
வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க
வருவிருந்துக் குபசரிப் பார்போல்
தாழை சோறிட வாழை குருத்திடும்
சந்திர சூடர்தென் னாரிய நாடே. (2)

—திரிகூடராசப்பக்கவிராயர்.

### குறிப்புரை

1. முழங்கும் - ஒலிக்கும். திரை - அலை. கழங்கு - கழற்சிக்காய். கிம்புரி - யானை தந்தத்திற்குக்கட்டும்பூண். தேமா - ஒருவகை மாமரம். வெடிக்கும் - வீசும். குறும் பலவின்ஈசர் - திருக்குற்றாலநாதர்.

2. மேதி - எருமை. வாளை - மீன். கூழை - குறுகிய.

### வினாக்கள்

1. மலை வளத்தைக் குறத்தி எப்படிக் கூறுகிறாள் ?
2. தென்னாரிய நாடு வளம் எத்தகையது ?
3. "வருவிருந்துக்கு உபசரிப்பார் போல்" உள்ளது எது ?

## 7. முக்கூடற் பள்ளு

[பள்ளு என்பது, பள்ளர்களைப் பற்றிய நூலாகும். முக்கூடலி லுள்ள திருமாலைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டது, முக்கூடற் பள்ளு. இதன் ஆசிரியர், என்னயினாப் புலவர் ; மதம் வைணவம். காலம் 17 ஆம் நூற்றாண்டு.]

### நாட்டு வளம்

காயக் கண்டது சூரிய காந்தி
கலங்கக் கண்டது வெண்டயிர்க் கண்டம்
மாயக் கண்டது நாழிகை வாரம்
மறிக்கக் கண்டது வான்சுழி வெள்ளம்
சாயக் கண்டது காய்கதிர்ச் செந்நெல்
தனிப்பக் கண்டது தாபத ருள்ளம்
தேயக் கண்ட துரைத்திடு சந்தம்
சீவல மங்கை தென்கரை நாடே. (1)

### நகர் வளம்

சோதி மாமணி வீதி நெருக்கும்
சுரும்பு பாடி இரும்பு முருக்கும்
சாதி நால்வளம் நீதி பெருக்கும்
தடத்து வாளை குடத்தை நெருக்கும்
போதில் மேய்ந்திள மேதி செருக்கும்
புனலெல் லாந்தண் மலர்விண் டிருக்கும்
ஆதி நாயகர் செண்டலங் காரர்
அழகர் முக்கூட லூரெங் களூரே. (2)

—என்னயினாப் புலவர்.

### குறிப்புரை

1. கண்டம் - துண்டம். மறிக்க - சுழிக்க. தாபதர் - முனிவர். சந்தம் - சந்தனம்.

2. சுரும்பு - வண்டு. தடம் - குளம். மேதி - எருமை. மலர்விண்டிருக்கும் - பூமலரும். செண்டலங்காரர் - முக்கூடல் திருமாலின் பெயர்.

வினாக்கள்

1. சிவல மக்கை தென்கரை நாட்டின் வளத்தைக் குறிப்பிடுக.

2. முக்கூடல் நகர் எவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது?

## 8. சீட்டுக் கவி

[செய்யுள் வடிவில் எழுதும் கடிதத்திற்குச் சீட்டுக்கவி என்று பெயர். கீழ்வரும் சீட்டுக்கவி, அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர் என்பவர், முத்துக் கறுப்பண்ணர் என்பவருக்கு எழுதியது. ஆசிரியர் காலம், 18-ஆம் நூற்றாண்டு.]

கல்விச் சமுத்திரம் கமலாலயம் தமிழ்க்
கடல்மடை திறந்த வெள்ளம்
கற்பனை பிறப்பிடம் கலைமக ளிருப்பிடம்
கவிமாரி பொழியு மேகம்
சொல்விற் பனம்விளையும் மதுரக் களஞ்சியம்
தோன்று கற்பூர தீபம்
சுகிர்தகுண அவதானி சரவணப் பெருமாள்கை
தொட்டெழுதி விட்ட சனது;
வில்லுக்(கு) அருச்சுனன் சொல்லுக்(கு) அரிச்சந்திரன்
வெற்றிக்கு விக்ர மார்க்கன்
வித்தைக்(கு) அகத்தியன் முத்துக் கறுப்பண
விலட்சணன் எதிர்ந்து காண்க!
மல்வெற்றி யாய்என்று தாய்என்று நீயென்று
மாவென்று வேலென்றுகா
மாவென்று காவென்று நாவென்று பாவென்று
வருகின்ற(து) அருள்புரிகவே.

—அட்டாவதானம் சரவணப்பெருமாள் கவிராயர்.

## குறிப்புரை

கலைமகள் - சரஸ்வதி. விற்பனம் - அறிவு. சுகிர்தம் - நன்மை. அவதானி - ஒரே காலத்தில் பல நிகழ்ச்சிகளை நினைவில் வைப்பவன். சனது - கடிதம். காமா - காமனே.

## வினாக்கள்

1. ஆசிரியர், தம்முடைய பெருமைகளை எவ்வாறு பாராட்டுகின்றனர்?
2. கறுப்பண்ணனை ஆசிரியர், எவ்வெவ்வாறு வருணித்துள்ளார்?

---

# V. பல்சுவைப் பகுதி

## 1. புறநானூறு

[புறநானூறு என்பது, எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று; இது ஒரு புறப்பொருள் நூல்; நானூறு செய்யுட்கள் கொண்டது; இப்பாடல், கடலுள்மாய்ந்த இளம்பெரு வழுதி என்பவர் பாடியது; இவர் பரிபாடலில் திருமா லுக்குரிய பாடலைப் பாடியிருத்தலால் வைணவர் என்று தெரிகிறது; இவர்காலம் கி. பி. 2-ம் நூற்றாண்டு.]

உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமிய ருண்டலு மிலரே முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினும் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே.

—கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி

### குறிப்புரை

இயைவது - கிடைப்பது. தமியர் - தனித்தவர். முனி விலர் - வெறுப்பிலர். துஞ்சல் - மடிந்திருத்தல். அயர்விலர் - மனக்கவலையில்லார். நோன்றாள் - வலிய முயற்சி.

### வினாக்கள்

1. 'தமியர் உண்டலுமிலர்' இதனால் நீ அறிவது என்ன?
2. உலகமே வருவதாயினும் கொள்ளார் எப்பொழுது கொள்ளார்? யார் கொள்ளார்?
3. உலகம் உண்டு என்று கூறிய ஆசிரியர், உலகம் நிலை பெற்றிருக்கக் காரணம் யாது கூறுகிறார்?

## 2. பாரதி நூல்

### கேட்பன

[கீழ்வரும் பாடல்களைப் பாடிய தேசிய கவி, சி. சுப்பிரமணிய பாரதியார், திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள எட்டையபுரத்தில் பிறந்தார்; இவர் தந்தையின் பெயர், சின்னசாமி ஐயர்; தாய், இலக்குமி அம்மாள். இவர் பாடல்கள், மிக இனிமையாக இருப்பதுடன் நாட்டுப்பற்றை ஊட்டுவனவாகும். இவர் காலம் (1882—1921).]

நல்லதோர் வீணை செய்தே—அதை
நலங்கெடப் புழுதியில் எறிவதுண்டோ ?
சொல்லடி சிவசக்தி !—எனைச்
சுடர்மிகும் அறிவுடன் படைத்து விட்டாய்
வல்லமை தாராயோ ? இந்த
மாநிலம் பயனுற வாழ்வதற்கே
சொல்லடி சிவசக்தி !—நிலச்
சுமையென வாழ்ந்திடப் புரிகுவையோ ? (1)

விசையுறு பந்தினைப் போல்—உள்ளம்
வேண்டிய படிசெலும் உடல்கேட்டேன்
நசையறு மனங்கேட்டேன்—நித்தம்
நவமெனச் சுடர்தரும் உயிர்கேட்டேன்
தசையினைத் தீச்சுடினும்—சிவ
சக்தியைப் பாடுநல் அகங்கேட்டேன்
அசைவறும் மதிகேட்டேன்;—இவை
அருள்வதில் உனக்கேதும் தடையுளதோ ? (2)

—சி. சுப்பிரமணிய பாரதியார்.

குறிப்புரை

1. வல்லமை - வலிமை. புரிகுவையோ - செய்வாயோ.

2. விசையுறு - வேகம் மிகுந்த. நசை - விருப்பம். நித்தம் - நாள்தோறும். நவம் - புதிய. தசை - உடம்பு. அகம் - உள்ளம்.

வினாக்கள்

1. பாரதியார் பாரிடம் எவற்றை வேண்டுகிறார்?

2. உடல் நலத்தைப் பாரதியார் கவனிப்பவர் என்பதை அவர் செய்யுளிலிருந்து விளக்கு.

3. பாரதியார் வழிபடும் கடவுள் எது? எப்படி அறிவாய்?

## 3. அறிவு

[இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களில், வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியாரும் ஒருவர். தமிழை நன்கு கற்று, ஆங்கிலத்தில் B. A. பட்டமும் பெற்று, சென்னைக் கிறிஸ்துவர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் விளங்கியவர்; இவர், கி. பி. 1903-ல் காலஞ்சென்றார்; ஆங்கிலத்தைப் பின்பற்றி 14 வரிகள் உள்ள செய்யுட்களாகப் பல பாடினார். அந்நூலுக்குத் தனிப்பாசுரத் தொகை என்று பெயர். பாடப்பகுதி அந்நூலில் உள்ளது.]

### அறிவு

அறிவே! மக்கட் மாருயிர்க் குறுதியே
செறிவேய்ங் காடெனுந் தீவினை தனைமடுத்(து)
எரிதரும் தீயே! பெரிதுமென் மனக்களி(று)
அடக்கு மங்குசமே! கடக்கரு வாழ்க்கைக்
கடற்செல விற்றிசை காட்டுங் கருவியே!
என்னுள மன்னித் துன்னிருள் துமித்தொளிர்
கந்தா விளக்கே! சிந்தா மணியே!
உன்னைத் துணைக்கொடிவ் வுலகினிற் பல்தொழில்
கன்ன ரியற்றிட நான் துணி கின்றேன்
ஆதலின் என்றனக்(கு) ஏதம் அணுகாது
நலமிஃ தென்று மலதிஃ தென்றும்
பகுத்துக் காட்டியு மிகுத்துச் செல்வுழி
மேற்சென் றிடித்து மேவுதி
மாற்சிறு பருவ மைந்தனென் னயலே.

—வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்.

### குறிப்புரை

வேய்ங்காடு - மூங்கில் காடு. அங்குசம் - யானையை அடக்கும் கருவி. துமித்து - துணித்து. நந்தாவிளக்கு - அணையா விளக்கு. பல் + தொழில் = பஃறொழில். நன்னர் - நன்கு. ஏதம் - துன்பம். செல்வுழி - செல்லும் பொழுது. மேவுதி - பொருந்துவாய். மால் - நாராயணன்.

### வினாக்கள்

1. ஆசிரியர் அறிவை எப்படி விளிக்கிறார் ?
2. அறிவின் துணையை ஆசிரியர் வேண்டுவானேன் ?
3. அறிவினிடம் ஆசிரியர் கேட்டுக் கொள்வது என்ன ?

## 4. தொழில்

[திரு. வி. க. அவர்கள் இயற்றிய செய்யுள் நூல்கள் பல ; அவற்றுள் புதுமை வேட்டல் என்பது ஒன்று ; அதனுள் சன்மார்க்க வாழ்க்கையில் இத்தொழில் என்ற பகுதி வந்துள்ளது.]

மழையின் மகிழ்ச்சி உழவா கும்மே
உழவு உலக நலத்தின் காப்பு
காற்றுப் பாட்டின் காற்றில் உலவுக
ஏற்றம் பாடும் இனிமை என்னே !
பசும்பயிர்க் காட்சி பசியைத் துரத்தும்
பொன்மணிச் சிறப்பினும் நென்மணி விழுப்பம்
பருத்திச் செடியை விருத்தி செய்க
பஞ்சைக் கண்டதும் பஞ்சம் பறக்கும்
நூற்க நூற்க நெஞ்சம் குவியும்
நாஞ்சிலும் இராட்டையும் நாட்டின் ஈரல்
வாழ்க்கைக் குரிய தொழின்முறை வளர்க்க
சேர்க்கைத் தொழிலில் ஜீவன் உண்டு
வாழ்க உழவு வாழ்க நூற்பு.

—திரு.வி.கலியாணசுந்தரனார்.

குறிப்புரை

காப்பு - காவல். காற்றுப்பாட்டு - காற்றுகடும் போதுபாடும் பாட்டு. துரத்தும் - ஓட்டும். விழுப்பம் - சிறந்தது. விருத்தி - வளர்ச்சி. காஞ்சில் - கலப்பை. சேர்க்கைத் தொழில் - கூட்டு முயற்சித்தொழில்.

வினாக்கள்

1. நம் பசியை ஓட்டவல்லது எது ?
2. பொன் மணி இவற்றைவிடச் சிறந்தன எவை ?
3. பஞ்சம் பறந்தோட வழி எது ?
4. நாட்டின் ஈரல்கள் எவை ?

## 5. செல்வமும் சிறுமையும்

[இப்பகுதி, 'மலரும் மாலையும்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர், தேசிகவிநாயகம் பிள்ளை ; இவர், திருவிதாங்கூர் நாட்டில் தேரூர் என்னும் சிற்றூரில் கி. பி. 1876-ம் ஆண்டில் பிறந்தார்; பள்ளி ஆசிரியராக இருந்து இப்பொழுது ஓய்வு பெற்று வாழ்ந்து வருகிறார்.]

### செல்வச் சிறுமியர் களிப்பு

பாகமாகச் செய்த பண்ட முண்போம்—நன்றாய்ப்
　　பக்குவம் வந்த பழங்க ளுண்போம்
தாகமானல் பல பானகமும்—தாயார்
　　தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம். (1)

காலத்துக் கேற்ற உடையணிவோம்—வாசம்
　　கட்டிய சந்தனம் பூசிடுவோம்
கோலமாய்ச் சீவிச் சிணுக்கெடுத்து—மலர்
　　கூந்தலில் சூட்டி அழகு செய்வோம். (2)

பந்துகள் ஆடிப் பழகிடுவோம்—கழல்
　　பாங்கியர் தம்மொடும் ஆடிடுவோம்
சந்தமெழக் கும்மி பாடிடுவோம்—சுற்றிச்
　　சப்பாணி கொட்டிச் சிரித்திடுவோம். (3)

## ஏழைச் சிறுமியர் மனப்புழுக்கம்

நல்லபண் டங்களைக் கண்டறியோம்—ஒரு
நாளும் வயிறார உண்டறியோம்
அல்லும் பகலும் அலைந்திடுவோம்—பசி
ஆற வழியின்றி வாடிடுவோம். (4)

அன்னப்பால் காணாத ஏழைகட்கு—நல்ல
ஆவின்பால் எங்கே கிடைக்குமம்மா
என்னப்பா யாம்படும் பாட்டையெல்லாம் சென்று
யாரிடம் சொல்லி அழுவோமம்மா. (5)

இட்டெலி ஐந்தாறு தின்றோ மென்பீர் நீங்கள்
ஏதும் கருணை யிலீரோ அம்மா
பட்டினியாக இறந்திடினும்—நாங்கள்
பாவம் பழிசெய்ய மாட்டோமம்மா. (6)

—தேசிக விநாயகம்பிள்ளை.

### குறிப்புரை

வாசம் - மணம். கழல் - கழற்சிக்காய். பாங்கி - தோழி. சந்தம் - ஓசையினிமை. சப்பாணி கொட்டி - கை கொட்டி. அல் - இரவு. ஆ - பசு.

### வினாக்கள்

1. செல்வச் சிறுமியர் உண்ணும் உணவு, உடுக்கும் உடை, ஆடும் ஆட்டம் இவற்றைக் குறிப்பிடுக.
2. ஏழைச் சிறுமியர் மனம் புழுங்கிக் கூறுவன யாவை ?
3. "ஏதும் கருணையிலீரோ அம்மா," இவ்வாறு கூறக்காரண மென்ன ?
4. ஏழையிடம் இருக்கும் நல்லொழுக்கம் யாது ?

## 6. வருணனை

[கீழ் வரும் வருணனைப் பாடல்களிரண்டும் கம்பராமாயணத்தில் உள்ளன. கம்பரைப் பற்றிய குறிப்பு முன்பே கொடுக்கப் பட்டுள்ளது.]

## சூரியோதயம்

மீனுடை யெயிற்றுக் கங்குல் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்க ளென்னு மாயிரங் கரங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந் தமனியத் தறியுள் நின்று
மானுட மடங்க லென்னத் தோன்றினன் வயங்கு வெய்யோன். (1)

## சந்திரோதயம்

ஆற்ற லின்மை யினுல மிந்தே யும்தம்
வேற்று மன்னர் தம்மேல் வரும்வேந் தர்போல்
ஏற்று மாதர் முகங்க ளொடெங்கணும்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினன். (2)

—கம்பர்.

### குறிப்புரை

1. எயிறு - பல். கங்குல் - இரவு. கனகன் - இரணியன். வெகுண்டு - கோபித்து. கான் - தொகுதி. கரம் - கிரணம். தமனியம் - பொன். மானுட மடங்கல் - நரசிங்கப் பெருமான். வயங்கு -விளங்கு. வெய்யோன் — சூரியன்.

2. ஆற்றல் - வலிமை. ஏற்று - எதிர்த்து. எங்கணும் - எவ்விடத்தும். தோற்ற - தோல்வியுற்ற.

### வினாக்கள்

1. ஆசிரியர் இரவை யாராக வருணிக்கின்றார் ?
2. மானுட மடங்கல் என்று சூரியனைக் கூறிய பொருத்தத்தைப் பொருத்திக் காட்டுக.
3. மாதர் முகங்கள், சந்திரனைவிடச் சிறந்த ஒளியுடையன என்று எப்படி அறிவீர் ?
4. சந்திரன் தோன்றியதற்கு ஆசிரியர் கொடுத்த உவமை என்ன ?

## 7. கொடி வணக்கம்

[இக்காலப் பாவலர்களில் தலை சிறந்த பாவலர் நாமக்கல் கவிஞர், இராமலிங்கம் பிள்ளையவர்களாவர்; இவர் நமது அரசாங்கத்து ஆஸ்தான கவிஞராவார் ; இக்காலத்தில் வாழும் சிறந்த தமிழ்ப் புலவரிவர்.]

கோடி வணக்கமது செய்வோம்—நாட்டின்
குறைகள் நீங்கியினி உய்வோம்,
முடி வணங்கியதைப் போற்றி—அதன்
மூன்று நிறக்குறி சாற்றி. (1)

பச்சையான ஒரு தோற்றம்—நமக்குப்
பக்தி வேண்டுமெனச் சாற்றும்,
இச்சையான பொருள்கூடப்—பக்தி
இருக்க வேணுமதை நாட. (2)

தூய்ய வெள்ளை நிறக் காட்சி—உண்மை
துலங்கு மென்பதற்குச் சாட்சி,
மையமாக நிற்கும் மர்மம்—சத்தியம்
மதங்கள் யாவினுக்குந் தர்மம். (3)

துறவின் வர்ணமந்தக் காவி—உலகின்
துக்கப் பூட்டினுக்குச் சாவி,
சிறையும் வீடுமதற் கொன்றே—என்றும்
சேதி ஓதுவதற் கென்றே. (4)

—'அரசவைக் கவிஞர்' நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை.

குறிப்புரை

1. உய்வோம் - பிழைப்போம். போற்றி - துதித்து.

2. சாற்றும் - சொல்லும். இச்சை - விருப்பம். நாட - நினைக்க.

3. தூய்ய - தூய்மையான. துலங்கும் - விளங்கும். மையம் - நடுவு. மர்மம் - இரகசியம். சத்தியம் - உண்மை.

4. சாவி - திறவுகோல். சிறை - சிறைச்சாலை. சேதி - செய்தி.

வினாக்கள்

1. நாட்டின் குறைகள் நீங்க நாம் செய்ய வேண்டிய தென்ன ?
2. பச்சை நிறம் நமக்கு அறிவிப்பது யாது ?
3. "உண்மை துலங்குமென்பதற்குச் சாட்சி" எது ?
4. துக்கப் பூட்டினுக்குச் சாவியாக இருப்பது எது ?

---

# உ ரை ந டை.

## 1. பண்டை உரைநடை

[இறையனார் களவியலுரை—நக்கீரர்]

அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லப், பசி கடுகுதலும், அரசன் சிட்டரை யெல்லாங் கூவி, "வம்மின், யான் உங்களைப் புரந்தரகில்லேன்: என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர்போய் நுமக்கறிந்த வாறு புக்கு, நாடு நாடாயின ஞான்று என்னையுள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து எல்லாரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர் நாடுமலிய மழை பெய்தது. பெய்தபின், அரசன் இனி நாடு நாடாயிற்றாகலின் நூல்வல்லாரைக் கொணர்க வென்று எல்லாப் பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர, அரசனும் புடைபடக்கவன்று, "என்னை? எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்" எனச் சொல்லாநிற்ப, மதுரை ஆலவாயில் அழனிறக் கடவுள் சிந்திப்பான். "என்னை பாவம்! அரசனுக்குக் கவற்சி பெரிதாயிற்று. அதுதானும் ஞானத்திடையது ஆகலான் யாம் அதனைத் தீர்க்கற்பாலம்" என்று, இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து, மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

இட்ட பிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான் தேவர் கோட்டத்தை எங்குந்துடைத்துநீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின்கீழ் பண்டு என்று மலகிடான் அன்று தெய்வத் தவக் குறிப்பினான் அலகிடுவனென்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அவ்வலகினோடும் இதழ்போந்தன. போதரக் கொண்டுபோந்து நோக்கினாற்கு வாய்ப்புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப் பார்ப்பான் சிந்திப்

பான் ; 'அரசன் பொருளதிகாரம் இன்மையின் கவல்கின்றா னென்பது பட்டுச் செல்லாநின்றதுணர்ந்து நம் பெருமான் அருளிச் செய்தானாகும்' என்று, தன் அகம்புகாதே கோயிற் றலைக்கடைச் சென்றுநின்று கடைகாப்பார்க்குணர்த்தக் கடை காப்பார் அரசற்குணர்த்த, அரசன் புகுதருகவென்று பார்ப் பானைக் கூவச் சென்றுபுக்குக் காட்டக்கொண்டு நோக்கி. "இது பொருளதிகாரம்! நம்பெருமான் நமது இடுக்கண்கண்டு அருளிச் செய்தானாகற்பாலது" என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, "நம் பெருமான் நமது இடுக்கண்கண்டு அருளிச்செய்த பொருளதி காரம், இதனைக் கொண்டுபோய்ப் பொருள்காண்மின்" என, அவர்கள் அதனைக் கொண்டு போந்து கன்மாப்பலகை ஏறி யிருந்தாராய்வுழி, எல்லாருந் தாந்தாம் உரைத்த உரையே நன்றென்று சில நாளெல்லாஞ் சென்றன.

செல்ல, நாம் இங்ஙனம் எத்துணையுரைப்பினும் ஒரு தலைப்படாது ; நாம் அரசனுழைச் சென்று நமக்கோர் காரணி கனைத்தரல் வேண்டுமென்று கொண்டுபோந்து, அவனாற் பொரு ளெனப் பட்டது பொருளாய் அன்றெனப்பட்டது அன்றாய் ஒழியக் காண்டுமென, எல்லாரும் ஒருப்பட்டுப் அரசனுழைச் சென்றார். செல்ல அரசனும் எதிர் எழுந்து சென்று, "என்னை, நூற்குப் பொருள் கண்டீரோ?" என, "அதுகாணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்" எனப், "போமின் நுமக்கோர் காரணிகனை எங்ஙனம் நாடுவேன்? நீயிர் நாற்பத் தொன்பதின்மராயிற்று, நுமக்கு நிகராவர் ஒருவர் இம்மை யினின்றே" என்று அரசன் சொல்லப் போந்து பின்னையும் கன்மாப்பலகை ஏறியிருந்து, அரசனும் இது சொல்லினான், யாங் காரணிகனைப் பெறுமாறு என்னை கொலென்று சிந்தித் திருப்புழிச், சூத்திரஞ் செய்தான் ஆலவாயிலவிர் சடைக்கடவு ளன்றே! அவனையே காரணிகனைத் தரல்வேண்டு மென்று சென்று வரங்கிடத்து மென்று சென்று வரங்கிடப்ப, இடையா மத்து, "இவ்வூர் உப்பூரி குடிகிழார் மகனாவான் உருத்திரசன் மனென்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப் பிள்ளை உளன் ; அவனை அன்ன னென்றிகழாது கொண்டுபோந்து ஆசனமேலிரீஇக் கீழிருந்து

சூத்திரப் பொருளுரைத்தால், கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும் மெய்யாயின உரைகேட்டவிடத்து; மெய்யல்லா உரைகேட்டவிடத்து வாளா இருக்கும்; அவன் குமாரதெய்வம் ஆங்கோர் சாபத்தினாற் றோன்றினன்" என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கும் உடன் பாடாயிற்றாக, எழுந்திருந்து தேவர் குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரிகுடி கிழாருழைச் சங்கமெல்லாஞ் சென்று, இவ்வார்த்தை யெல்லாஞ் சொல்லி 'ஐயனாவான் உருத்திரசன்மனைத் தரல்வேண்டு' மென்று வேண்டிக்கொடுபோந்து, வெளியதுடீஇ, வெண்பூச்சூட்டி, வெண்சாந்தணிந்து கன்மாப்பலகையேற்றி இரீஇக் கீழிருந்து சூத்திரப்பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைப்பக் கேட்டு வாளாயிருந்து, மதுரைமருதனிளநாகனார் உரைத்த விடத்து ஓரோவழிக் கண்ணீர்வார்ந்து மெய்ம்மயிர் சிறுத்திப் பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்தவிடத்துப் பதந்தோறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான் இருப்ப ஆர்ப்பெடுத்து, 'மெய்யுரை பெற்றும் இந்நூற் கென்றார்.

---

## 2. தமிழ்நாட்டுப் பெண்பாலார்

மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்

### 1. பெண்களின் ஆற்றல்

எந்த வகையான துன்பத்தையும் பொறுக்கும் ஆற்றலே எவ்வகை ஆற்றலிலும் சிறந்தது.

"வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை"

என்பது குறள் ; பலத்துக்குட் சிறந்த பலம் அறிவில்லார் செய்யும் குற்றத்தைப் பொறுக்கும் பொறுமை யென்று அதில் சொல்லப்பட்டிருக்கின்றது. கணவராலும், சுற்றத்தாராலும், குழந்தைகளாலும், மற்றவராலும் உள்ளத்துக்கும் உடலுக்கும் நேரும் துன்பங்களைப் பொறுத்துக்கொண்டு தமக்கென்று ஒன்றையேனும் எண்ணமற் பிறர் நன்மைக்காகவே உழைக்கும் சிறந்த நிலையை யுடையவர் மகளிர்.

"அன்புடைக் கணவ ரழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை"

என்பது பெருங்கதையிலுள்ளது. தம் நாயகர் நன்றாக இருக்க வேண்டுமென்று தம்முடைய பசி, பிணி முதலிய குறைகளை மறைத்து வாழ்ந்த பல பெண்மணிகளுடைய சரித்திரங்கள் உண்டு. அப்படியே தம் குழந்தைகள் சுகப்படவேண்டுமென்று எண்ணித் தம் வருத்தத்தை வெளிக்காட்டாமல் வாழ்ந்தவர்களும் பலர். நல்ல உணவைத் தம் கணவருக்கும் குழந்தைகளுக்கும் கொடுத்துவிட்டு எஞ்சியதை உண்ணும் பெண்மணிகள் பலர்.

தன் குடும்பம் வறுமைப்பட்ட காலத்தில் தன் தந்தையின் வீட்டில் சுகமாக வாழும் நிலை இருப்பினும் அந்த உதவியை நாடாமல் புக்ககத்திலிருந்து தான் மட்டும் ஒரே பொழுது உண்ணும் தன்மையளென்று நற்றிணைச் செய்யுளொன்று ஒரு பெண்ணைப்பற்றிக் கூறுகின்றது. இப்படி யிருப்பதற்கு எவ்வளவு மனோபலம் வேண்டும்!

## வீரப் பெண்கள்

பெண்களுடைய வீரத்திற்கு உதாரணமாகக் கண்ணகியைக் கூறலாம். அவளை வீரபத்தினியென்று வழங்குவர். வீரப் பெண்களது கற்பை மறக் கற்பென்பர்; சீரிய கற்பென்று கூறுவர். கண்ணகியின் வரலாற்றில் அவளுடைய உள்ளத்தின் ஆற்றலும் உடலின் ஆற்றலும் ஒருங்கே காணப்படும்.

புறநானூற்றிலுள்ள சில செய்யுட்கள் வீரக் குடிப்பெண்கள் சிலரைப் பற்றிச் சொல்லுவன. போரில் தம்பிள்ளைகள் பகைவரைக் கொன்று இறந்துபடுவதைப் பெரும் புகழாக அவர்கள் எண்ணினர். வீரக்குடியிற் பிறந்தவர்களை மூதின் மகளிரென்று கூறுவர். தமிழ் நாட்டிலே பழைய காலத்தில் வீரர்கள் இருந்ததற்கு அவர்களுடைய இளமையில் தாய்மார்கள் வீர உணர்ச்சியை அவர்களுக்கு ஊட்டி வந்ததும் ஒரு காரணமாகும்.

## உடல்வலிமைக்குரிய பழக்கங்கள்

தங்களுடைய தேகம் வன்மை பெறுவதற்குரிய வேலைகளை அவர்கள் செய்துவந்தனர். அவ்வேலைகள் யாவும் அவர்களுடைய

தேக நலத்துக் குரியனவாகவும் பணச் செலவைத் தவிர்ப்பன வாகவும் அமைந்திருந்தன. கிணற்றிலிருந்தும் ஆற்றிலிருந்தும் நீர் எடுத்து வருதல், பாத்திரங்களைத் தேய்த்தல், துணிகளைச் சுத்தம் செய்தல், ஆலயம் செல்லுதல் முதலிய காரியங்களால் அவர்களுடைய தேகமும் வீடும் விளக்கத்தை யடைந்தன. தங்கள் வீட்டிற்கு வேண்டிய அப்பளம், வடகம், வற்றல், குழந்தைகளுக்குரிய சிற்றுண்டிகள் முதலியவற்றைப் பிறரிடமிருந்து விலைக்கு வாங்காமல் பெண்களே செய்துவைப்பர்.

## விளையாட்டுக்கள்

பெண்களுக்கென அமைந்த விளையாட்டுக்கள் அவர்களுடைய இயல்புக்கும், உடல் வளர்ச்சிக்கும் ஏற்றபடி இருந்தன. வீட்டில் இருந்தபடியே ஆடும் அம்மானை முதலியன அவர்களுடைய நரம்புகளுக்கு உறுதியை உண்டாக்கின. பந்து விளையாடுதல் பெண்களுக்கே உரிய விளையாட்டாக இருந்தது. பெண்களை வருணிக்கையில் 'பந்தார்விரலி' யென்றும், 'பந்தணை விரலி' என்றும் புலவர்கள் கூறுவர். சில ஸ்தலங்களில் அம்பிகைக்குப் பந்து விளையாடுபவளென்ற பொருளுடைய திருநாமங்கள் அமைந்துள்ளன. கும்பகோணத்திற்கு மேற்கிலுள்ள கோட்டையூரென்னும் ஸ்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் அம்பிகையின் திருநாமம் கந்துகக் கிரீடாம்பிகை என்பது; அது தமிழில் பந்தார்விரலி யென வழங்கும். பெருங்கதையில், "பந்தடி கண்டது" என்ற ஒரு பகுதி முழுவதும் சில பெண்கள் தம்முள் பந்தயங் கூறிப் பந்தாடிய செய்தியை மிக அழகாகவும் ஆச்சரியமாகவும் வருணிக்கிறது. அதனால், இராசனை என்பவள் காலாலும் கையாலும் பந்தை அடித்தாளென்று தெரிகின்றது; பின்பு, காஞ்சனமாலை யென்பவள் பந்தையடித்து ஆகாயத்தில் போக்கியும், அடுத்து வேறொரு பந்தால் அதனைப் பின்னும் அடித்தும், இவ்வாறு ஆயிரத்தைந்நூறு கை அடித்தாள். அப்பால் அயிராபதி யென்பவள் அகங்கையாலும் புறங்கையாலும் ஒரே காலத்தில் மலர் முடித்தும் நெற்றியிற் பொட்டிட்டுக் கொண்டும் இரண்டாயிரங் கை அடித்தாள். பிறகு விச்சுவலேகை யென்பவள் ஒரு கோலெடுத்துத் தட்டிப் பந்து விளையாடினாள். இப்படியே வேறு சிலரும் அடித்தனர். இறுதியில் மானனீகை

யென்ற ஒருத்தி எல்லோரிலும் சிறப்பாக அடித்தாள். அப்பொழுது,

"சுழன்றன தாமங் குழன்றது கூந்தல்
அழன்றது மேனி யவிழ்ந்தது மேகலை
எழுந்தது குறுவியர் இழந்தது சாந்தம்
ஓடின தடங்கண் கூடின புருவம்"

என்று பெருங்கதை ஆசிரியர் விரிவாகக் கூறுகின்றார்.

நகரங்களில் பூம்பொழிலில் மகளிர் கூடிப் பந்தாடும் இடங்கள் இருந்தனவென்று கம்பர் கோசலநாட்டைப்பற்றிக் கூறுகையில் தெரிவிக்கின்றார்.

இங்ஙனம் காலையும் கையையும் வீசியும், குதித்தும் பந்தாடுவதனால் மகளிர் உடம்பிலுள்ள எல்லாப் பகுதிகளும் வன்மை பெறும். மகளிர் பந்தாடும்போது பாடிக்கொண்டே அடிப்பர். அப்படிப் பாடும் பாட்டுக்குக் கந்துகவரி யென்று பெயர். அவ்வகைப் பாட்டுக்கள் சிலப்பதிகாரத்திலும், தத்துவராயர் நூல்களிலும் உள்ளன. பந்தாடுதலையன்றி, சாழல், தெள்ளேணம், தோணோக்கம், கோலாட்டம், கும்மியடித்தல், உந்தி முதலிய மகளிர் விளையாட்டுக்கள் பல; அவற்றில் கும்மி, கோலாட்ட மென்பவற்றையன்றி மற்றவற்றை இப்போது காணுதல் அரிது. பழந்தமிழ் நூல்களாலேயே அவ்விளையாட்டுக்களை அறிகிறோம். பெண்களுடைய சங்கீதப் பயிற்சிக்கும் தேகப் பயிற்சிக்கும் அவை ஏற்றபடி இருந்தன; அவற்றால் அவர்கள் நோயின்றியும் வாழ்ந்தனர். ஆண்களைக் காட்டிலும் பெண்டிர் அதிக உணவை உண்ணுபவர்களென்பது ஒரு வடமொழிச் சுலோகத்தில் உள்ளது. அதற்குக் காரணம் அவர்களுடைய உழைப்பின் மிகுதியேயாம்.

## 2. பொது வாழ்க்கை

இனி, பொது வாழ்க்கையில் பெண்கள் மேற்கொண்ட செயல்களை ஆராய்வோம்.

### குடும்பத் தலைவி

ஒரு வீட்டின் தலைவி பெண் என்பது நம் நாட்டினர் அமைத்த அமைப்பு. அதனால்தான் இல்லென்றும் மனையென்

றும் பெண்டிர்கள் வழங்கப்படுவர். ஒரு குடும்பத்தின் இன்ப துன்பங்கள் அக்குடும்பத்துத் தலைவியின் இயல்புக் கேற்றபடி அமைந்தவை;

"இல்லதேன் இல்லவள் மாண்பானால் உள்ளதேன்
இல்லவள் மாணாக் கடை".

என்ற திருக்குறளின் கருத்து இதுவே.

இல்லாளுடைய உடன்பாட்டைப் பெற்றே தலைவன் தருமம் செய்யவேண்டும். காஞ்சிபுரத்திலும், திருவையாற்றிலும், செங்கோட்டையிலும் அம்பிகை அறம்வளர்த்த வரலாறுகள், தருமம் செய்யும் உரிமை பெண்கள்பால் உண்டென்பதைத் தெரிவிக்கின்றன. புறநானூற்றில் குமணன்பாற் பரிசு பெற்று வந்த பெருஞ்சித்திரனா ரென்பவர் தம் மனைவியை நோக்கிக் கூறியதாக ஒரு செய்யுள் (163) உள்ளது: "இதோ நான் கொண்டுவந்த இந்தப் பொருள்களை உனக்கு வேண்டியவர்களுக்கும், உன்பால் அன்புடையவர்களுக்கும், நம் சுற்றத்தாருக்கும் நிறையக்கொடு; உனக்குக் கடனாகத் தந்து பலநாட்களாகத் திரும்ப வாங்கிக்கொள்ளாமல் இருப்பவர்களுக்கும் கொடு; இன்னும் உன்னுடைய விருப்பப்படியே கொடுக்கவேண்டியவர்களுக்கெல்லாம் கொடு. என்னைக் கேட்கவேண்டுமென்பதில்லை; பின்னுக்கு இதை வைத்துக்கொண்டு சுகமாக இருப்போமென்றும் எண்ணாதே; எல்லோருக்கும் கொடு" என்று அவர் கூறுகின்றார். சம்பாதிப்பது தம் கடமையென்றும், தருமம் செய்வதும் செலவு செய்வதும் தம் மனைவியின் கடமையென்றும் அப்புலவர் எண்ணினர்.

## விருந்தோம்பல்

விருந்தினர்களை உபசரிப்பதில் பெண்களே மிக்க கவனமுடையவர்கள்; தம் வீட்டில் ஆண்பாலார் இல்லாத சமயத்தில் விருந்தினர் வரின் தம் குழந்தைகளை அனுப்பி மாமா, சிற்றப்பா என்ற முறை வைத்து அவர்களை அழைத்துவரச் செய்து உபசரித்தனுப்புவர். இந்தச் செய்தி, சிறுபாணாற்றுப் படையிலும் மலைபடுகடாத்திலும் காணப்படுகிறது. எந்தச் சாதியினராயினும் அவர்களுக்கேற்ற முறையில் உணவளித்து உபசரித்தல்

மகளிர் வழக்கம். பாணர்களைப் பலசாதி மகளிரும் உபசரித்து உண்பிக்கும் செய்திகள் பெரும்பாணாற்றுப்படையால் தெரிய வரும்.

கண்ணகி கோவலனைப் பிரிந்து வாழ்ந்த காலத்தில் தனக்கு உண்டான குறையாக வேறொன்றையும் கூறாமல்,

> "அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
> துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும் இழந்த வென்னை"

என்று, தான் அறவோர் முதலியோரை உபசரியாததையே ஒரு பெருங் குறையாகச் சொல்லுகிறாள். அசோகவனத்தில் இருந்த காலத்தில் சீதை இராமபிரானை நினைந்து, "விருந்தினரைக் கண்டால் என்ன செய்வரோ !" என வருந்தியதாகக் கம்பர் அமைக்கின்றார்;

> "விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்"
> (காட்சிப் படலம், 15)

இவற்றால் பெண்களுக்கு விருந்தெதிர்கொள்ளும் தருமம், சிறந்ததென்று பெறப்படுகின்றது.

கணவர்பால் தமக்கு ஏதாவது மனவருத்தம் உள்ள காலத்திலும் விருந்தினர் வந்தால் அதனை மறந்து உபசாரம் செய்தல் பெண்கள் வழக்கம். கணவர் வீட்டிற்கு வருகையில் தம் மனைவியர் கோபமாக இருத்தலை யறிந்தால் அது நீங்குவதற்காக விருந்தினரை உடனழைத்து வருவர் ; அப்பொழுது அவர்களுடைய கோபம் நீங்கும் ; இதனை, "விருந்துகண் டொளித்த ஊடல்" என்று புலவர் கூறுவர்.

## கற்பு

பெண்களுடைய கற்பைப்பற்றிப் பல நூல்கள் சொல்லுகின்றன. தம் கணவன்மார் உயிர் நீப்பின், உடனே இயல்பாக உயிர் நீங்குதல் தலையாய கற்பென்றும், அக்கினிப் பிரவேசம் செய்தல் இடையாய கற்பென்றும், கைம்மை விரதம் பூணுதல் கடையாய கற்பென்றும் கூறுவர். பாண்டியன் நெடுஞ் செழியன், பொன்செய் கொல்லன் சொற் கேட்டுக் கோவலனைக் கொல்

வித்தபோது தன் குற்றத்தைக் கண்ணகியால் அறிந்து உடனே உயிர்நீத்தான். அவன் உயிர்நீத்த அப்பொழுதே அவனுடைய தேவியும் உயிர் நீத்தாள். இங்ஙனம் இறத்தலை 'மூதானந்த' மென்பர்.

தலைவன் இறந்தபோது தானும் உடன் எரிபுகுதலை 'ஆனந்தப்பைய' ளென்பர்; "ஸஹ கமனம்" என்று பிறர் வழங்குவர்.

"நல்லோள் கணவனொடு நளியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலை" (புறத்திணை-24)

என்று **தொல்காப்பியத்தில்** இச்செய்தி சொல்லப்படும். **பூதப்பாண்டிய** னென்னும் அரசனுடைய தேவியாகிய **பெருங்கோப்பெண்டு** இங்ஙனம் தீப்பாய்ந்த கற்புடை மகளிருள் ஒருத்தியாவாள். அவள் தீப்புகத் தொடங்குகையில் அவளைப் புக வேண்டாமென்று சில முதியோர் தடுத்தனர். அவர்களை நோக்கி அவள், "நீங்கள், என்னைக் கணவருடன் செல்வாயாக வென்று சொல்வதற்கு மாறாக இவ்வாறு தடுக்கின்றீர்களே! பிராயம் முதிர்ந்ததனால் என்ன பயன்? உங்களுடைய சாத்திர விசாரத்தை என்னவென்று சொல்வது! கணவர் இறந்த பின்பு கைம்மை நோன்பியற்றி வாழும் பெண்டிர்களுள் ஒருத்தியல்லள் நான். குளிர்ந்த பொய்கையும் நான் புக எண்ணிய தீயும் எனக்கு ஒன்றே" என்று கூறித் தீப்பாய்ந்தாள். கைம்மை நோன்பியற்றும் பெண்டிர், நெய், மலர், படுக்கை இவற்றை விரும்பார்; இலைக்கறியை உண்பர்.

## தாயெனக் கருதுதல்

ஆடவர்கள் யாவரையும் தகப்பனென்னும் முறை பாராட்டுவது இல்லை. ஆனால் பெண்களைமாத்திரம் பிராயம், சாதி முதலிய வரையறை யில்லாமல் தாயென்று கருதுவது முன்னோர் வழக்கம்; சகோதரிகளாகச் சொல்வது நவீன வழக்கம். பண்டைக்காலத்தில் மனைவியைத் தவிர்த்து மற்ற யாவரையும் தாயென்றே சொல்லிவந்தனர். ஆடவர்களுடைய பெயர்களுக்குப் பின் செட்டியார், முதலியார் முதலிய சாதிப்பெயர்கள் இருப்பது போலன்றி எல்லாப் பெண்களுக்கும் அம்மை, அம்மா, ஆச்சி என்று அமைத்திருத்தலே இக்கொள்கைக்குச் சிறந்த ஆதாரமாகும். காரைக்காலம்மையார், நச்செள்ளையாரென்ற

பெயர்களைப் பார்க்க. செல்லை என்பது, தாயின் பெயர்; ந என்பது சிறப்புப் பொருளைத் தருவது.

## தெய்வமாகப் போற்றல்

கற்புடைய பெண்களைத் தெய்வமாகப் போற்றும் வழக்கம் பழங்கால முதல் உண்டு. **கண்ணகிக்கும், ஔவையாருக்கும் கோயில்கள்** இருக்கின்றன. **மங்கையர்க்கரசியாரைச் சேக்கிழார்,**

"மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்"

என்று வாயாரப் பாடுகின்றனர். கற்புடைய மங்கையர் இறந்த விடத்துக் கல்நட்டுப் பூசித்தனர்; **மாஸ்திக்கல்** என்பது அதன் பெயர். இன்றும் மங்கலத்தோடு இறந்த பெண்களைத் தெய்வ மாகக் கொண்டாடும் வழக்கம் நம் குடும்பங்களில் உள்ளது.

---

# 3. கலைகள்

[ திரு. வி. கலியாண சுந்தர முதலியார் ]

[இக் கட்டுரை இந்தியாவும் விடுதலையும் என்ற நூலிலிருந்து ஆசிரியர் இசைவு பெற்று எடுத்துக்கொள்ளப்பட்டது ]

பழைய இந்தியாவில் வாழ்வுக்குரிய கலைகள் படிப்படியே பிறந்தன; வளர்ந்தன. அவை தொகையில் ஆறு; வகையில் அறுபத்து நான்கு. அவைகளிற் சிறந்து விளங்குவன சிலவே. அறம் மலிந்த அரசாட்சியில் - வறுமையற்ற ஆட்சி முறையில்- நல்ல கலைகள் அறிஞர் வாயிலாகப் பிறத்தல் இயல்பு. முற்கால இந்தியாவிலேயே சிறந்த கலைகள் தோன்றின எனில், நம் நாட்டின் தொன்மையை என்னென்று புகழ்வது?

காவியக்கலையில் இந்தியா பேர்பெற்றது. இந்தியக் காவி யங்கள் மலையெனக் குவிந்து கிடக்கின்றன; கடலெனப் பரந்து கிடக்கின்றன. பழைய இந்தியக் கவிகள், இயற்கைச் சூழ லிடை வாழ்ந்தவர்கள். அவர் தம் புலன்களும் மனமும் இயற் கையில் ஒன்றி இயற்கை வண்ணமானவை. இயற்கை மனத் தினின்றுஞ் சுரக்கும் எண்ணங்கள் இயற்கைப் பாக்களாகு

முல்லவோ? இயற்கைப் படங்களே இயற்கைப் பாக்கள் என்பன.

இந்தியக் காவியத்துக்குக் கால்கொண்டவர் எவர்? வால்மீகி என்று இந்தியக் காவிய உலகங் கூறும். வால்மீகி இயற்கைப் பசுமையிடை-பறவைப் பாட்டிடை-வாழ்ந்தவர்; வளர்ந்தவர். அவரே பழைய இந்தியக் காவியத் தந்தை. அவர் வாயினின்றும் பிறந்த இராமாயணம், காவிய உலகுக்கோர் இலக்கியம்; வாழ்வுக்கோர் எடுத்துக்காட்டு; பழம் பாரதத்தின் உயிரோவியம்; இயற்கை நிலையம்; அறத்தின் உறையுள்; சரித்திரக்கூடம்; காதலின் காதல்; வீரத்தின் வீரம். வால்மீகியின் வழிவழித் தோன்றிய சேய்கள் பல.

கி. மு. ஆறும் நூற்றுண்டிலேயே பதினைந்து வித இலக்கணங்கள் தோன்றின என்று சரித்திர ஆசிரியன்மார் கூறுகின்றனர். அந்நூற்றுண்டுக்கு முன்னரே பல நற்காவியங்கள் நாட்டிடை மலிந்திருத்தல் வேண்டும். இந்தியக் காவியஉலகின் தொன்மையை என்னென்று கூறுவது!

ஓவியம், காவியம் போன்றதே. காவியமும் இயற்கைப் படம்; ஓவியமும் இயற்கைப் படம்; இயற்கைக் கூறுகள் காவியத்தில் ஒருவிதமாகவும், ஓவியத்தில் வேறுவிதமாகவும் இறக்கப்படும். இறக்கப்படும் விதத்தில் இரண்டுக்கும் வேற்றுமையுண்டு. பொருட்பயனில் இரண்டுக்கும் வேற்றுமை இல்லை. ஓவியம் காவியமே; காவியம் ஓவியமே.

பாரதமாதாவே ஓர் ஓவியம். மலைமுடியும், ஆற்றணிகளும், பசும்போர்வையும், நீலக்கடலுடையும் கொண்ட ஓரழகிய வடிவம் ஓவியமன்றே? தாயின் ஓவிய இயல் அவள் கருவிடைத் தோன்றும் சேய்களிடத்திலும் அமைதல் இயல்பன்றே?

இந்தியா ஓர் ஓவியக்கூடம். எவ்வோவியத்தை ஈண்டு எடுத்துக்காட்டுவது? பல தோன்றித் தோன்றி மறைகின்றன. ஒன்று நினைவில் உறுத்து நிற்கிறது. அஃது எது? அஃது எல்லோரா.

எல்லோரா, இமயக் கொடியில் பொலியும் ஒரு வெள்ளிய மலரின் ஓவியம். அவ்வோவியத்தைக் காண்போர், இது 'மனித

னால் செய்யப்பட்டதா? தெய்வத்தால் செய்யப்பட்டதா?" என்று ஐயுறுவர். ஒரு பெரும்பாறை, எல்லோரா ஓவியமாக அமைந்துள்ளது. அதை வடித்த ஓவியரே, அதைப் பார்த்துப் பார்த்து, 'இஃது என்னிடத்தினின்று முகிழ்த்ததா' என்று ஐயுறுவாராம். இதையொட்டி ஓர் அற்புதக் கதையும் வழங்கப் படுகிறது. 'ஓவியத்தெய்வமே ஒரு சிற்பனுருக்கொண்டு எல்லோராவை அமைத்ததுபோலும்' என்று பேசுவோருமுளர்.

எல்லோராவை யொத்த ஓவியங்கள் பலப்பல பாரதத்தை அழகு செய்கின்றன. பழைய இந்தியர் கோயில்களில் உயிரோவியங்கள் பல இன்னுங் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன.

பழைய இந்திய ஓவியங்களை எடுத்த அறிஞர், பள்ளிகளில் பணந்தந்து படித்துப் பட்டம் பெற்றவரல்லர்; பிறநாடுசென்று தேர்ச்சிபெற்று வந்தவரல்லர். ஏட்டுப்படிப்பில் அவர் நாட்டஞ் செலுத்தியதில்லை. முன்னாளில் ஓவியக்கலை எப்படி வளர்ந்தது? அது வழிவழியே வளர்ந்து வந்தது. பழைய இந்திய ஓவியர் எவ்வழியில் காவியப் புலவோர்க்குக் குறைந்தவராவர்? முன்னுக. தொழிற் கல்வியின் மாண்பு என்னே! என்னே! மற்றுமுள்ள தொழிற் கல்வித் துறைகள் பலவும் வழிவழிப்பிறந்து வளர்ந்தனவே.

இந்திய இசைக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ வேறு ஒரு நாட்டு இசை இன்னும் தோன்றவில்லை; இனியும் தோன்றாதென்றே கூறலாம். இந்தியாவின் தட்ப வெப்ப இயற்கையில், இசைவளர்ச்சிக்குத் துணைசெய்யும் நீர்மையது. அதனால் இந்திய மக்கள், சரித்திரக் காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே இசையின் எல்லையைக் காணும் பேறு பெற்றார்கள்.

நம் முன்னோர் நாதத்தின் இசை நுட்பம் கண்டவராதலின் அவரிடத்திருந்து ஏழிசையும், யாழ் குழல் என்ற இசைக்கருவிகளும் பிறந்தன. யாழுங் குழலும் விலங்குகளையும் வயப்படுத்தும் நீர்மையன; மனிதரிடத்திலுள்ள விலங்கியல்புகளைக் கல்வியொழிக்குந் தன்மையன. கண்ணபிரானும் ஆனயரும்

இசை முழக்கியபோது பலவித விலங்குகளெல்லாம் தங்களை மறந்து - பகைமை மறந்து - ஒன்றாகி, இன்பம் நுகர்ந்ததை நமது நாட்டு நூல்களிற் காண்க. தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் இயற்றிய கருணாமிர்த சாகரம் என்னும் நூலில் முற்கால இந்தியரின் இசை நுட்பங்கள் பேசப்பட்டுள்ளன.

நமது நாட்டு இசை, நாத தத்துவத்தினின்றும் தோன்றிய ஒன்றாதலானும், அத் தத்துவத்துக்கு மேல் வேறு தத்துவம் இன்மையானும், அதைக் கடந்து சாந்தத் தெய்வம் விளங்குதலானும், அது தன்னை முழக்குவோரையும் கேட்போரையும் சாந்தத்தில் திளைக்கச் செய்யும். எத்தனையோ யோகியர் எத்துணையோ யாண்டு, தவங்கிடந்தும் அடைய இயலாத சாந்த நிலையை, நமது நாட்டு நல்லிசை எளிதில் கூட்ட வல்லதெனில், அதன் மாண்பை விரித்துக் கூறுதல் வேண்டுங்கொல் ?

கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டு நூற்றாண்டுக்கு முன்னரே முற்கால இந்தியர், நாதம் காற்றலையில் தோன்றுகிறதா, ஆகாய அலையில் தோன்றுகிறதா என்ற ஆராய்ச்சியில் தலைப்பட்டனரென்று சரித்திரஞ் சொல்கிறது.

நாட்டியம் இசையுடன் தொடர்பு கொண்டது. இசையின் உணர்ச்சியை வெளிப்படுத்துவது நாட்டியம். நமது நாட்டுப் பரதநாட்டியத்தால் ஒவ்வொரு நாடிநரம்பும், ஒவ்வோர் உறுப்பும் பயிற்சி பெறும். அந்நாட்டியம் தன்னைப் பயில்வோரிடம் பிணி அணுகாதவாறு காத்துவரும் ; உடலில் அழகொழுகச் செய்யும். இந்திய நாட்டியக்கலை, கி. மு. இரண்டாம் நூற்றாண்டிலேயே பண்பட்டு வளம் பெற்றிருந்தது. இன்னும் அஃது ஆட்சியிலிருந்து வருதல் அதன் மாண்பை உணர்த்துவதாகும்.

இந்தியச் சோதிடக்கலை தொன்மை வாய்ந்தது. சோதிடக் கலை இந்தியாவினின்றும் கிரீஸ் சென்றதென்றும், கிரீஸினின்றும் இந்தியா வந்ததென்றும் சொல்லப்படுகின்றன. இதுபற்றிய ஆராய்ச்சி, இன்னும் முற்றுப்பெறவில்லை. இதுவரை எழுந்துள்ள ஆராய்ச்சிகளையும், கண்டுள்ள முடிபுகளையும் சிந்தனை செய்தால் சில நுட்பங்கள் இந்தியாவினின்றும் கிரீஸுக்குச்

சென்றிருக்கலா மென்றும், சில நுட்பங்கள் கிரீஸினின்றும் இந்தியாவுக்கு வந்திருக்கலாமென்றும் விளங்குதல் பெறலாம்.

சோதிடக்கலை இந்நாளில் மேல்நாட்டில் நன்கு பெருகி வளர்ந்து வருகிறது. கோள்களின் நிலைகள் செவ்வனே கணிக்கப் படுகின்றன. ஆனால் பலன் சொல்வதில் இன்னும் மேல்நாட் டார் பண்படவில்லை. இக்காலக் கணிதஞான மில்லாத கிராமச் சோதிடன் சொல்லும் பலனில் பெரிதும் தவறுதல் நேராதிருப் பது கருதற்பாலது.

கிறிஸ்து பிறப்பதற்கு எத்துணையோ ஆண்டுகட்கு முன் னரே இந்தியாவில் மருத்துவக்கலை மருவலாயிற்று. இந்திய மருத்துவத்தில் சத்திரமும் உண்டு ; மருந்தும் உண்டு.

சத்திரவித்தை இந்தியாவினின்றும் மேல் நாட்டுக்குச் சென்றது. இதனை ஜெர்மன் மருத்துவ அறிஞர் சிலர் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஏறக்குறைய ஆயிரம் ஆண்டாக இந்தியச் சத்திர வித்தை மேலும் மேலும் ஓங்கா தொழிந்தது. பழைய வழியில் சத்திரஞ் செய்வோர் இன்னும் ஈங்கொருவராக ஆங் கொருவராக இருக்கின்றனர். சுதந்தர மேல் நாட்டில் அவ் வித்தை மேலும் மேலும் வளர்ந்தே செல்கிறது.

மருந்தில் இன்னும் மேல்நாடு இந்தியாவுக்கு ஒப்பாகவும் வரவில்லை என்று கூறலாம். தொழுநோய் (குஷ்டம்), என் புருக்கி (க்ஷயம்), நீரிழிவு (மதுமேகம்) முதலிய பெருநோய்களை முற்றும் - அறவே - போக்கவல்ல மருந்து இன்னும் மேல் நாட்டு மருத்துவத்தில் கருக்கொள்ளவில்லை. அப் பெருநோய் களை அறவே போக்கவல்ல இந்திய மருந்துகள் இந்நாளிலும் கிடைக்கக்கூடியனவா யிருக்கின்றன. அம்மருந்துகளைச் செய் யும் மருத்துவர் தொகை நாளுக்கு நாள் சுருங்கி வருவது வருந்தத் தக்கது.

முற்கால இந்திய மருத்துவம், இரு கிளையாகப் பிரிந்து நின்றது. ஒன்று சித்தமுறை; இன்னொன்று ஆயுள் வேதமுறை. முன்னையது பெரிதும் முறிந்து பண்பட்ட ரசகந்த பாஷாணங் களால் ஆவது ; பின்னையது பெரிதும் மூலிகைகளால் ஆவது. இரண்டும் இன்றியமையாதன.

பழங்கால இந்திய மருத்துவத்தில் ஒரு தனிச் சிறப்பிருக்கிறது. அது நாடிபார்த்து நோய்களின் தன்மையை அளந்து கூறுவது.

இந்திய மருத்துவம் இன்று உண்டானதன்று; நேற்று உண்டானதன்று. அஃது அதர்வ வேதத்தில் விளங்குஞ் சிறப்புப் பெற்றுள்ளது. அதர்வ வேத காலம் 800 கி. மு. என்று இக்கால ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். முற்கால இந்திய மருத்துவத்தின் தொன்மை, சிறப்பு முதலியன பி. ஸி. ரே. எழுதிய ஹிந்து மருத்துவ நூலில் விளக்கப்பட்டுள்ளன.

கி. மு. நாலாம் நூற்றாண்டிலேயே இந்திய அரசியற் கலைகளும், பொருளாதாரக் கலைகளும் யாக்கப்பட்டன.

பழங்கால இந்தியரால் சமயக்கலை மிக ஊக்கமுடன் வளர்க்கப்பட்டது. அவர் இயற்கை இயலை - உயிர் இயலை - இறை இயலை — ஆராய்ந்தனர்; அவைகளின் உண்மையையும் படிப்படியே கண்டனர். இயற்கை-உயிர்-இறை ஆகியவற்றின் ஆராய்ச்சியும், தெளிவும் பண்டை இந்தியரிடைச் சமய வொழுக்கத்தைப் புகச் செய்தன.

பழைய இந்தியர் சமயம் எது? அதன் நிலை எப்படியிருந்தது? இவை சிக்கலான கேள்விகள். இவைகட்குப் பலர் பலவாறு விடை இறுப்பார்.

சமயம் இந்தியாவின் உயிர்; மற்றவை உடல்-உறுப்புக்கள். இந்தியாவின் கல், மண், புல், புழு முதலிய எல்லாஞ் சமயக் காட்சி வழங்கிய காலமுமுண்டு. இந்தச் சமயம் உலகுக்கு இமயமாயிற்று; கங்கையாயிற்று. இமயமும் கங்கையும் சமயக் குறிகள்.

முற்கால இந்தியரின் சமயக் கலைகள் எவை? சித்த நூல்களும், ருக்வேதமும், பிறவுமெண்க. பழஞ்சித்த நூல்களில்பல மறைந்தன.

---

# 4. தமிழ் வேந்தரின் இமயப் படையெடுப்பு

(இராவ் சாகிப். மு. இராகவையங்கார்)

பரத கண்டத்தின் தென்பகுதியானது பழங்கால முதலே சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தரின் ஆட்சிக்கமைந்த நிலமாகத் 'தமிழகம்' என்ற பெயர்பெற்றிருந்ததாகும். 'வண் புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' (தொல்காப்பியம்) 'இமிழ் கடல் வேலித் தமிழகம்' (சிலம்பு) என வரும் முன்னோர் கூற்றுக்களால் இதனை அறியலாம். மூவேந்தரும் ஆட்சி புரிந்து வந்த இத் தமிழ் நாடு அவர்களின் கூட்டு வலிமையால் சுதந்திரம்பெற்ற தனித்தேசமாய் முற்கால முதலே பெருமை பெற்று விளங்கியது. பரதகண்ட முழுமையும் தன் ஒருகுடைக் கீழ் வைத்து ஆட்சி புரிந்த மௌரிய சக்கரவர்த்தியாகிய அசோகனும், தமிழகத்தைத் தன்னாட்சிக் கடங்காத தனி நாடாகவே மதித்துக் கௌரவித்து வந்த செய்தியை அவன் சாஸன வாயிலாக அறியலாம். இம்மதிப்புக் கேற்றபடி வட வேந்தர்களும் அஞ்சத்தக்க அரிய செயல்களைத் தமிழரசர் அவ்வக் காலங்களிற் காட்டி வந்தவர் என்பது பழைய நூல் களால் அறியக் கிடக்கின்றது. நெடுஞ் சேரலாதன் என்ற சேர வேந்தன், 'இமய வரம்பன்,' 'விடர்ச்சிலை பொறித்தவன், என்று முன்னூல்களிலே புகழப்படுகின்றான். இமயவரம்பன் என்பதற்கு, இமயகிரியைத் தன் ஆணை செல்லும் எல்லையாகக் கொண்டவன் என்பதும், 'விடர்ச்சிலை பொறித்தவன்' என்ப தற்கு, இமயத்தில் தன் இலாஞ்சனையாகிய வில்லைப் பொறித் தவன் என்பஃதும் பொருள்களாம். பதிற்றுப்பத்தின் இரண் டாம் பத்தால் அச் சேர வேந்தனைப் பாடிய குமட்டூர்க் கண்ணனார் என்ற புலவர்,

> "ஆரியர் துவன்றிய பேரிசை யிமயம்
> தென்னங் குமரியோ டாயிடை
> மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே"

என்று கூறுதல் காண்க. பரணர் என்ற புலவர் பெருமானும்,

> "ஆரியர் அலறத் தாக்கிப் பேரிசைத்
> தொன்முதிர் வடவரை வணங்குவிற் பொறித்து
> வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்" (அகம், 396.)

என்று புகழ்வர். இவற்ருல், இமயமுதல் குமரி வரை தன் ஆற்றலைப் பரப்பியவன் இவ் வேந்தன் என்பது தெரியலாம். இவன் 'நயனில் வன்சொல் யவனரைப் பிணித்தவன்' என்றும் புகழப்படுவன்.

இவ்வாறே, திருமாவளவன் என்ற சோழனொருவன் வடதிசை முழுதும் வெல்ல எண்ணிப் படையெடுத்துச் சென்று ஆங்குத் தன் அருந்திறலைக் காட்டி, இமயத்தில் தன் புலிப் பொறியை நாட்டி மீண்டனன் என்று முன்னூல்களும், பின்னூல்களும்ஒருங்கே புகழ்கின்றன. இவனைக் கரிகாலன் என்று கருதுவர்.

இனி, பாண்டிய முன்னேருள் ஒருவனும், தன் குலச் சின்னமாகிய மகர இலாஞ்சனையை இமயகிரியிற் பொறித்தவன் என்று சாஸனங்களும், நூல்களும் புகழும். இவனை மலையத்துவசன் என்றும், உக்கிர குமாரன் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

"பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர் தம் குலபதி போல்" என்றார் பெரியாழ்வாரும். இவ்வாருகத் தமிழரசர் மூவரும், இமயம் வரை சென்று தம் ஆற்றலைத் தோற்றுவித்த பெருமையுடையவர் என்பது, முன்னேர் மொழிகளால் நன்கறியப்படுகின்றது.

தமிழ் வேந்தர்களைப் பற்றிக் கூறப்பட்ட இச் செய்திகளிலே, நவீன சரித்திர அறிஞர் பலரும் ஐயுறுவர். 'கிறிஸ்தவ ஆண்டுக்கு முன்னும் பின்னும் பல நூற்றுண்டுகள் வரை இருந்த வடவேந்தர்கள் பேராற்றல் பெற்று விளங்கியவராதலாலும், தமிழரசரின் வடவெற்றியைக் குறிப்பிடத்தக்க பிரமாணமொன்றும் வடக்கே அகப்படாமையாலும், அவரது இமயப் படையெடுப்பைப் பற்றிய செய்திமுழுவதும் வெறுங் கற்பனையே யன்றிப் பிறிதில்லை' என்பது, அன்னேர் முடிவு. அவர்கள் கூற்றைக் கொண்டு, சங்க காலத்துச் சான்றேர் பலரும் ஒருமுகமாகக் கூறும் சரித்திர உண்மையை நாம் புறக்கணித்தல் பெருங் குற்றமாகும். அசோக வர்த்தனன் காலத்தில் அவனால் மதிக்கப்பெற்ற சுதந்தரநாடுகளிலே ஒன்ருகத்தமிழகம் விளங்கியதென்பதில், அச்சரித்திர அறிஞர்எவரும்

சந்தேகம் கொண்டவர் அல்லர். பரத கண்டத்தின் பெரும் பகுதியையும் ஆண்ட அவ் அசோகனுக்கு, அதன் தென் கோடியிலுள்ள தமிழகத்தையும் கைப்பற்றிக் கொண்டு, பொதுவற இக்கண்ட முழுமையும் ஆட்சிபுரியும் விருப்பம் இருப்பது இயல்பன்றோ? தனக்குப் பணியாத கலிங்க தேசத்தை அவன் போரிற் படுத்திய பாடு சரித்திர உண்மையன்றோ? அவ்வாறே தனியே பிரிந்து நின்ற தமிழ் நாட்டினும் அவன் சிந்தை சென்றிருக்கக் கூடியதுதானே? அவ்வாறு அதனைக் கைப்படுத்த அச் சக்கரவர்த்தி ஒரு முயற்சியும் செய்யாது போன தென்னே? அன்றியும், தமிழ் நாட்டைப் பாரசீகம், கிரேக்கம் முதலிய அன்னிய தேசம்போலவே மதித்து, தன் சமய தூது வர்களைத் தமிழ் வேந்தரிடம் அவன் விடுத்திருப்பதும் குறிப் பிடத்தக்கது. இவற்றால், அச் சக்கரவர்த்தி காலத்துக்கும் முன்பே, தமிழரசரின் பேராற்றல் ஆரிய வேந்தரும் மதிக்கத் தக்க நிலையில் அமைந்திருந்ததென்பது நன்கு விளங்கும். அத் தகைய மதிப்பு வட வேந்தர் உள்ளத்தே ஊன்றியிருக்க வேண்டுமாயின், அதற்கு, அவர்களும் அஞ்சும்படியான பெருஞ் செயல்கள் சிலவற்றைத் தமிழக வேந்தர் அவர்களறியச்செய்து காட்டி வந்ததே காரணமாதல் வேண்டும் என்றும், அச் செயல் களுள் ஒன்றாகவே அவர்களது இமயப்படையெடுப்பும் அமைந் திருத்தல் வேண்டும் என்றும் நாம் கருதல் தகும்.

பெருவீரனான சேரன் செங்குட்டுவன், ஆரிய அரசரை வெற்றி கொள்ளவும், பத்தினிக்குக் கல்லெடுத்து வரவும் நடாத்திய வடயாத்திரை வரலாறுகளைச் சிலப்பதிகாரம் முதலியவற்றால் பலரும் அறிவர்.

"வட நாட்டில் நடந்த அரச கன்னி யொருத்தியின் திரு மணத்தில் விருந்தினராக ஆரிய மன்னர் பலர் ஒருங்கு கூடி யிருந்தபோது, 'தமிழ்நாட்டரசர் போர்க்கோலம் பூண்டுவந்து இமயகிரியில் தம் இலாஞ்சனைகளான வில், புலி, கயல்களைப் பொறித்துச் சென்ற காலத்திலே, எங்களைப்போலும் வீர சூரர் களான வேந்தர் இருந்தனர் இல்லைபோலும்' என்று கூறி நகையாட, அவ்விகழ்ச்சியுரையை வடபக்கத்தினின்று வந்த மாதவர் சிலரால் அறிந்தனன் செங்குட்டுவன்" என்பது, மேற் கூறிய சிலப்பதிகாரத்தின் அடிகளினின்று தெரியலாம். இச்

செய்தியைக் கொண்டு நோக்குமிடத்து, தமிழரசர் இமயத்தில் தம் சின்னங்களைப் பொறித்தவர் என்ற வரலாற்றில், நவீனர் சிலர்க்கு உள்ளதுபோல், செங்குட்டுவன் காலத்து வடவேந்தர்க்குச் சிறிதும் ஐயமிருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், 'தம்போலும் வீர சூரர்கள் தமிழரசரை எதிர்த்துப் போராட அக்காலத்து இல்லைபோலும்' என்பதே அவர்கள் தற்பெருமையாகக் கூறிக்கொண்டது. எனவே, பண்டைக்காலத்து ஆரிய வேந்தர் கருத்தாலும், தமிழ் மன்னரின் இமயப் படையெடுப்பு உண்மை வரலாறாகவே கொள்ளப்பட்டிருந்தவை தெளிவாகும். செங்குட்டுவன் சரிதத்தைப் பாடிய அவன் தம்பி இளங்கோவடிகள் கூறும் இச் செய்தியையுங் கற்பனையாகப் பிறர் கருதுவதற்கில்லை. அச்சேரர் பெருமான் வட நாட்டிற் படையெடுத்துச் சென்ற காரணம், வடவரசர் இகழ்ந்து கூறிய தமிழ்க்குலப் பெருமை தம்மவர்க்கு உண்டு என்பதை மெய்ப்பித்தற்காகவேயன்றோ? அங்ஙனம் தமிழராற்றலை வடவர்க்கு வலியுறுத்திக் காட்டிய செங்குட்டுவனது அருஞ்செயலை, பிரமாணங்கள் சில தற்காலங் கிடையாமை பற்றிச் சிலர் எளிதாகக் கருதி யிகழ்வராயின், அஃது அவ்வட வேந்தர் செயலினும் அதிசயிக்கத் தக்கது என்றே நாம் சொல்லத் தடையில்லை. ஆகவே, முன்னோர் கூற்றுக்களை எளியனவாகப் புறக்கணித்தற்குத் தமிழறிஞர் ஒருகாலும் ஒருப்படார் என்க.

சேர நாட்டை யடுத்து ஆட்சிபுரிந்த கங்க வமிசத்தரசர்கள், இமயச் சாரலில் உள்ள நேபாளத்தை அடிப்படுத்திப் பல தலைமுறை ஆண்டது போலவும், கலிங்க வேந்தான காரவேலன், மகதம் அங்கமுதலிய வடநாடுகளை வென்று பெருமை பெற்றது போலவும், பிற்காலத்துத் தமிழ் வேந்தருள் முதலாம் இராஜேந்திரன், கங்கைக் கரை வரையுமிருந்த வடநாடுகளையும், கடாரம் முதலிய தீவாந்தரங்களையும் வென்று, 'கங்கைகொண்ட சோழன்' என்ற பெரும் பெயர் பெற்றது போலவும், ஒரு காலத்தில் மூவேந்தரது ஆற்றல் இமயம் வரை ஓங்கியிருந்தது என்றே முன்னோர் கூற்றுக்களிலிருந்து நாம் கொள்ளத்தகும்.

மேற்கூறியவாறு சேர சோழ பாண்டியர் மூவரும் இமயத்தில் இலச்சினை பொறித்த பெருமை தத்தமக் குரியதாகத்

தனித்தனியே பாராட்டிக் கொண்டன ராயினும், அம் மூவரும் ஒன்றுகூடி வடவருடன் போராடி அப்பெருமை படைத்தவர் என்றே கருதலாம்.

"தென்றமிழ் நாடாளும் வேந்தர் செருவேட்டுப் புகன் றெழுந்து மின்றவழும் இமய நெற்றியில் விளங்கு விற்புலி கயல் பொறித்த நாள்" என்ற இளங்கோவடிகள் வாக்கிலும், அம் மூவரும் ஒன்று கூடிய வலிவுடன் சென்று, பனி மலையில் தங்கள் சின்னங்களைப் பதித்த செய்தி குறிப்பிக்கப்படுதல் காணலாம். சேரமரபினரான அவ்வடிகள், தம் முன்னோர் செயலை மட்டுஞ் சிறப்பியாமல், மூவேந்தருமே தம் இலச்சினை களைப் பொறித்தவர் என்று கூறுவாராயின், அஃது அவர்கள் ஒருங்கு கூடிச் செய்த செயல் என்பதை உணர்த்தக்கூடிய தன்றோ? கூடிச் செய்த அருஞ் செயலை அவ்வவர் தம் குலப் பெருமையாகப் பாராட்டிக்கொள்ளுதல் இயல்பேயாம். ஆகவே, தமிழரசரில் இமயஞ் சென்று பெருமை படைத்தவர் யாவர் என்பதைப் பற்றி நாம் விவாதிக்க வேண்டியதில்லை. அரசர் பலர் ஒன்று சேர்ந்து பகைவர் மலையைக் கைப்பற்றுவாராயின், அப்பலர் இலாஞ்சனைகளையும் ஒருசேர அம்மலையிற் பொறிப்பது பண்டை வழக்கேயாகும்.

..................... "கோடுவரிக்
கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தோடுபோறி
நெடுநீர்க் கெண்டையோடு பொறித்த
குடுமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறம், 58.)

என, நட்பினராயிருந்த சோழபாண்டியரிருவர் சின்னங்களும் பகைவர் குன்றுகளில் ஒருங்கு பொறிக்கப்படவேண்டும் என வாழ்த்திப் புலவரொருவர், பாடியிருத்தலும் இங்கறியத்தக்கது.

---

# 5. வேதநாயகம் பிள்ளை

(ரா. பி. சேதுப்பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

தமிழ் நாட்டிலே தோன்றிய நல்லியற் கவிஞருள் ஒருவர் வேதநாயகர். அவர், நகைச்சுவை நிரம்பிய நூல்களால் தமிழ் மொழியை அழகு செய்தவர்; இசைத் தமிழின் பெருமையைக் கீர்த்தனங்களால் நாட்டியவர்; தமிழில் நாவல் என்னும் நவீனக் கதை இயற்றுவார்க்கு நல்வழி காட்டியவர்.

இத்தகைய வித்தகர், திருச்சிராப்பள்ளிக்கு அண்மையில் உள்ள குளத்தூரிலே பிறந்தார். அவர் பிறந்த குலமும், பெற்ற நலமும் ஒரு சிறப்புப் பாயிரத்தால் விளங்கும். "கொங்குராய கோத்திரம் அதனில், வந்தவதரித்த செந்தமிழ்க் குரிசில்" என்று அவரைப் பாராட்டினர் மகாவித்துவான், மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

இளமையிலேயே வேதநாயகரிடம் விளங்கிய ஆங்கிலப் பயிற்சியையும், ஆன்ற பண்பினையும் அறிந்த அரசியலாளர் அவரை ஜில்லாக் கோர்ட்டில் மொழி பெயர்ப்பாளராக அமைத்தனர். அப்பணியில் அவர் காட்டியதிறமை துரைத் தனத்தாரது கருத்தைக் கவர்ந்தது; அதன் பயனாகத் தரங்கம் பாடியில் முனிசிபாக நியமிக்கப்பெற்றார். அப்பணியை ஏற்று நீதி பரிபாலனம் செய்யுங்கால் உற்றார் என்றும், மற்றார் என்றும் அவர் உணர்ந்ததில்லை; கீழோர் என்றும், மேலோர் என்றும் கருதியதில்லை; இச்சகம் பேசும் கொச்சைமாக்களுக்கு இடம் கொடுத்ததில்லை; வழக்கின் தன்மையை உள்ளவாறுணர்ந்து தீர்ப்புச் செய்வதே அவர் வழக்கம். இத்தன்மை வாய்ந்த வேதநாயகரை நீதிமான் என்று எல்லோரும் புகழ்வாராயினர்.

தரங்கம்பாடியிலிருந்து வேதநாயகர் சீகாழிக்கு முனிசிபாக மாற்றப்பட்டார். அப்போது, 'நற்றாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்' மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அங்குப் போந்து சில காலம் தங்கியிருந்தார். உணர்ச்சியொத்த அறிஞர் இருவரும் சிலநாளில் சிறந்த நண்பர் ஆயினர். அவ்வூர்ப் பெரியோர் விரும்பியவண்ணம் மகா வித்துவான், சீகாழிக் கோவை என்னும் பிரபந்தம் இயற்றினார். அக் கோவை, சீகாழிச் சிவன் கோயிலில் உள்ள வலம்புரி மண்டபத்தில்

வாசித்து அரங்கேற்றப்பட்டது. வேதநாயகர், நாள்தோறும் வந்து கேட்டு இன்புற்று அக்கோவையின் நயங்களையும், பிள்ளையவர்களின் புலமைத்திறத்தையும் பாராட்டிப் பல கவிகள் பாடினார்.

நன்னெறியில் நாட்டம் உடைய வேதநாயகர், அவ்வப்போது தம் மனத்தில் அரும்பிய கருத்துக்களைப் பாட்டாகப் பாடி வைத்திருந்தார்; அப் பாடல்களை மகா வித்துவானிடம் படித்துக் காட்டி அவர் அளித்த சிறப்புப் பாயிரத்தோடு நீதி நூல் என்னும் பெயரால் வெளியிட்டார். அந்நூலில் வேதநாயகர் பரோபகாரம் முதலிய அறங்களைப் பாராட்டுகின்றார்; பஞ்சமா பாதகங்களைக் கடிந்துரைக்கின்றார்; பரிதானம் பெறுவோரையும், பற்றுள்ளம் உடையோரையும் பரிகசிக்கின்றார். நல்லரசின் தன்மையையும், வல்லரசின் தன்மையையும் அவர் நீதி நூலில் விளக்கிக் காட்டும் பான்மை நன்கு அறியத்தக்கதாகும். "நன்னெறி வழுவாத மன்னர்க்கு நாடெல்லாம் அரண்மனை; மன்னுயிர் எல்லாம் அவர் நற்படை; அன்னார் மனமெல்லாம் அவர் வீற்றிருக்கும் அரியாசனம். ஆனால், கொடுங்கோல் மன்னர்க்குக் குடிகளே பகைவர்; அவர் அடி வைக்கும் இடமெல்லாம் படுகுழி; மாளிகையே மயானம்" என்னும் பொருள்பட வேதநாயகர் பாடியுள்ளார்.

சீகாழியில் வாழ்ந்த காலத்தில் வேதநாயகர் இசைப் பாட்டிலே விருப்பம் உற்றார். தென்னாட்டு இசைத் தமிழின் வரலாற்றில் சிறந்ததோர் இடம் பெற்று விளங்குவது சீகாழிப் பதியாகும். "**நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்" பிறந்த ஊர் சீகாழியே.** கம்பர் அருளிய இராமாயணத்தை அழகிய கீர்த்தனங்களாகப் பாடி அழியாப் புகழ்பெற்ற அருணாசலக் கவிராயர் வாழ்ந்ததும் அப்பதியே. தில்லை மன்றத்தில் திருநடம் புரியும் இறைவனைத் தெள்ளிய தமிழ்ப் பாட்டால் போற்றிய முத்துத் தாண்டவரை ஈன்றதும் அவ்வூரே. இத்தகைய சீகாழியின் மருங்கே யமைந்த ஊர்களும் இசை மணங்கமழ்வாய்ந்தனவாகும். "பண்ணோடு இசைபாடும் அடியார்க்கு இம்மை யின்பமும், மறுமை இன்பமும் தரும் மணிகண்டன் மருவும் இடம்" என்று திருஞானசம்பந்தர், போற்றிப் புகழ்ந்த புள்ளிருக்கு வேளூர் சீகாழிக்கு அண்மையில் அமைந்துள்ளது.

இன்னும் நற்றமிழ்ப் பாடல்களை ஒற்றறுத்துப் பாடும் வண்ணம் திருஞான சம்பந்தருக்கு ஈசன் பொற்றாளம் ஈந்தருளிய கோலக் காவும் சீகாழியை அடுத்துள்ள சிவப்பதியாகும்.

இத்தகைய சீகாழியிலிருந்து மாயூரத்திற்கு முனிசீபாக மாற்றப் பட்டார் வேதநாயகர். பழம் நழுவிப் பாலில் விழுந் தாற்போல இசைப் பாட்டில் ஆசையுற்றிருந்த வேதநாயகர்க்கு மாயூரத்தில் சிறந்த இசைவாணர் பழக்கம் ஏற்பட்டது. 'நந்த னார் கீர்த்தனம்' பாடிப் புகழ் பெற்ற கோபால கிருஷ்ண பாரதி யார், அப்போது அவ்வூரில் இருந்தார். அவர் பாடிய கீர்த் தனம் வேதநாயகர் உள்ளத்தைக் கவர்ந்தது. இசைப்பாட் டில் ஈடுபட்ட இருவரும் நாளடைவில் நண்பராயினர்.

மாயூரத்தில் வேதநாயகர் நீதிபதியாக இருந்தபோது வல் வழக்குகள் நீதி மன்றத்திலே வரக்கண்டு மனம் வருந்தினர். அவ் வழக்குகளின் தன்மைக்கு அவரே ஒரு சான்று காட்டியுள் ளார். "கரமிலான் ஒருவன் வாதியைப் பிடித்தான்; காலிலான் அவனை உதைத்தான்; வாயிலான் அவனைக் கடித்தான்"; இப் படிப் பிடித்து, உதைத்து, கடித்தவர்கள்மீது வாதி வழக்குத் தொடுத்தான். அவனுக்காக விறு விறுப்புடன் வாதாடி வம்பு செய்தார்கள் வக்கீல்கள். இவ்வாறு,

"தொண்டை கிழித்துக் கொண்டு
சண்டை செய்யும் வக்கீல்கள்
அண்டையில் இருந்து நம்
மண்டையை உடைத்தால்—
ஆண்டவனை நினைப்ப தெப்போது நெஞ்சே
ஐயன் பதத்தை நினைப்பதெப்போது நெஞ்சே"

என்று அவர் பாடினர்.

தெய்வ சாட்சியாக நீதிபரிபாலனம் செய்து வேதநாயகர் அடைந்த பெரும் புகழைக் கண்டு பொறாமை கொண்ட சிறி யோர் சிலர், மேலதிகாரிகளிடம் கோளும், பொய்யும் சொல்லிக் குழப்பம் விளைவித்தார்கள். அன்னர் சிறுமையை ஒரு பாட் டாகப் பாடி ஆண்டவனிடம் முறையிட்டார் வேதநாயகர். "நல்ல வர்களெல்லாம் நாட்டைவிட்டு அகன்றார்; ஞான சூனியரெல்

லாம் நமக்கு அதிபதி என்றார்; ஆகாத காலம் இது; அசடர் தலையெடுத்தார்; பூவிற்ற கடையிலே புல்விற்கத் தொடங்கி விட்டார்; என்ன வந்தாலும் மனமே—ஐயன் இருக்கையில் என்ன விசனமே" என்னும் கீர்த்தனம் பாடிக் கவலையற்றிருந் தார். இறுதியில் அறம் வென்றது; அழுக்காறு வேரற்று வீழ்ந்தது.

அப்பொழுது தஞ்சை நாட்டில் கடும் பஞ்சம் வந்துற்றது. அதன் கொடுமையைக் கண்ட வேத நாயகர் நெஞ்சுருகிப் பாடினார்; "ஐயோ! மண்ணில் அநேகர் என் கண் முன்னே மாய்ந் தார்; எண்ணிறந்தவர் சருகு போல் காய்ந்தார்; கண்ணிருண்டு களைத்து உடல் ஓய்ந்தார்; ஆண்டவனே உன்னையன்றி யாரே துணையாவார்" என்று முறையிட்டார்; ஒல்லும் வகையால் பசியின் கொடுமையைத் தணிப்பதற்குத் தன் செல்வத்தையும், செல்வாக்கையும் செலவிட்டு மாயூர நகரின் பல பாகங்களில் கஞ்சிச் சாலைகள் அமைத்தார். அங்கு வார்த்த கஞ்சியைப் பருகி மனங்குளிர்ந்து அவரை வாயார வாழ்த்திய ஏழை மாந்தர் பல்லாயிரவர். அவ்வறப் பணியைக் கண் குளிரக் கண்ட கோபாலகிருஷ்ண பாரதியார், வேத நாயகரை வியந்து 'நீயே புருஷமேரு' எனத் தொடங்கும் கீர்த்தனம் பாடினார். பாரதியார் இயற்றிய கீர்த்தனங்களுள் இதுவொன்றேநரஸ்துதி என்றால் வேதநாயகர் பெருமைக்கு வேறு சான்றும் வேண்டுமோ?

அக்காலத்தில் மாயூரத்துக்கு அண்மையிலுள்ள திருவா வடுதுறை ஆதீனத்தில் சுப்பிரமணிய தேசிகர் என்னும் சீலர் தலைவராக விளங்கினார். கற்றவரும், பொருளற்றவரும் அவர் ஆதரவை நிரம்பப் பெற்றனர். கலையின் கோயிலாகவும், கருணையின் நிலயமாகவும் திகழ்ந்த தேசிக மூர்த்தியிடம் வேத நாயகர் மிகவும் ஈடு பட்டார்.

"ஏனென்று கேட்பவர் இல்லாத் தமிழை இனிதளிக்க
நானென்று கங்கணம் கட்டிக்கொண்டாய் இந்தநானிலத்தே"

என்று அப்பெரியாரைப் பாராட்டினார்.

பஞ்ச காலத்தில் அத்தேசிக மூர்த்தி பசித்தோர் முகம் பார்த்துப் பரிவுடன் உணவளித்தார். இவ்வாறு வருந்தி

வந்தவர் அரும்பசி தீர்த்து 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்னும் வாசகத்தை மெய்ப்பித்த பெரியாரை வேதநாயகர் மனமாரப் போற்றினர்.

கிறிஸ்துவ மதத்தில் வேதநாயகர், சிறந்த பற்றுடையவரா யினும் தெய்வத்தின் பெயரால் சமயவாதிகள் சண்டையிட்டுக் கொள்ளுதல் தவறு என்பது அவர் கொள்கை. பாரத நாட்டி லுள்ள பலசமயவாதிகளும் சமரச உணர்ச்சியோடுபணிசெய்தல் வேண்டும் என்பது அவர் ஆசை. இக்கருத்துக் கொண்டு அவர் பாடிய கீர்த்தனங்கள் பலவாகும்; அவற்றைத் தொகுத்துச் 'சர்வசமய சமரச கீர்த்தனம்' என்னும் பெயரால் வெளி யிட்டார்.

பிறசமயத்தாருடன் வேதநாயகர் வேற்றுமை யின்றிப் பழகினர். சைவ சமயத்தைப் போற்றி வளர்ப்பதற்காகத் தோன்றிய திருவாவடுதுறை மடத்திற்கு வேதநாயகர் அடிக் கடி சென்று வந்தார். இன்னும், சைவ சமயத்தில் சிறந்த ஆர்வ முடையவரும், திருவாவடுதுறை ஆதீன மகாவித்துவானும் ஆகிய மீனாட்சிசுந்தரம் பிள்ளை வேதநாயகரின் ஆருயிர் நண்பர். வேதநாயகரைப் பாட்டுடைத் தலைவனாக அமைத்து அம் மகா வித்துவான் ஒரு கோவை பாடினர். குளத்தூர் வேதநாயகர் மீது பாடப்பட்ட கோவையாதலால் அது 'குளத்தூர்க் கோவை' என்று வழங்குகின்றது. அக் கோவையில்' 'தன்னேரிலாத தமிழ்வேத நாயகன்' என்றும், 'நூல் ஆய நோற்ற மதிவேத நாயகன்' என்றும் அவர் பெருமையை மகா வித்துவான் பாடி யுள்ளார்.

தமிழ் நாட்டுப் பெண்களின் முன்னேற்றத்தில் மிகுந்த ஆர்வமுடையவர் வேதநாயகர். நல்ல எண்ணங்கள் இளமை யிலே நங்கையர் மனத்திற் பதிதல் வேண்டும் என்பது, அவர் கொள்கை. அக் கருத்துக்கொண்டு எழுந்தது, 'பெண்மதி மாலை' என்னும் நூல். வேதநாயகர் தம் பெண் குழந்தைகள் படிப்பதற்காக அதனை எழுதினர் என்று தெரிகின்றது. பிறந்த மனையிலும், புகுந்த மனையிலும் பெண்கள் சோம்பலின்றி வேலை செய்தல் வேண்டும் என்றும், வாழ்க்கைப்பட்ட பெண் இல்லாள் என்று சொல்லப்படுவதால் அவளே வீட்டுக்கு அதிபதி என்றும், இல்லறம் நடத்தும் பெண்கள் நாள்தோறும்

அறஞ்செய்தல் வேண்டுமென்றும், மாதா, பிதா, குரு, தெய்வம் இவர்களிடம் அன்பும், பணிவும் உடையவர்களாய் இருத்தல் வேண்டும் என்றும் பெண்மதி மாலை கூறுகின்றது.

பெண்களுக்குக் கல்வி இன்றியமையாதது என்பதைப் பல கட்டுரைகளாலும் எடுத்துரைத்தார் வேதநாயகர். பெண் கல்வி, பெண்மானம் முதலிய கட்டுரைகள் பெண்மதி மாலையிற் சேர்க்கப்பட்டுள்ளன. பெண்களை மரியாதையாக நடத்தவேண்டும் என்பதற்குள்ள நியாயங்களைப் பெண்மானம் என்னும் வியாசம் விளக்குகின்றது.

வேதநாயகர் வசன நூல்களும் சில இயற்றினர். அவற்றுள் தலை சிறந்தது, 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்னும் கற்பனைக் கதையேயாகும். அதுவே தமிழில் எழுந்த முதல் நவீனக் கதை (நாவல்) என்று சொல்லப்படுகின்றது. பிரதாபன் கதை நகைச் சுவை நிரம்பியது ; படிப்போர் மனத்தைப்பற்றி இழுத்துச் செல்லும் பண்புடையது ; மூடப் பழக்க வழக்கங்களை ஒழிப்பது ; நல்ல பழக்கங்கள் பரவ வழி காட்டுவது ; கதாநாயகனாகிய பிரதாபனது கள்ளங்கபடமற்ற உள்ளம், நம் கருத்தை அள்ளுகின்றது. அவன் தாயாகிய சுந்தரமும், மனையாளாகிய ஞானம்பாளும் மதிநலம் வாய்ந்த மங்கையர் குலத்திற்கு அணிகலன்களாக விளங்குகின்றார்கள். சுருங்கச் சொல்லின் அந் நவீனம் கல்லார்க்கும், கற்றவர்க்கும் களிப்பருளும் கதையாகும். அக் கதை ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப் பட்டிருப்பதாகத் தெரிகின்றது.

பதினைந்து ஆண்டுகள் வேதநாயகர் முனிசீபாக வேலை பார்த்தார் ; அவ்வேலையின் கடுமையால் உடல் தளர்ந்தார் ; அரசியலார் அனுமதி பெற்று வேலையினின்று விலகினார் ; பின்பு, தமிழ்க் கலைகளிலே பொழுது போக்கினார் ; மாயூரம் நகரசபைத் தலைவராக அமர்ந்து நற்பணிகள் பல செய்தார்; 'ஞானசுந்தரி' என்னும் நாவலும் இயற்றி வெளியிட்டார்; கடைசியாக " சத்திய வேத கீர்த்தனை " என்னும் இசைப் பாட்டியற்றி அறுபத்தைந்தாம் வயதில் ஆண்டவன் அருளிலே கலந்தார்.

---

# 6. சென்னைக் கடற்கரை

டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ.

உலகு மீக்கூறும் கடற்கரைகளுள் சென்னைக்கடற்கரை இரண்டாவதாகும். முதலாவதியாதெனின் அமெரிக்கா தேசத்தில் பிரேசில் என்னும் நாட்டின்கண் உள்ள இரையோடி ஜனீரோ எனக்கூறுப. அஃதொன்றன்றி, நமது சென்னைக் கடற்கரையை அழகிலும் நீளத்திலும் ஒப்பதும் மிக்கது மில்லையென்று சொல்லலாம். இக் கடற்கரையோரமாக வாழக் கொடுத்துவைத்தவர் பலருண்டு. அல்லும் பகலும் அறுபது நாழிகையும் அங்ஙனே வாழ்ந்து வருவோர் பரதவர் ஆவர். இவரேயன்றிப் பகலில்மட்டும் அதனினும் பத்துநாழிகைமுதல் இருபத்தைந்து நாழிகைவரையே, கடற்கரையோரமாகக் கட்டப்பட்டுள்ள கண்ணைக் கவரும் மாளிகைகளில் தங்கியிருப்போர் சிலருண்டு. அவர்தாம், வடபால் கப்பற் பகுதி அலுவலாளர் முதலாகவும், அரசாங்கக் காரியாலய அதிகாரிகள் இடையாகவும், தென்பால் மாகாண ஊர்க்காவலரின் அதிகாரிகள் கடையாகவும் உள்ளோராவர். அவரைப்பற்றிக் கூறுவது இக் கட்டுரையின் நோக்கம் அன்று. இளமைப் பருவத்தில் உடற்பயிற்சி இன்னதென் றறியாதிருந்து மனப்பயிற்சி யொன்றையே கைக்கொண்டு துன்பத்துக்காளாகி இஞ்ஞான்று அத் துன்பந் துடைப்பான் வேண்டிப் பேரார்வத்துடன் கடற்கரையோரமாக வைகறைப் பொழுதில் ஓடுபவரைக்குறித்து எழுத இஃது எழுந்ததுமன்று. சில மனிதர் தள்ள, சில மனிதர் மூட்ட, சில மனிதர் இழுக்க, பார்ப்போரை,

> " அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
> பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என்ற பொய்யாமொழியை நினைக்கச்செய்து போகுங் கட்டை வண்டிகளையும், அவற்றை ஈர்த்துச் செல்லும் ஆட்களையும் பற்றிக் கூற எழுந்ததோ இஃதெனின், அஃது மன்று.

மற்று, மாலைப்பொழுதில் அங்குக் காணப்படும் அவற்றுட் சிலவே இங்குக் கூறப்படுகின்றன. கடற்கரைப்பக்கம் மாலை நேரத்திற் போவோர் எவரும் முதலிற் காண்பன—சீறிக்கொண்

டும், உறுமிக்கொண்டும், புகைந்துகொண்டுஞ் செல்லும் மோட்டார் வண்டிகளே. அவ் வண்டிகள் பற்பல வகையானவை, பற்பல பெயருடன் கடற்கரையோரமாகக் கீழ்பால் ஒரு பெருந் தொடர் போல நிறுத்தப்பட்டிருக்கும். தொலையிலிருந்து பார்ப்போர் சில விடங்களில், ' இவையென்ன ; பிணைக்கப்பட்ட மோட்டார்ச் சங்கிலியோ !' என நினைக்கக்கூடும். அவ்வண்டியி னுள்ளே உட்கார்ந்திருப்பவருட் சிலரைக் காணின், ' இவர் காலென்ன, நிலத்தில் தோயாதோ! இவர் முகமென்ன, ஞாயிறு ஒளி படின், கூம்பிவிடுமோ !' என்பன போன்ற ஐயங்கள் நிகழும்.

அவ் வண்டிகளுட் சில பெண்டிராற் செலுத்தப்பட்டுச் செல்வதைக் காணும் உள்நாட்டுவாசிகளுட் சிலர் மூக்கின் மேற் கைவைத்து, " இவரென்ன ! ஆடவரினுங் கடிது செலுத்திப் போகின்றனரே ! நன்று நன்று !! ஆடவரை வெல்லப் பார்க்கின்றனர் இவர். உலகக்கேட்டின் அறிகுறியோ இது!" எனக் கூறிச்செல்வர். " சம்பராசுரப் போரில் கைகேசி தேரைச் செலுத்தித் தயரதனைக் காத்ததுபோல, துன்பம் நேர்ந்துழி இவரும் காரைச் செலுத்திப்போய்த் தம் கணவர்கிளைஞரையுங் காக்கக்கூடும். ஆனல், கைகேசி இரண்டு வரம்பெற்று மண்ணைத் தன் மகனுக்குக் கொண்டு, தன் கணவன் உண்ணோராவியைப் போக்க ஏதுவாகி, வள்ளலை வனம்புகச் செய்து, சீதையைச் சிறைப்படச் செய்ததுபோல, காரூர்ந்து செல்லும் இக் கேகயங்கள் செய்வதாயின் கேடே, கேடே !" என்று நினைத்துப் போவாரும் உண்டு. இவ் வண்டிகளுட் போவோரை அறியாத சிலரும், அவரால் அறிந்துகொள்ளப்படாத சிலரும், அறிமுகஞ்செய்துவைக்கப்படாத சிலரும், ' கும்பிடு போட்டுக் கும்பிடு வாங்கலாம்,' என நினைத்தும், ' காரிற் போகுமவரும் கும்பிடு போட்டாரல்லவா !' என்ற விண்பீதற்றலால் மகிழக் கருதியும், கும்பிடு போட்டுக் கும்பிடு வாங்குவதையும், சிற்சில வேளைகளில் மறு கும்பிடின்றித் தலைகுனிந்து செல்வதையும் காணலாம்.

மோட்டாரிற் போவோர்க்கே யன்றிக் கடற்கரையோரமாக அமைக்கப்பட்டுள்ள கற்றரையின்மீது கடவுள் கொடுத்துள்ள இருகால்மோட்டாராற் செல்லுஞ் சிலருக்கு வேறுசிலர்

கைம்மாறு கருதாது கும்பிடுபோடுவதையும், கரக்கம்பஞ் செய்து சிரக்கம்பம் பெறுவதையும், அஞ்சலிசெய்து அரைக் கும்பிடு வாங்குவதையும், கைக்கும்பிடு கொடுத்துக் கண் கும்பிடு வாங்குவதையும், கரக்கும்பிடு கொண்டு மூரற்கும்பிடு வாங்கு வதையுங் கண்டு, 'எத்தனை விதமான கும்பிடு ஐயா !' என்று சொல்லாவிட்டாலும், நினைப்பார் பலர். இவரேயன்றிக் கும்பிடு போட்டுக் கும்பிடு பெருவழி, 'என்ன செருக்கு இவனுக்கு !' என்று குறைகூறுவோர் சிலர். 'செய்த அஞ்சலி யைத் திருப்பிக் கொடுக்க மதியா அறியா முடியா இவன், வேறெதனைக் கொடுப்பினும் திருப்பிக் கொடுப்பனோ? கொடான், கொடான் !' எனக் கூறிப்போவார் சிலர். முன்னொரு நாள் கும்பிடு மறந்து சென்ற ஒருவன் பின் னொருநாள் தன்னண்பனைக் கண்டு அஞ்சலி செய்யுங்கால், அந் நண்பன் 'இப்பொழுதென்ன? ஏதேனும் என்னிடம் ஆகவேண்டுவதுண்டோ ? அன்று நான் செய்த அஞ்சலிக்கு மாற்றஞ்சலியின்றி வெட்கிப்போகும்படிச் செய்தாயே ! அஃதென்ன ?' எனக் கேட்டு நிற்பதையும், அதற்குச் சமாதா னம் பெறுவதையுங் காணலாம். அவ்வாறு கூறப்படுஞ் சமா தானங்களுள், 'நீ கும்பிடு போட்டதை நான் பார்க்கவேயில்லை; உன்னை யான் பார்க்கவேயில்லை;' என்பவை பெரும்பாலும் கேட்கப்படும். பின்னும் விடாது, 'ஆனால் மெய்ம்மறந்து சென்றனையோ? கண்ணொரு பக்கம் மனமொரு பக்கமோ?' என்று சிலர் கேட்கும் வினாக்களுங் காதில் விழும்.

கடற்கரையோரமாக அமைக்கப்பட்டுள்ள கற்றரைமீது நடந்து செல்லுவோருட் சிலர் உயர்ந்த ஆட்சியாளர். எதிரிற் கண்டு அஞ்சலி செய்வோர்க்குத் தங்கையிற் பிடித்த கோலி னால் அவர்கள் குட்டியிட்டுச் செல்வதைக் காணின், 'வந்தனந் தந்ததற்குத் தண்டனைபோ இது !' எனத் தோன்றும். அவ ருக்குக் கும்பிடு மறுநாளும் போட்டு, அவர் கோலசைவு காண விழைகின்றவர், 'குட்டுபட்டாலும் மோதிரக்கையினாற் குட்டுப் படவேண்டும்' என்று நினைப்பார்க்கு ஒப்பாவர். பெரிய உத்தி யோகஸ்தர் பலர்க்குக் கடற்கரையில் வந்துலாவ ஓய்விராது : இருந்தாலும், அவருட் பலர் தமக்குத் தெரிந்தோரும் தமக்குக் கீழே வேலையிலமர்ந்திருப்போரும் உலாவ வராத ஓரிடத்தைக்

கண்டறிந்து, அவ்விடமே செல்வர்; அன்றேல், தமது தோற்றத்தை மறைக்க உதவிபுரியும் இருள் வந்து மூடிய பின்னர்ச் சென்று உலாவுவர்.

பருத்த வயிறு விரியப் பட்டாடை தரித்துப் பலங்கொள்ள நடப்பார் சிலர்; பாதகோசம் பதிந்த அடிகளிலே அடிபுதையரணம் பூட்டிப் படிமிசை உள்ள தூளி தம் மடிமீது கொள்வார்போல், நீண்ட கால்சட்டை, சிறு கைச்சட்டை, அதன் மீதொரு சட்டை, கையிலே ஒரு குட்டை, கழுத்திலே காலருடன் டை இவற்றோடு நடப்பார் சிலர்; 'மேனாடு வேறு; கீழ்நாடு வேறு; ஆனால், இரண்டுஞ் சேரின் பேறு,' என்பதை விளக்குவார்போன்று, மேனாட்டாடையும் நம் நாட்டாடையும் கலந்துடுத்துப் போவார் சிலர்; கடற்கரை யுலாவுக்கென்றே வைத்திருக்குஞ் சீனப்பட்டினாலாய கோட்டையும், பாப்ளின் பட்டினாலாய ஷர்ட்டையும், பாலாடையன்ன மேலாடையாக விளங்கும் மல்லையும், கல்கத்தா சிலிப்பரையுந் தரித்துப் போவார் சிலர்; அன்றன்று தோய்த்த அழகான மூவாடை தரித்துப் போவார் சிலர்; 'உடுப்பவையிரண்டே' என்ற நக்கீரனார் மொழியைப் பொய்க்கச்செய்ய மனமில்லாதவர்போன்று ஈராடையே உடுத்துப் போவார் மிகமிகச் சிலர்; 'ஆடையில்லா மனிதர் அரை மனிதர்' ஆதலால், ஆடையின்றிப் போவார் ஆங்கு அருமையே.

கற்றரைமீது நடந்து போகுங்கால் காணப்படுவோருள் பிச்சைக்காரர் இருவரைக் குறிப்பிடாமல் இருத்தலாகாது. 'அங்கமெலாங் குறைந்தழுகு தொழு' நோயினனாய், பார்ப்போர் மனத்தில் இரக்கத்தையும் அச்சத்தையும் உண்டாக்குவோனாயுள்ளான் ஒருவன். எலும்பெல்லாம் மெய்ந் நிறைந்து, நரம்பெழுந்துலறிய நிரம்பா மென்றோலுடன் நரைத்த ஓதியளாய்க் குழறும் வாயினளாய், 'உங்கள் வாய்க்குத் தாம்பூலம்; என் வயிற்றுக்குச் சோறு: ஒரு பைசா போட்டுவிட்டுப் போங்கள்': என்று நா வற்றக் கதறுபவளாயுள்ளாள் ஒருத்தி. இருவரையும் மேரி மகாராணி கல்லூரியின் எதிரேயுள்ள கற்றரைக்கண் காணக்கூடும். அவர் படுந் துயரையும், அவருடைய நிலையையும் உரைத்தல் ஆகுமோ! அந்தோ! கிழிந்த கந்தையைக் கட்டிக்கொண்டு இழிந்த வாழ்க்கையை நடத்திக் கொண்டு

ஒருபிடி சோற்றுக்குப் படாத பாடு பட்டுக்கொண்டு, ஒரு குடம் தண்ணீருக்குக் கண்டோரிடத்துக் கெஞ்சிக்கொண்டு வாழ்ந்து வரும் அவர்க்கு நாழிகையென்ப தொருநாள்; நாளென்பது ஒரு திங்கள்; திங்கள் என்பது ஓராண்டு என்று சொல்லுதல் மிகையாகாது. அவர்தம் நிலைமையை நோக்கி உன்னுந் தோறும் உன்னுந் தோறும் நெஞ்சு உருகுகின்றது

இனி, கடலோரமாக மணல்மீது எவர்எவர் என்னென்ன செய்கின்றனர் என்பதைக் கவனிப்போம்: ஒவ்வொரு நாளுந் தோன்றுங் கதிரவனை அளவு காட்டுங் கருவியாகக் கொண்டு கூற்றம் தம் வாழ்நாளை உண்டு வருவதை அறியாராய், தாளாற்றி வினைசெய்யாராய், சீட்டைக் கையிலே பிடித்துக் கொண்டு, பாட்டை வாயிலே பாடிக்கொண்டு விளையாடுகின்ற இளைஞர் முதியோர் ஆகியோரைக் காணுங்கால், 'இவர் மதி என்னே! காலத்தைக் கொல்லுகின்றனரே! இவரைக் காலங் கொல்லுமே!' என வருந்திப் போவார் சிலர் சான்றோர் மண்ணைத் தோண்டிக் காலை முழந்தாள்வரையிற் பதித்து, நன்றாகக் கெடித்துக் காலிலுள்ள நோயைப் போக்கிக்கொள்வார் சிலர். பரதவர் கரையிற் கொண்டுவந்து சேர்த்துள்ள மீன்களின் புன்புலாலுடம்பிலிருந்து வெளிவரும் நாற்றத்தைப் பொறுக்க மாட்டாராய்க் கையிற் குட்டையைக்கொண்டு மூக்கை அடைத்துக்கொண்டு புறம்போகாமல் அங்கேயே இருப்போர் சிலர். நண்பர்களுடனும், மனைவி மக்களுடனும் பேசிக் களித்திருப்போர் சிலர். குழந்தைகளோடு விளையாடுமுகத்தான், தாமும் இளைஞராவோர் சிலர்.

ஐம்பது, அறுபது ஆண்டினரும் சிறு குழவிகளோடு சேர்ந்து அவர்களுக்கேற்றாற்போன்று விளையாடுவதையும், அவர்கள் கொடுக்கும் அடிகளை இன்பத்தோடு வாங்கிக் கொள்ளுவதையும், அவர்கள் மண்ணை அள்ளி மேலே போடும்பொழுது மகிழ்வதையும் அவர்களுடைய சொற்கள் குழல், யாழ் ஆகிய இசைக்கருவிகளைவிட நல்லிசை பயப்பனவாக நினைத்து அகமகிழ்வதையுங் காணலாம். இரேடியோ என்று சொல்லப்படும் வானொலி வழியாகக் கடற்கரைக்கு அளிக்கப்படும் இசையமுதை அருந்தி இருப்போர் சிலர். அவ்விசையான் மயங்கி உறங்குவோர் சிலர். இசையைக் கேட்டுத்

தலையை ஆட்டிக் கையைத் தட்டிக் கொண்டிருப்போர் சிலர். வறுத்த பட்டாணி, முந்திரி, வேர்க்கடலைகளை வாங்கித் தின்போர் சிலர். சூடான தேநீர் வாங்கி அருந்துவோர் சிலர். 'அருளாளா, அன்பாளா' எனக்கூறி அந்திக்கால வழிபாட்டைச் செய்வோர் சிலர்.

கடலோரக் காட்சி கண்ணைக் கவரவல்லதென்பதில் ஐயமுண்டோ? கதிரவனொளியால் கடலிற் றோன்றும் வெள்ளியன்ன வெண்ணிறத்தைப் பார்த்து மகிழாதார் யாவர்? களித்துக் கூத்தாடும் அலைகள் ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொண்டு கரையை நோக்கி வருவதைக் கண்டு மகிழாதார் யாவர்?

---

## 7. அன்னைக்கு (கடிதம்)

டாக்டர். மு. வரதராசனார், எம். ஏ. எம். ஓ. எல்.

[கடிதங்கள் பண்டைக் காலத்திலிருந்து பல்வேறு வகையிலே வடிவு பெற்றன. அவற்றுட் சிலவே இலக்கியமாக இருக்கத் தக்கவை. பண்டித நேருவும், கவிஞர் இரவீந்திரரும் போன்றவர்களின் கடிதங்கள் இதற்குச் சான்றாக உள்ளன. நம் நாட்டிலே தமிழ்ப் புலவர்களின் முன்னணியில் நிற்கும் தமிழ் அறிஞரான டாக்டர். மு. வரதராசனார், எழுதிய 'அன்னைக்கு' என்னும் நூலும் அத்துறையில் அமைந்ததாகும்.

அந்த நூலிலிருந்து எடுக்கப்பெற்ற இக்கடிதம் தமிழ்நாட்டு நிலையை நன்கு விளக்குகிறது.

ஆசிரியருடைய எளிய, இனிய, பொருள்பொதிந்த தமிழ் நடையை இக் கடிதத்திற் காணலாம்.]

அன்புள்ள அம்மா,

உன் கடிதம் வந்ததும் எனக்கு ஒருவகை ஆறுதல் ஏற்பட்டது. அத்தையைப் பற்றியும், தமக்கையைப் பற்றியும் எழுதியிருந்த செய்திகளால் ஆறுதல் ஏற்படவில்லை. தந்தையைப் பற்றியும், நண்பரைப் பற்றியும் எழுதியிருந்தஎழுத்துக்களாலும் ஆறுதல் ஏற்படவில்லை. ஆனால், நீயும் உன் பொன்னான

கையால் 'தமிழர்களுக்கும் எதிர்காலம் உண்டு' என்று எழுதிய மணிமொழிகளே எனக்கு ஆறுதல் அளித்தன.

'தமிழர்களுக்கும் எதிர்காலம் உண்டு' என்று எழுதி ஆறுதல் அளித்த நீ, அதற்குக் காட்டிய காரணந்தான் எதிர்பாராததாக உள்ளது. 'எல்லாரும் பங்கு கேட்கின்றார்கள். ஆந்திரர்களுக்கு ஆந்திரமாகாணம் கேட்பது ஒரு சமயக் கொள்கை போல் ஆகிவிட்டது. வடநாட்டில் மற்றவர்களும் மாகாணப் பற்றும், மாகாணக் கடமையும் மேற்கொண்டு பங்கு உரிமை கொண்டாடுகின்றார்கள். ஆகையால், மொழிவகையால் பிரித்துத் தமிழனையும் வாழ வைக்கும் நாள் வரப்போகின்றது. அப்போது, தமிழன் புதுப்பாடம் கற்றுக்கொள்ளப் போகிறான்' என்று எழுதியிருக்கின்றாய். எனக்கு ஒன்றே புதுமையாய்த் தோன்றிற்று. அப்படியானால், தமிழன் தானே விரும்பி ஏற்றுத் தன் குடும்பக் கடமையைச் செய்யப்போவதில்லையா? பிறர் கட்டாயத்தால் ஏற்பட்டபோதுதான், வேறு வழியில்லையே என்று தன்னைத்தான் காத்துக்கொள்ளத் துணிவானோ? நன்றாயிருக்கின்றதே தமிழன் போக்கு!

எப்படியாவது போகட்டும். காலவெள்ளத்தில் நீந்திச் சென்றால் போதும். தமிழன் எப்படியாவது காலத்தை உணர்ந்து மாறுதல்களை உணர்ந்து வாழ்ந்தால் போதும். காலம் அறிந்து இடம் அறிந்து சூழல் அறிந்து வாழத் தெரியாத காரணத்தால், அன்னப் பறவையின் இனம் ஏறக்குறைய அழிந்து விட்டதாம்; யானையின் இனமும் அழிந்துகொண்டிருக்கின்றதாம்! தமிழனும் அப்படிப்பட்ட கண்மூடி வாழ்வு வாழாமல் தன் வாழ்வை மாற்றி அமைத்துக்கொண்டால் போதும். அன்னம் போலவும், யானை போலவும் உயர்ந்த வாழ்வு வாழ்ந்து புலவரால் பாடப்பட்டால் போதுமா? அப்படி வாழ்ந்து அழிந்து போவதை விட, எறும்பு போலவும், காக்கை போலவும் அழியா வாழ்வு பெறுவதே நல்லது. எறும்பும் காக்கையும் எந்த இடத்திற்கும் காலத்திற்கும் சூழலுக்கும் ஏற்றபடி உண்டு வளர்ந்து வாழவில்லையா? வாழ்க்கைப் போராட்டத்தில் யானையும் அன்னமும் தோற்றுப் போக எறும்பும் காக்கையும் வெற்றி பெறவில்லையா?

நான் நாட்டை நினைந்து வருந்தினேன். நீ வீட்டை உதாரணமாக எடுத்துக்காட்டியிருக்கின்றாய். என் பாட்டனார் குடும்பத்தைப் பங்கிட்டுப் பிரிக்கக்கூடாது என்று நெடுங்காலம் தள்ளிவந்த கதையை நினைவு படுத்தினாய். உண்மைதான் அம்மா! பாட்டனார் காலத்தில் எந்தப் பெரியவர்களுக்கும், அண்ணன் தம்பி என்றால் பங்கு கேட்கக்கூடாது, பிரியக்கூடாது என்றெல்லாம் எண்ணம் தோன்றும். பாட்டன்மேல் குறை சொல்லிப் பயன் என்ன? அது அந்தக் காலத்துப் போக்கு. ஆனால், அவ்வாறு பாட்டனார் காலந்தள்ளியபோது, தந்தையும் சிற்றப்பன்மாரும் ஏன் வாய்மூடி அடங்கிக்கிடந்தார்கள்? இப்போது வீரம் பேசும் பங்காளிகள் அப்போது பங்கு வேண்டாம் என்று அமைதியாக இருந்தார்களா? இறுதியில் பாட்டனாரின் எண்ணம் பலிக்கவில்லையல்லவா? அவர் வயிற்றில் பிறந்தவர்கள் அடிபட்டு, உதைபட்டு, அல்லல்பட்டுத் தெருவில் நின்றபோது, அதே பாட்டனார் கண்ணீர் விட்டுக்கொண்டே, பங்கு போட்டுத் தரவில்லையா?

ஆனால், பாட்டனார் செயலால் நம் குடும்பத்திற்கும் பங்காளிக் குடும்பங்களுக்கும் மனக்கசப்பு மாறவில்லை. அதுபோல் அரசியலில் செய்வதால் இந்தியாவின் உட்பிரிவான நாடுகளுக்குள் கசப்பு நீடிக்குமே என்பதை நினைக்கும்போது வருத்தமாகவே இருக்கின்றது.

அம்மா! உன் கடிதத்தில் "பாட்டனாரின் உயர்ந்த நோக்கத்தைக் காப்பாற்ற முயன்றதால், குடும்பம் கலகலக்க நேர்ந்தது". என்று எழுதியிருக்கிறாய். அதில் உயர்ந்த நோக்கம் என்று நீ குறித்தது உண்மையான கருத்தா? அல்லது எள்ளும் குறிப்பா? தெரியவில்லை. என்னைக் கேட்டால் என்னால் சொல்ல முடியாது. ஆனால், உண்மையாகவே அது உயர்ந்த நோக்கம் என்று கொண்டாலும், பாகம் பங்கிடாமல் அண்ணன் தம்பிகள் நரைத்து மூத்துக் கிழவர்கள் ஆவது உயர்ந்த நோக்கம் என்றே கொண்டாலும், மனிதர்கள் அப்படி வாழக்கூடாது என்றே எண்ணுகின்றேன்.

உயர்ந்த நோக்கம் உயர்ந்த நோக்கம் என்று சொல்லி வாழ்க்கையைக் கெடுத்துக் கொள்வோர் பலர் இருக்கின்றார்கள்.

அவர்களில் பாட்டனாரும் ஒருவர். இன்றுள்ள அரசியலில் அவரைப்போல் இருப்பது நன்மையா?

நோக்கமும் கொள்கையும் மக்கள் வாழ்க்கைக்காக—மக்களுக்காக ஏற்பட்டவைகளே. மதமும் மொழியும் அப்படியே மக்களின் நன்மைக்காக ஏற்பட்டவைகளே. ஆனால், இன்று இந்தியா முழுவதும் நான் காணும் காட்சி மதத்துக்காக, மொழிக்காக, நோக்கத்துக்காக, கொள்கைக்காக என்று இப்படிப்பட்ட காரணங்களுக்காக, மக்கள் சாகின்றார்கள்; வதைகின்றார்கள்; அஞ்சுகின்றார்கள்; அலைகின்றார்கள்; ஒருவரை ஒருவர் பகைக்கின்றார்கள்.

பட்டுப் பூச்சி தானே நூல் உண்டாக்கித் தன்னையே சுற்றிக்கொண்டு தானே ஏற்படுத்திய அந்த வலைக்குள் தானே கிடந்து வருந்துகின்றது அல்லவா? மனிதனும் அப்படியே தன் மூளையைக்கொண்டு தானே ஏற்படுத்திக் கொள்கின்ற கொள்கை வலைக்குள் தானே அகப்பட்டு அழிகின்றான். இன்று உலகத்தில் மக்கள் படும் தொல்லைக்குக் காரணமென்ன? பூனைகளோ அல்லது புலிகளோ மகாநாடு கூடி மக்களைக் கெடுக்கச் செய்த சூழ்ச்சியா இது? அல்லது கழுகுகளும் புழுக்களும் பிணங்கள் போதாத குறையை உணர்ந்து பிணங்களைப் பெருக்குவதற்காக ஏற்படுத்திய போர்களா இக்காலத்து போர்கள்? எந்த விலங்கும் எந்தப்பறவையும எத்தகைய சூழ்ச்சியும் செய்து மனிதனைக் கெடுக்க முயலவில்லை. மனிதன் மூளையில் தோன்றிய சில தவறான எண்ணங்களுக்கு மனிதன் அடிமையாகி அழிந்துபோகிறான்; வாழ்வுக்காகக் கண்டான் கொள்கைகளை; நாளடைவில் கொள்கைகளுக்காக வாழ்வைப் பலிக் கொடுக்கிறான். அரசியல் கொள்கை வலுக்கின்றது; மதம் ஆகின்றது; எதிர்க்கட்சிகளை வளர்க்கின்றது; எதிர்பாராத போர்களை உண்டாக்குகின்றது. ஒன்றும் அறியாத பாமர மக்கள் படமுடியாத துன்பங்களைப்பட்டு வருந்துகிறார்கள். உயர்ந்த நோக்கந்தான்; ஆனால் ஓயாத் தொல்லையாக மூள்கின்றது. காரணம் இல்லாமல் ஏழை மக்கள் துன்பங்களுக்கு ஆளாகின்றார்கள்; இதைக்கண்ட உலகத் தலைவர்கள் நெஞ்சம் கலங்குகின்றார்கள். மெல்ல மெல்ல உண்மையை உணர்த்தி உதவ முயல்கின்றார்கள். கொள்கையைவிட, உயர்ந்த நோக்

கத்தைவிடப் பொதுமக்களின் உயிர்வாழ்க்கை விலையுயர்ந்தது என்பதைத் தெளியச் செய்கின்றார்கள்.

மனிதன் குறை உடையவன் மட்டுமல்லன்; குறை காண்பவனும் அவனே. பிறர் குறையைக் காண்பவன் அரை மனிதன். தன் குறையை உணர்பவன் முழு மனிதன். அரசியலிலும் முழு மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சிக்குண்ட வலையை அறுத்து வெளிவருகின்றார்கள்.

இப்படியே மனிதன், பல துறையிலும் தான் ஏற்படுத்திச் சிக்குண்ட வலையைத் தானே தகர்த்து, அழித்து முன்னேறி வந்திருக்கின்றான். இன்று அரசியல் துறையில் பல வலைகளைப் பின்னி அமைத்துக்கொண்டு அல்லல் படுகின்றான். கட்சிகளை அமைத்துவிட்டு அந்தக் கட்சிகளுக்காகத் தாங்கள் வாழவேண்டும் என்று மக்கள் தவறாக எண்ணுகின்றார்கள். பலவகைக் கட்சிகளால் நாட்டில் தொல்லை பெருகக் கண்டு, "கட்சிகள் நம் ஒற்றுமையான நல் வாழ்வைக் கெடுக்குமானால், நம்மைப் பாழ்படுத்துமானால், அந்தக் கட்சிகள் வேண்டுமா ? கட்சிகளுக்காக மக்கள் பலியாகக் கூடாது. மக்களுக்காகக் கட்சிகள் பலியாகட்டும்," என்று உணரும் நாள் வராதா ?

அம்மா ! நல்ல உதாரணம் எடுத்து எழுதினாய். பாட்டனார் கதை எனக்கு மட்டுமன்று; உலகத்துக்கே நல்ல பாடம் என்று உணர்கின்றேன். உன் எளிய எழுத்து அன்பை மட்டும் அல்லாமல், அறிவையும் வளர்க்கும் என்பதைக் கண்டுகொண்டேன்.

---

## 8. வரைமொழியும் வாய்மொழியும்

டாக்டர், மா. இராசமாணிக்கனார், M.A.L.T., M.O.L.

### தமிழ் மொழி மாற்றம்

ஒரு காலத்தில் எல்லோராலும் பேசப்பட்ட மொழி, எழுதப் பட்டவுடன் இலக்கிய மொழியாக மாறிவிடும். பிறகு அது, பேச்சு மொழி மாறுதலால் நாளடைவில் தனித்து நிற்றலும் உண்டு. இம் மாறுபாடுகள் இயல்பாக உண்டாகிவருதல்

கண்கூடு. எழுதப்பட்ட காலத்திற்குரிய சொற்பொருள் பிற் காலத்தில் வேறுபடுதலும் உண்டு. சொற்களும் உருமாறும்; வழக்கு ஒழிந்துவிடும். இவ்வுண்மைகளைத் தொல்காப்பிய உரையாசிரியர்களும், சங்கநூல் உரையாளர்களும் ஆங்காங்குக் குறித்துச் செல்லலைக்காணலாம். 'அழன், புழன்' என்ற தொல் காப்பியச் சொற்கள் வழக்கொழிந்தன. 'புரத்தல்' என்னும் சங்ககாலச்சொல் 'காத்தல்' என்னும் பொருளில் இடம் பெற்று விட்டது. 'புரத்தல் - உண்டி கொடுத்துக் காத்தல், என்பதே பழைய பொருள். இப்பொருளைக் கன்னட மொழியிற் காண லாம். இங்ஙனம் பிற் காலத்தில் பொருள்திரிந்த சங்ககாலச் சொற்கள் பலவாகும். தமிழின் இனமான தெலுங்கு, கன்ன டம், மலையாளம் முதலிய மொழிகளில் பழந்தமிழ்ச்சொற் களுக்கு நேரான பொருளைக்கண்டு மகிழலாம். பல சொற்கள் 'ஒரீஇ, நிறீஇ' என உருக்குலைந்து விட்டன. அவைமுறையே 'ஒருவி, நிறவி' என்று இருத்தற்கு உரியன. இங்ஙனம் அவ்வப் போது உண்டாகும் மாறுதல்களை இலக்கண ஆசிரியர்கள் குறித்து இலக்கிய மொழிக்கும், பேச்சுமொழிக்கும் தொடர்பு உண்டாக்க முயன்றுள்ளனர்.

## ஆங்கில மொழி மாற்றம்

இவ்வேறுபாடு தமிழ் ஒன்றுக்கே என்று எண்ண வேண்டா. 16-ம் நூற்றுண்டினராகிய ஷேக்ஸ்பியர் நூலில் உள்ள சொற்கள் பல இன்றுள்ள ஆங்கிலத்தில் வழக் கொழிந்து விட்டன என்பதைத் தெள்ளத்தெளிய அறிஞர் ஒருவர் விளக்கியுள்ளார்; விளக்கி, "இவற்றுல், ஷேக்ஸ்பியர், இறந்தகால மொழியில் தம் நாடகங்களை இயற்றினர் எனல் பொருந்தும்" என்று குறித்துள்ளமை கவனித்தற்குரியது. "லாட்டின் எப்படி இறந்த மொழியாகி விட்டதோ அது போலவே ஷேக்ஸ்பியர் காலத்து ஆங்கிலமும் இறந்து பட்டது. என்னை? அம்முறையில் அச்சொற்களைப் பயன்படுத்தி இன்று பேசுவார் இல்லாமையால் என்க" என்று டாக்டர் ஸ்விட் என்னும் மொழி ஆராய்ச்சி நிபுணர் 'மொழிகளின் நேரிய தன்மை' என்ற தமது நூலிற் கூறியுள்ளார்.

## வரைமொழி, வாய்மொழி — வேறுபாடுகள் :

1. இலக்கிய மொழி என்றும் மாறுதல் அடையாதது; பேச்சு மொழி மாறிக் கொண்டே வரும்.

2. இலக்கிய மொழியில் பாடிய அல்லது எழுதிய புலவரே தமது நடைக்குப் பொறுப்பாளி ஆகின்றார். அவர் இலக்கண — இலக்கியங்களைத் துணைக் கொண்டு எழுதி யிருப்பின், அவரது காலம் பிற்பட்டதாயினும், பண்டை இலக்கியப்புலவர் வரிசையில் வைத்து எண்ணப்படுவர். இந்நிலைமை பேச்சு மொழிக்குப் பொருந்தாது.

3. பேச்சுமொழி (வாய்மொழி) இயல்பாகக் குழந்தைப் பருவத்திலிருந்தே வருவது; இயல்பாகப் பேசப்படுவது; ஆனால், இலக்கிய மொழி ஆசிரியர் ஒருவரைக் கொண்டு அறிய வேண்டுவது.

இம்மூன்று காரணங்களால் இலக்கிய மொழிக்கும், பேச்சு மொழிக்கும் உள்ள வேறுபாடுகள் நன்கு விளங்கும்; பேச்சுத் தமிழ், மாறுதல் அடைதற்குக் காரணமும், இலக்கிய மொழி மாறாமைக்குக் காரணமும் நன்குவிளங்கும். இலக்கியத் தமிழ், பேச்சு வழக்கு அற்றமையின் அஃது அழியாது; பேச்சுத் தமிழ் வழக்கில் இருப்பதால் மாறிக் கொண்டே இருக்கும். பண்டை இலக்கண இலக்கியங்களைப் படித்துச் சொல்பவர் சொல்லும் வரையிற்றான் அவை பொது மக்கள் கண்ணெதிரே தோன்றும்; இன்றேல், இறந்தவை ஆகும். பேச்சுத் தமிழில் கருத்தைச் செவ்வையாக விளக்க முடியாத போதும், பண்டைத் தமிழில் இஃது எங்ஙனம் கூறப்பட்டுள்ளது? என்று பார்க்க உணர்ச்சி உண்டாகும் போதும் பழைய மொழிச் சுவையை நுகர அவாவுண்டாகும் போதுமே இலக்கிய இலக்கண நினைவு எழும்!

## பண்டைவாய்மொழியே வரைமொழி

வரைமொழி (இலக்கிய மொழி) கள் யாவும் செப்பம் செய்யப் பட்டவையே ஆகும். அவை, பேச்சுமொழியைத் திருத்தமுறையிற் கொண்டவை ஆகும். 'பேச்சுமொழி ஒழுங்கு நிலையை அடையின், இந்நிலையிற்றான் இருக்கும்' என்பது

போல நன்முறையில் அமைந்திருப்பது வரைமொழி. இலக்கிய மொழியாக இன்று இருப்பது ஒரு காலத்தில் பேச்சுமொழியாக இருந்தது. "இன்று கடினமாகவும் வியப்பாகவும் தோன்றும் டான்ட்டி, பெட்ராக் என்பவர்கள் வரைந்த லத்தீன் மொழி நடை ஒரு காலத்தில் சாதாரண மக்கள் பேசிவந்த மொழியே என்பதை நாம் அறிதல்வேண்டும். இவ்வுண்மை எல்லா மொழி கட்கும் பொருந்தும்" என டாக்டர் ஸ்பீட் தமது நூலில் குறித் திருத்தல் கவனிக்கத்தக்கது.

## நடைவளர்ச்சி

இவ்வாறு சாதாரணமாக வழங்கியமொழி ஒன்றைச் செப்பம் செய்தலும், முடிபுகொடுத்தலும், பிறவும் நீண்ட காலவளர்ச்சியாக இருத்தல்வேண்டும். சான்றாக, ரிக்வேத மொழி வளர்ச்சி அவ்வேதகாலத்திற்கு மிக முன்னரே தொடங் கப் பெற்றிருத்தல் வேண்டும். ஏனெனில், திடீரெனமொழி அமைதி அவ்வளவு செம்மையாக அமைதல் இயற்கைக்கு மாறானது ஆதலால் என்க. வாழையடி வாழையாக வந்த செய் யுள் நடையே ரிக்வேத நடையாகும். அவ்வாறே பண்டைச் சங்கநூல் தமிழ்நடை, அச்சங்க காலத்திற்கு முன்பே பண் பட்டு வளர்ச்சிஅடைந்து வந்த நடையென்பதை அறிதல் வேண்டும்.

## வாய்மொழி வரைமொழி ஆகும் முறை

"ஒரு நாட்டு மொழி, முதலில் கொச்சையாகவும், கரடு முர டாகவும் இருக்கும். அதனைச் செப்பம் செய்யச்சிற்பிகள் தோன் றுவர்; செப்பம் செய்வர். அங்ஙனம் செப்பம் செய்யப்பட்டதே இலக்கிய மொழி. முதன் முதலில் மொழியைச் செப்பம் செய்து எழுதும் நிலைக்குக்கொண்டு வருபவரே உயர்ந்தவர்; உழைப்பாளி கள். இதற்கெனச் சிலர் தோன்றி வேலைசெய்தல், இயற்கையின் சிறப்பென்றே இயம்புதல்வேண்டும். ஒருவர் சொல் முடிபுகளைச் செப்பம் செய்வார்; ஒருவர் நடையை ஒழுங்காக்குவார்; ஒரு வர் கருத்துக்களைப் பதப்படுத்துவார்; வேறு ஒருவர் கருத்துக் களை வெளியிடுவதற்குரிய சொல் அடுக்குகளை உண்டாக்குவார். இங்ஙனம் பேரறிஞர் பலரது கூட்டு உழைப்பாற்றான் மொழி

செம்மையுறுதல் உலக இயற்கை. இப்பெரு மக்களது தனிப் பட்டநடை மொழிச்செல்வமாகப் பின்னோரால் கருதப்படும். அரிய தொடர்கள், ஓசை நயம், எதுகை, மோனை இன்ன பிற அழகுகள் படிப்படியாகப் படித்தவரிடம் பரவும்; அளவளா வும்பொழுது இவை அவரது உரையாடலை அணி செய்து ஆரா இன்பம் அளித்தல் உறுதி. சொல் அழகும், பொருள் அழகும் பின்னிச் செல்லும் பான்மை கற்றோர்க்குக் கழிபேரு வகை விளைப்பதாகும். இத்தகைய உயரிய பண்பை முதலில் உண்டாக்கித்தரும் மொழிவல்லுநர்க்கு உலகம் நன்றிபாராட்டக் கடமைப் பட்டுள்ளது அன்றோ?" என்று அறிஞர் (நியூமென்) அறைந்துள்ளமை உண்மையே ஆகும். இக் கூற்றால், "வாய் மொழி" எங்ஙனம் செப்பம் செய்யப்பட்டு "வரை மொழி" ஆகின்றது என்பது எளிதிற் புலனாகும்.

## வரைமொழியை வாய்மொழி ஆக்கலாம்

வரைமொழியும் வாய் மொழியும் ஒன்றாக இருத்தல் இயலாது. 'இயலாதா?' என்று கூறுதல் தவறாகாது; மொழிப் புலமை எய்துதல் அனைவர்க்கும் ஆவதொன்றன்று. சாதா ரணப் படிப்புடையார் ஓரளவு பயிற்சி பெறின், பிழையின்றி எளிய நடையிற் பேசலாகுமேயன்றிப் புலவர் நடையிற் பேசு தல் இயலாது. ஆயின், அனைவரும் கல்வியறிவு பெறின்—தாய் மொழியைத் தூய்மையாக வைத்துக் கொள்ளவேண்டும் என்னும் ஆர்வம் அழுத்தமாக இருப்பின் அங்கிலையில் பிழை யற்ற தமிழ், பொது மக்கள் வாழ்வில் நடனம் செய்யும். அந்த முறை இன்று படித்தவர் வாழ்க்கையிலும் காணுதல் அருமை யாக இருக்கிறது! உள்ளத்தில் மொழிப்பற்று வன்மையோடு உறுத்துங்கால், பிழையற்ற முறையில் பேசவேண்டும் என்னும் உணர்ச்சி தோன்றும்; அதற்குரிய முயற்சி தோன்றும்.

"குழந்தைகள் சிறு பருவத்திலேயே பெற்றோர்—மற்றோர் பழக்கத்தால் பிழையறப் பேசப் பயிலுவாராயின், மொழி மாறு தல் அடையாது. ஆங்கிலச்சிறுர் இன்றும் ஆங்கிலோ-சாக்ஸன் சொற்களைப் பேசுதல் காணலாம். இதற்குப் பழக்கமே காரணம் ஆகும். மொழியில் உண்டாகும் மாறுதல்கள் முதலில் எளிய வையாகவும், சிறியவையாகவும் காணப்படினும்—அவையே

சில தலை முறைகளில் அம்மொழியின் தன்மையை மாற்றிவிடுவன ஆகும்." என மொழிஇலக்கணப் புலவராகிய டாக்டர் ஸ்வீட் கூறியிருத்தல் கருதத்தக்கது.

## மொழியால் உண்டாகும் பிளவு

எனவே, வரைமொழி பயின்று அம்மொழியினைப் பேசுவார்க்கும், அங்ஙனம் பேசார்க்கும் உள்ளதொரு வேறுபாடு காளடைவில் பெருகித் தோன்றும் என்பது புலனாகும். படித்த மக்கள் ஒருவாறும் படிக்காத மக்கள் ஒருவாறும் பலதலைமுறைகளாய்ப் பேசிவருதலால் தமிழ் (ஒவ்வொரு மொழியும்) வரைமொழி எனவும் வாய்மொழி எனவும் இரண்டாகி, வரைமொழி ஒரே நிலையில் மாறாது நிற்ப, வாய்மொழி காலம் கழியக் கழிய மாறுதல்கள் ஏற்று ஏற்றுப் போதல் இயல்பாய் நடைபெறுகின்ற நிகழ்ச்சியாக இருக்கின்றது. மேலும் ஒரே மொழி, மக்கள் அறிவு நிலைக்கு ஏற்ப மாறுதல் அடைதலும் இயல்பு; எனவே, ஒரே மொழியை 'இழுத்துக்கொண்டு' என்று படித்தவரும், 'இழுத்துக்கிட்டு, ஈத்துகிட்டு, இஸ்துகினு' எனப்படிப்படியாகக் கீழ்நிலையில் உள்ள மக்களும் பேச இயல்பாகவே இடம் ஏற்படுகிறது. இந்நிலை வளர வளர முன்னரே, படிக்காத மக்களைப் பல்வேறு காரணங்கள் காட்டி வேறுபடுத்தி வந்த படித்தவர், இம்மொழி வேறுபாட்டையும் துணையாகக் காட்டித் தம்மைச் சமூகத்தினின்றும் வேறு பிரித்துக்கொள்ள முனைதல் கூடும்; இலக்கணம் வகுத்து, வாய்மொழி, வரைமொழியிற் புகாவண்ணம் எல்லை எடுப்பர்; தம் பிள்ளைகளை அவ்வாய்மொழியைப் பேசாதவாறு பாதுகாத்தலும் செய்வர். இங்ஙனம் மொழி மாறுதல் சமூகத்தில் இரண்டு பிரிவுகளை இயல்பாகவே உண்டாக்கி விடுகின்றது.

## பிளவு ஒழிய வழி

இப்பிளவு நீங்கவேண்டுமாயின், பிள்ளைகளை இளம் பருவமுதலே வரைமொழியைப் பயிலச்செய்தல் வேண்டும்; அதனிற் பிள்ளைகளைப் பேசப்பழக்கல் வேண்டும்; இஃதொன்றே காளடைவில், சமூகத்தைத் தூயமொழி பேசவைக்கும் தக்கவழியாகும். 'தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்' ஆதலின், இளமையில் உண்டாகும் சொற்களின் பிழையுற்ற உச்சரிப்பு, ஒலி

அமைப்பு முதலியவற்றை இளமையிற் பண்படச் செய்தல் வேண்டும். இவை இளமையில் வலியுறுமாயின், அவரது வாழ்க்கையில் வரைமொழி வாய்மொழியாதல் திண்ணம் என்று சொல்லலாம்.

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால் — (1) முதலில் வாய்மொழியாக இருந்த ஒன்றே வரைமொழி ஆனது; (2) காலம் கழியக் கழிய வரைமொழியினின்று வாய் மொழி மாறுபாடு பெறும்; (3) இவ்வேறு பாட்டைத் தமிழர் கல்வி அறிவின்மையால் வளர விடுவராயின், இருமொழிகளும் நாளடைவில் தொடர் பற்றுத் தனிமொழிகளாக மாறிவிடக்கூடும்; (4) ஆயின், மக்கள் ஓரளவு கல்வி அறிவும், தாய்மொழிப் பற்றும் உடையராயின், இருமொழிகட்கும் இடையே வேறுபாடு சிறந்து தோன்றாது; ஆதலின், இம்முயற்சியில் தமிழ்மக்கள் முயன்று தாய்மொழி கற்றுத் தமிழ்ப்பற்றுடைய தமிழராக வாழ்தல் வேண்டும்; தாய்மொழிப்பற்றே தாய்நாட்டுப் பற்றுக்கு அடிப்படையாகும்; என்பனவற்றைத் தெளிவுறத் தெரிந்து கொள்ளலாம்.

---

# 9. இயற்கையோடியைந்த வாழ்வு

ஈ. த. இராசேசுவரி அம்மையார், M. A., L. T.

மக்கள் நிலத்தின்மேல் நடக்கின்றனர்; நீரின் மேல் மிதக்கின்றனர்; இன்னோர் வானத்தில் பறக்க விரும்புவதும் இயல்பே. வானத்தில் பறந்து போவதென்றால், மக்கள் மனத்தில் இரண்டு எண்ணங்கள் எழுகின்றன. ஒன்று பறவையின் எண்ணம். இறக்கை கொண்டு பறக்கலாம் என்பதே இந்த எண்ணம். பறவையைக் கண்கூடாகப் பார்க்கிற மக்களுக்குக் காட்சியளவையால் எழுவதாகும் இந்த எண்ணம். வீட்டிலிருந்து வெளியே போவதென்றால், செருப்புப் போட்டுக் கொண்டு போவது போல, வானத்தில் போவதென்றால், இறக்கையை மாட்டிக் கொண்டு போவதென்று மக்களுக்குப் பல முறையும் தோன்றியது. இந்த எண்ணமே ஆகாய விமான

மாகப் பழுத்துள்ளது. மற்ருேர் எண்ணம் கடலில் மிதக்கும் கப்பலின் எண்ணமாகும். காற்றிலே மிதந்து செல்வது என்பதே இந்த எண்ணம். நீரில் மிதக்கும் கப்பல் நீரை விட இலேசாக இருத்தல் வேண்டும். காற்றில் மிதக்கும் கப்பல் காற்றினும் இலேசாக இருத்தல் வேண்டும். இங்குள்ள அருமைப் பாடு இத்தகைய இலேசான பொருளை அமைப்பதிலேயாம். நீரிலே மிதக்கும் கப்பலில் ஏறிச் செல்வது போல, வானமாகிய பெரிய வெட்ட வெளியில் அலைகிற காற்றுக் கடலிடையே மிதக்கிற கப்பலில் ஏறிச் செல்லலாம் என்னும் எண்ணம் அடிக்கடி மக்களுக்குத் தோன்றியது. இந்த எண்ணமே காற்ருடியாய்ப்பூத்து, கூண்டாய்க் காய்த்து, வானக் கப்பலாய் பழுத்தது.

இயற்கையோடு இயைந்துவாழும் வாழ்க்கையே இனிய வாழ்க்கை. இயற்கையின் இயைபை அறிவதே அதனை வெல்லுவதாம். காற்று வீசுகிறது ; அதற்கு ஏற்ப இளமைப் போதிலே சிறுவன் காற்ருடி செய்து அதனை பறக்கவிட்டு விளையாடுகிருன். வயிறு வளர்க்க வழி தேடும் ஒருவன் காற்ருலை (Wind Mill) செய்து தண்ணீர் இறைத்துப் பயிரிட்டுப் பிழைக்கின்ருன். இதுவே உலகத்தோடு ஒட்டி ஒழுகல் என்பதின் முதற்படியாகும். சில இயற்கை முறைகளையும் சில இயற்கைச் சட்டங்களையும் இயற்கைக்கு அடிமையாகி அறிந்தபின், இவ்வாறு அவற்றை நம் கையாட்களாக ஆக்கி அடக்கி ஆள்கிறோம். நமது கைகளும் கால்களும் நம்மை விட்டுப் பிரியாக் கருவிகள்; வாளும் வேலும் பிரியும் கருவிகள். இயற்கையை அறிந்ததும் இப்பிரியும் கருவிகளும், நம்முடைய கையும் காலுமாகி வேலை செய்ய வருகின்றன. வண்டி மனிதனுக்கு ஒரு கால் அன்ருே? தடி அவனுக்கு ஒரு கையன்ருே? இக் காலத்திலோ சிறிய சிறிய கருவிகள் என்றவைகள் எல்லாம் பெரிய பெரிய எந்திரங்களாக வளர்ந்து உள்ளன.

இந்த எந்திரங்களை இயற்கைச் சட்டத்திற்குத் தக்கபடி அமைத்தலும் வேண்டும்; அதற்குத்தக அவைகளை வேலை வாங்குதலும் வேண்டும். வானக்கப்பலும் இப்படிப்பட்டதோர் எந்திரமே. என்ன அது? ஒரு பை—அதிலே என்ன? நிறைய ஆவி—எத்தகைய ஆவி? காற்றினும் மெல்லிய ஆவி—அது

என்ன ஆவி? நீரியமாகலாம் (Hydrogen) பரிதியம் (Helium) ஆகலாம். ஆதலின், அந்த ஆவி வானக்கப்பலை மேலே தூக்குகிறது. அவ்வளவேயோ? அதனை ஓட்ட ஏதேனும் ஆற்றலை விளைக்கும் எந்திரமும் அதில் உண்டோ? ஆம் உண்டு. மக்கள் அமர அறைகளும் உண்டோ? ஆம் உண்டு. இவை அனைத்தையும் தூக்குகிறதா அது? ஆம் எளிதாகத் தூக்குகிறது. எனவே, இவையனைத்தும் கூடியதோர் அமைப்பே வானக் கப்பலாகும். எனவே, வானக் கப்பல் என்பது தன்னுடைய மேற்போர்வைக்குள்ளே அடைபட்டிருக்கும் இலேசான ஆவியினிடத்தே விளங்கி, மேலோங்கித் தூக்கிச் செல்லும் ஏற்றச் சக்தியினால் காற்றிலே மிதந்து, ஏதேனும் வேறொரு சக்தியினால், ஓடுகிற காற்று எந்திரமே என்பதாயிற்று. இந்த எந்திரமும் இயற்கைச் சட்டத்திற்கு இயைய அமைய வேண்டும்; இயைய இயங்க வேண்டும்.

இயற்கைப் பொருள்கள் மூன்று நிலையில் உள்ளன. கல்லும் மண்ணும்போல் கெட்டியாக உள்ளவை **திணிப்பொருள்களாம்,** (Solids). தண்ணீர்போல்வன **நீரிப்பொருள்களாம்,** (Liquids). காற்றைப்போல் உள்ளன **ஆவிப்பொருள்களாம்,** (Gases). பொருள்களின் இலக்கணத்தை அறிய விரும்புவோர் இவற்றின் **அமுக்கம்** (Pressure), **அடர்த்தி** (Density), **விசை** (Velocity), என்பவற்றைப்பற்றிய சட்டங்களை அறிதல் வேண்டும். திணிப் பொருள்களின் **தகைவு** (Stress), **நிலைப்பு** (Stability), **உரம்** (Tenacity), முதலியவற்றைப் பற்றிய இயற்கை உண்மைகளையும் அறிதல் வேண்டும். இவற்றிற்குத் தக்கபடியன்றோ கெட்டிப் பொருள்களைக் கொண்டும், ஓடிப்பொருள்களைக் கொண்டும் வானக்கப்பலை அமைத்தல் வேண்டும்? கெட்டியாம் தரையிலிருந்து, ஓடியாம் காற்றிடையே, இக் கப்பல் மிதந்து இயங்க வேண்டும் அன்றோ?

பயணம் போதலைப்பற்றியன்றோ பேசுகின்றோம்? ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மக்களும்போக விரும்புகின்றனர்; பொருள்களும் போகவேண்டியிருக்கின்றன. இவற்றை மனிதனாவது தூக்கிச் செல்ல வேண்டும்; விலங்காவது தூக்கிச் செல்லவேண்டும்; காற்றாவது பாய்மரத்தை ஓட்டிப் படகைத் தள்ள வேண்டும்; மண்ணெண்ணெயாவது தானோடியை ஓட்ட

வேண்டும்; நீராவியாவது புகைவண்டியை உந்த வேண்டும். இந்த உண்மையைத் தெருவிலே போகிற எந்த விறகு தலையனும் இந்த நாளில் நன்கு அறிந்துள்ளான். விஞ்ஞானப் புலவரின் சிறப்பு என்னே? பலவேறு வகையான இவற்றிடையே ஓர் ஒற்றுமையைக் கண்டு ஒரு பொதுப் பெயர் இடுவதே இவர்கள் பெருமை. வினைவீதம் (Power) என்ற பொதுப் பெயரே இவர்கள் கண்ட புதுக்காட்சி. இவற்றை அளந்து ஒப்பிடலாம் என, இந்தப் பெயரே சொல்லிக் கொடுக்கிறது. நாட்டுப் புறங்களில் நீரிறைக்கும் எந்திரம் முதலியன வேலைசெய்யும் வினை வீதத்தைக் கணக்கிட்டு ஒப்பு நோக்கி " இத்தனைக் குதிரை ஓட்டம் "(Horse Power) என்று நாட்டுப்புற மக்களும் இன்று பேசி வருகின்றார்கள். எனவே, மக்களையோ, பொருளையோ, கொண்டு செல்ல என்ன வினைவீதம் செலவாகிறது எனக் கணக்கு எடுக்கலாம். ஒரு முறையைவிட மற்றொரு முறை, எவ்வளவு சிக்கனமானது என்று ஆராயவும் இடம் ஏற்படுகிறது. நாம் கொடுக்கும் "சத்தம்," இந்த வினைவீதத்தை, ரூபாய், அணா, பை, எனப் பணவீதமாகப் பேசுகிற பேச்சேயாம்.

"மெதுவாகக் காலந் தாழ்த்திக் கொண்டு போனாலும் கவலையில்லை" என்றால், பெரிய பெரிய பொருள்களையும், தண்ணீரின் மேல் குறைந்த செலவில் கொண்டுபோகலாம். பக்கிங்காம் கால்வாயில் படகுகள், கட்டைகளையும் மூட்டைகளையும் ஏற்றி வருவதை நாம் பார்க்கவில்லையா? சத்தம் எவ்வளவு குறைவு! ஆனால், வேகமாகப் போகவேண்டுமானால் இந்தச் செலவு ஏறிக் கொண்டே போகிறது. கப்பலும் பெரிதாகிக்கொண்டு போகப் போக வேகம் ஏறிக்கொண்டே போக முடியாது. அந்த வேகத்திற்கும் ஓர் எல்லை உண்டு. அந்த எல்லை வேகத்தைக் (Limiting speed) கடக்கவேண்டுமானால் வானக் கப்பலில் செல்ல வேண்டும்.

படகின் சத்தத்தையும், புகைவண்டியின் சத்தத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் பூனை அளவும் யானை அளவுமாக இருக்கக் காண்கிறோம். தரையோ, நீர்போல ஒரேமட்டமாக இல்லை. தரையிலே குறுக்கிட்டு நிற்கும் தடைகள் மிகப்பல. ஒரு பக்கம் மேடு—ஒரு பக்கம் பள்ளம்—இதுவே தரையின் சிறப்பியல்பு. ஆகவே, தண்ணீரில் போகும்போது ஏற்படும் செலவுபோலத்

தரைமேல், வேகத்திற்குத் தக்கபடி செலவு ஏறிவரும் என்று சொல்ல முடியாது. செலவானது தடைகளைத் தாண்டுவதனைப் பெரிதும் பொறுத்திருக்கிறது. குறைந்த வேகத்தில் செல்லு வதற்கும், மிகுந்த வேகத்தில் செல்லுவதற்கும் இங்கே செலவு பெரிதும் மாறுபடுவதில்லை. ஆனால் செலவு மிகுதிப்படாமல் நினைத்தபடி எல்லாம், வேகத்தை உயர்த்திக்கொண்டே போக லாம் என மனப்பால் குடித்தலாகாது. இந்த வேகத்திற்கும் ஓர் எல்லை உண்டென வண்டியிற் போகும் நமக்கு நன்றாகத் தெரியும்.

நீரில் போவதை விடவும், தரையில் போவதைவிடவும், காற்றில் போவதற்குத்தான் செலவு குறைவு. அங்கே தடை ஏது? மேடு ஏது? பள்ளம் ஏது? அங்கே தடையாக உள்ளது காற்று ஒன்றுதான். தரையில் போகும் போது தரைமட்டம் எப்படி இருக்கிறது என ஆராய்ந்து கொண்டே போதல் வேண்டும். காற்றிலோ அந்தக்கவலையே இல்லை. காற்றிலே உரசுதலும் (Friction) குறைவு. ஆகவே ஆகாயத்திலே செல் லும் வண்டியின் வேகத்திற்கு எல்லையே இல்லை. நீர்க்கப்பலில் போகும் போது நீரோடும் இடந்தேடிப் போக வேண்டும். காற்றோ எங்கும் இருப்பதால் இவ்வாறு வழிதேடிச் செல்ல வேண்டுவதில்லை. சிறிது உயரம் சென்றதும் எதுவும் வழியாம். மனம் போன போக்கெல்லாம் காற்றும் போகும். அதன் வேகம் எல்லையற்ற வேகமாம் (Great speed); மாறுதலொரு வேகமாகவும் (Uniform speed) அது விளங்கக் கூடியது. இவ்வாறு நிகழக் கூடியது காற்றில் மட்டுமேயாம். இதனால் அன்றோ, மக்கள் வானத்தில் பறக்க முன்வந்து இன்று அதனையே சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். இன்றுமட்டுமா? நந்திக்கிராமத் தில் தீக்குளிக்க இருந்த பரதனிடம் விரைந்து வர விரும்பிய இராம பிரானார், புஷ்பக விமானத்திலன்றோ பறந்து வந்தார் என்று அன்றே புலவர்களும் எழுதிவைத்துள்ளார்கள்.

---

# 10. சோழர் கால ஓவியமும் சிற்பமும்

J. M. சோமசுந்தரம் B. A., B. L.

## தஞ்சை—இராஜராஜேசுவரம்

## சோழர் காலத்துச் சுவர் ஓவியங்கள்:

பெருவுடையார் விமானத்தின் கீழ், மூலத்தானத்தைச் சுற்றிச் சிறிய உள் மாளிகை ஒன்றுள்ளது. அதன் சுவர்கள் மீதும், மண்டப மேற் கட்டியிலும் சுமார் 936 ஆண்டுகள் மறைபட்டிருந்த பொக்கிஷமாகிய - ஒன்றின் மேலொன்றதான இரு வகை அரிய வர்ண ஓவியங்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து வரலாற்றாசிரியர் ச. க. கோவிந்தசாமிப் பிள்ளை, எம். ஏ., அவர்களால் 1931 – ஆம் ஆண்டில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவைகளுள் மேலுள்ளவை 17-ஆவது நூற்றாண்டினதான தஞ்சை நாயக்கர் காலத்தவை என்றும், மறைபட்டிருப்பவை சோழர் காலத்தவை என்றும், இந்திய ஓவியக்கலை ஞானத்தில் சோழர்காலத்தவை, மிக உயரியதோர் வரிசையில் வைத்தற்குரியவை என்றும் அறிஞர் எண்ணுகின்றனர். இவைகளுள் சிற்சில ஓவியங்களே இப்போது காணக்கிடக்கின்றன. மற்றவை, நாயக்கர் காலத்தில், மூந்திய ஓவியங்களின் மேற் பூசிய ஒரு மெல்லிய சுண்ணச்சாந்தின் மேல்தீட்டிய நாயக்கர் கால ஓவியங்களின் கீழ் மறைபட்டிருக்கின்றன. இவை காண்போரைப் பரவசப் படுத்தக்கூடிய வகையில் தீட்டப்பெற்று, அக்காலத்து ஓவியக்கலை வளர்ச்சியையும், சிறந்த சைவ சமய உணர்ச்சியையும் விளக்குகின்றன.

சோழர் ஓவியங்கள் தீட்டப் பெற்ற காலம் 10, 11, ஆவது நூற்றாண்டாகும்; சைவ சமயத்தின் உன்னத காலம். அதற்கு முற்பட்ட 9-ஆவது நூற்றாண்டிலே தான் ஆரூரில் சுந்தரமூர்த்தி நாயனார் தமது வாழ்க்கை நலங்களையும், சைவ சமயத்தையும், தமது தேவாரப் பதிகங்களால் மெய்ப்பித்ததாகும்.

## சில ஓவியங்களைப் பற்றிய விவரங்களாவன :

(i) இவ் வோவியங்களின் ஒருபகுதி சுந்தரரது வாழ்க்கைச் சரிதத்தைக்குறிக்கின்றது. சுந்தரரது திருமணப்பந்தல் ;

மணத்தைக்கண்டு களிக்கப் பலர் கூடியிருக்கின்றனர். சிவபெருமான், கிழ வேதியர் உருவங்கொண்டு, ஒரு கையில் குடையும், மற்றொரு கையில் ஓர் ஓலையுந்தாங்கி, சுந்தரருக்கு முன்நிற்கின்றார். ஓலை, சுந்தரரது அடிமைச் சீட்டாகும். கிழவேதியர், இவ்வடிமை ஓலையைக்காட்டித் திருமணத்தைத் தடைசெய்து ஆட்கொள்ள வந்துள்ளார். சுந்தரர் வியப்புடன் அவரை நோக்குகின்றார். திருமணச் சுற்றம் திகைக்கின்றது. அவர்களுக்கு எதிரே திருவெண்ணெய் நல்லூர் கோயில் தீட்டப் பெற்றுள்ளது. ஒரு பெருங்கூட்டம் அதனுள் செல்லுகின்றது.

(ii) அதற்கடுத்தது ஒரு குடியானவர் வீட்டுத் தோற்றம். பெண்கள் மண்பானையில் உலைவைத்துச் சோறுபாகம் செய்கின்றனர். வேலையாள் ஒருவன் ஒரு பெண்ணிடமிருந்து உணவு பெறுகின்றான்.

(iii) இவைகளுக்கு மேல் சிவகைலாயமலை. சிவனார் புலித்தோலின் மீது உட்கார்ந்திருக்கின்றனர். அவருக்கு முன்னர், நந்தி படுத்திருக்கின்றது. சிவகணங்களும், முனிவர்களும் சூழ்ந்திருக்கின்றனர். இவர்களுக்கிடையே அரமகளிர் நடனமாடுகின்றனர்.

(iv) இதற்குச் சற்றுக் கீழ்ப்பாகத்தில் சுந்தரரும், சேரமானும் தோன்றுகின்றனர். சுந்தரர் வெள்ளையானைமீது கந்தருவர்கள் புடைசூழவும், தேவகானம் முழங்கவும் கயிலாயம் செல்கின்றார். யானையின்வேகம் உயிர்பெற்று விளங்குகிறது. அவர் நண்பர் சேரமான் பாயும் தன் வெள்ளைக்குதிரைமீது ஆவேசத்துடன் யானைக்குமுன்பாக விரைகின்றார். அவர்கள் ஓர்ஆற்றைக் கடப்பது போன்ற தோற்றம். நீரில் மீன்களும் நீர்வாழ்வனவும் அங்குமிங்கும் நீந்துகின்றன. மேகத்தினின்றும் ஒருபாதித் தோற்றம் காண்கிறது. கந்தருவர் இவ்விருவர்மீதும் பூமாரிசொரிகின்றனர். பல முனிவர்களும் இவர்களுடன் தோற்றம் அளிக்கின்றனர்.

(v) நடராசரும், இராச சேவையும் மேலைச்சுவரில் விரிவாகச் சித்திரிக்கப் பெற்றுள்ளன. பொன்னம்பலம் தோன்றுகிறது. கையில்கனலேந்திய ஆடவல்லானின் ஒரு புறத் தோற்ற மாத்திரம்; இதற்கு எதிரே அஞ்சலி செய்த வண்ணம் ஒரு

வீரத்தோற்றமுடைய அரசன் நிற்கின்றான். அவனுக்கு அடுத்து மூன்று பெருமாட்டிகள் பக்திவசப்பட்டு நிற்கின்றனர். இவர்களுக்குச் சற்றேவிலகி இரண்டு சேவகர்கள் வெள்ளித்தடிகள் தாங்கி நிற்கின்றனர். இவர்களுக்குக் கீழே மற்றும் பலபிரமுகர்கள்; இவர்களுக்கும் கீழ்ப்பலதிறப்பட்ட சேவை செய்து கொண்டு நிற்கும் சாதாரண ஆடவரும் மகளிரும் காணப்படுகின்றனர்; இவை அக்கால ஜன சமூகமாகும். அவர்களின் உடல் தோற்றமும், அணிகலன்களும், உடையும், தலையில் கொண்டை செருகியிருப்பதும், மற்றும், பல அமைப்புகளும் கண்டு மகிழ்தற்குரியவை.

(vi) அதற்கு அடுத்த வடபுறச் சுவர்ப் பத்தியில், ஓர் அருமையான புராணக் காட்சி காணப் பல கண்கள் வேண்டும். விரிசடைக் கடவுள் திரிபுரமெரிக்கின்ற தோற்றம். தேவகணங்கள் சூழ, விநாயகர்—முருகன் அருகிருப்ப, சிவனார் எட்டுக்கரங்களுடன் தமது இரதத்தின் மீது வீற்றிருந்து, தமது நெற்றிக் கண்ணைத் திறந்து நோக்குகின்றார். அசுரர் உயிரற்று வீழ்கின்றனர். இன்னும் பலர் தங்கள் பெண்களுடன் அங்கு மிங்கும் ஓடுகின்றனர். இன்னும் சில பெண்கள், தம் வீரக் கணவர் கழுத்தைச் சுற்றிக்கொண்டு தொங்குகின்றனர். இவ்வோவியம் ஓர் அருமருந்தன்னது; வீராவேசமும், சிவபெருமானின் மறக் கருணையும் தோற்றுவிக்கும் அருட்காட்சியாகும். ஒவ்வொரு சிறுபகுதியும் பலபல முறைகள் கண்டுகளிக்கக் கூடியவை.

இன்னொரு மருங்கில், சிவனது ஐந்நிறத் தோற்றம். ஐந்து மெல்லிய தூயவர்ணங்கள் தோய்ந்து "நிறங்களோரைந்துடையாய்" என்பதை விளக்குவனவாகும். இச்சோழர் ஓவியங்கள் இன்னும் பலவாகும்; ஐந்துகிரீடா மகுடஞ்சூடிய திருமுகங்கள் காண வேண்டுவனவாகும்.

## கங்கைகொண்ட சோழேச்சரம் :

இக்கோவில், இராசேந்திரனது வடநாட்டு வெற்றிகள் முடிந்ததும், கி. பி. 1025-இல் தொடங்கப் பெற்றதாகும். 'கங்கைகொண்ட சோழேச்சரம்,' திருமதில்களின் மேற்கிலும் தென்மேற்கு மூலையிலும், அரண்கள் (Bastions) பொருந்தியதாய்த் தற்காப்புக்கென எழுப்பிய கோட்டைச் சுவர் போன்று சுவர்களின் நடுவே மிகப் பரந்த இடத்தில் அமைந்துள்ளது.

தஞ்சைக் கோவிலைப்போலவே இறைவன் விமானத்திற்கு முன்னுள்ள மண்டபங்களும், அடுத்த சண்டேச்சுரர், அம்மை யார் கோவில்களும், மற்ற அமைப்புக்களும் சேய்மையிலிருந்து நோக்கும்போது கம்பீரமான அழகிய பெருமிதத் தோற்றத் தோடு விளங்குவதைக் காணலாம்.

திருக்கோவிலின் திருமதில் நீளம் ஏறத்தாழ 600 அடி; அகலம் 450 அடி; கனம் 4 அடி; முழுவதும் கற்களாலானதே. இத்திருமதிலை அடுத்த இரண்டு அடுக்குத் திருச்சுற்று மாளிகை யின் ஒரு பகுதி மாத்திரமே இப்போது காண்பதாகின்றது. மற்றும் பெரும் பகுதியைச் சென்னை அரசாங்க மராமத்து இலாகாவினர் காவேரிப் பேரணை (Grand Anicut) கட்டுதற்குக் கற்கள் வேண்டி இடித்துப் போயினர் எனத்தெரிகின்றது. என்னே! அவர்களது காரியப் பண்பும், சமய உணர்ச்சியும்! இக் கோவிலின் நீளம் 340 அடி; அகலம் 110 அடி; இதனுள் மகாமண்டபம் 175 அடி நீளமும், 95 அடி அகலமுமுடையது. கருப்பகிரகத்துக்கும், அந்தராள மண்டபத்திற்கும் இடையே அர்த்த மண்டபத்தின் தெற்கு வடக்கு இரு பக்கங்களிலும் அழகிய திருவாயில்கள் படிகளுடன் உள்ளன. கோவிலை அணுகும் திருவாயில் கிழக்கேயுள்ளது. இதனுட் சென்றால், மகாமண்டபத்தின் கம்பீரத் தோற்றம் நமக்குப் புலனாகும். இவைகளுக்கு ஏறத்தாழ பன்னிரண்டடி உயரம் கொண்ட பன்னிரண்டு வாயிற் காவற்சிலைகள் காவல் புரிகின்றன. மகா மண்டபம் அகலத்தில் எட்டுப்பந்திகளாய் 150 கற்றூண்கள் வரிசை வரிசையாகப் பெற்றிருக்கக் காணலாம். இதன் நடுப் பந்தி, 18 அடி உயரமுடையதாய், இருபக்கங்களும் 16 அடி உயரமுள்ளனவாய் அமைந்து, மேலே கல்லால் மூடிய மண்டப மாகும். இப்பரந்த பெருமித மண்டபமே பிற்காலத்தில் பெரிய கோயில்களில் ஏற்பட்டுள்ள ஆயிரக்கால் மண்டபம் போன்ற பெருமண்டபங்களுக்கு அடிப்படையாகிய தென்னலாம். கருப்ப கிரகத்திற்கு எதிரே உள்ள முன் மண்டபம் இருவரிசைகளா லான பெரும் சதுரக் கற்றூண்களாலாயது. மகா மண்டபத் திலுள்ள சம்பந்தப் பெருமான் சிலையும், துர்க்கையம்மன் சிலை யும் மிக்க வேலைப்பாடுடையன. மண்டப மேற்கட்டியில் பொறித்துள்ள நவக்கிரகக் கோள்களின் அமைப்பு, வேறு

எங்கும் காணப்படாத புதுமை வாய்ந்தது. சூரியனது தேர், அட்டதிக்குப் பாலகர், அவர்க்குமேல் நவக்கிரக அமைப்பு, நடுவண்பதும பீடம், இவையனைத்தும் ஒரே வட்டக் கல்லில் அமைந்துள்ளமை, கண்டு வியத்தற்குரியன வாகும்.

அர்த்த மண்டபத்துத் தூண்களுக்குமேல் பலவகை நடனச் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. இலிங்கத்தை நோக்கிய எதிர்ச் சுவர்மீது ஆறுவரிசைச் சிற்பங்கள் உள்ளன. அவை சண்டேச்சுரர் வரலாறு, தடாதகைப் பிராட்டியார் திருமணம் பார்த்தனும் பரமனும் போரிடல், மார்க்கண்டேயர் வரலாறு முதலியன. இவை உயிர் ஓவியமென உயிர்பெற்று விளங்கக் காணலாம்.

இறைவன் சந்நிதியின் மேல்விளங்கும் விமானமானது 186 அடி உயரமாகும். சுவாமியின் இலிங்கத் திருமேனியும் மிகப்பெரியதாகும். இலிங்கம் 13 முழச்சுற்றளவுடையது; இலிங்கத்தின் உயரம் 13 அடி, பீடம் 30 முழச்சுற்றளவுடையது. மூலக் கருவறையைச் சுற்றியுள்ள திருச்சுற்றின் அகலம் பத்து அடியாகும். மூலத்தானக் கோவில் தரைமட்டத்திற்கு மேல் இருபதடி உயரத்தில் அமைந்துள்ளது. கோவிலினடிப் பாகம் நூறு அடி சதுரமானது. இதன் உயரம் 35 அடிக்கு மேல் இரண்டு மேல்மாடிகளையுடையது. இதற்கு மேலுள்ள பகுதி எட்டு மாடிகள் உள்ளதாய் விளங்கும். இவ்வரிய விமானமும் இதன் கண் கலசம் ஸ்தூபி வரையிலுள்ள சிற்பங்களும், கோவிலின் வெளிப்பாகத்திலுள்ள சிற்பந்திகழ் உருவங்களும் மிக்கவனப்புற்றவை. தென்னிந்தியாவிலுள்ள சிற்பங்களிலும் அவற்றைப் பின்பற்றிய ஜாவாத்தீவிலுமுள்ள உயர்ந்த சிற்பங்களிலும் இவை மேம்பட்டவை என்பர். தென் மேற்கில் சபாபதியும், மேற்கில் இலிங்கோற்பவ அருணாசல ஈசுவரரும், தெற்கில் விநாயகரும், வடக்கில் திருவாயிலுக்கு அணித்தாய், சண்டேச்சுரருக்கு இறைவன் அனுக்கிரகம் செய்கின்ற அருட்கோலமாய் சண்டேச்சுர அனுக்கிரக மூர்த்தியும், அருமையான வேலைப்பாடுடையன. இதற்கு வலப்புறம் கணநாதர் ஆடிப்பாடிக்களித்தலும், இடப்புறம் பசுக்கள் (வேதங்கள்) நிற்றலும் காணத்தக்கனவாகும். மற்றும் கணங்களும் அரமகளிர்களும், இராக்கதக் கூட்டங்களுமாக எவ்விடத்திலும்

உருவங்கள் அமைந்துள்ளவற்றை நோக்குங்கால் இக்கோவி லின் கம்பீரமான தோற்றத்திற்கு அவை வனப்பைத் தருவன எனலாம். இவற்றுள், பெரும் பாலானவைகளுக்கு நரசிம்ம வர்மனது மாமல்ல புரத்துச்சிற்பங்களே அடிப்படையானவை எனக் கூறினும், அவற்றிற்குச் சுமார் மூன்று நூற்றாண்டு களுக்குப் பின்னர் எழுந்த இவ்வுருவங்கள் அவற்றைக் காட் டிலும் எத்தனையோ அரிய குணங்கள் வாய்ந்து, அழகிற்கும், உருவத்திற்கும், ஒரு முதிர்ந்த தேர்ச்சியைக் காட்டுவன எனத் துணியலாம். மற்றும் இக்கோவில் சோழர் காலத்துக் கோவில்களின் அழகிலும், சிற்பத் திறனிலும், ஒரு தனி நிலையை எய்தியுள்ளதாகவும் கூறலாம்.

---

## 11. டாடா - பட்டுத் தொழில்

வித்துவான், இ. கே. நடேச சர்மா, M. A.

பரோடா சமஸ்தானத்துச் சூரத் நகருக்கு அணித்தா யுள்ள நவ்சாரி கிராமத்திலே உயர்ந்த குடும்பத்தில் பிறந்த நஸ்ஸர் வான்ஜி டாடா அவர்கள் தம் வாழ்க்கையின் இடைப் பகுதியில் பருத்தித் தொழிலில் இடைவிடாது உழைத்து வந்ததோடு அல்லாமல் பட்டுத் தொழிலைப்பற்றி நினைத்தது பெரிதும் வியக்கத்தக்கது. அவர் பல்லாண்டுகளாய்ச் செய்த ஆராய்ச்சியின் பயனாய், இந்தியாவில் பட்டுத்தொழில் நடத்து வதற்கு வேண்டிய வாய்ப்புக்கள் இருப்பதை அறிந்தார். பட்டுத் தொழிலால் நம் நாட்டிற்கு அதிக நன்மை உண்டாகு மென்றும், பிரான்ஸ், இத்தாலி, ஜப்பான், சீனா முதலிய நாடு களைப்போல் இந்தியாவிலும் அத்தொழில் வளர்ச்சி யடையு மென்றும் அவர் நம்பி யிருந்தார்.

டாடா, மேல்நாடுகளிற் பிரயாணம் செய்த நாட்களில், பிரான்ஸ், இத்தாலி என்னு மிவ்விரு நாடுகளிலும் பட்டுப் பூச் சியை எவ்வாறு போற்றி வளர்த்து வந்தனர் என்பதை நன் றாய்க் கவனித்திருந்தார். இந்தியக் குடியானவர் ஓர் ஆண்டில் பல மாதங்கள் வேலையற்றிருக்கின்றனர். வேலையில்லா அக் காலத்தில் ஏதேனும் ஓர் உதவித் தொழில் அவர்களுக்கு இன்றி

யமையாதது. ஊதியமளிக்கும் குடிசைத் தொழிலொன்றை அவர்களுக்குக் கற்பித்தால் அவர்கள் கூலியும் பெறுவர்; நாட்டிற்செல்வமும் பெருகும்; வறுமையும் ஓரளவு ஒழியும். தாம் கண்ட நாடுகளில் பட்டுத் தொழில் இலாபகரமான ஒரு குடிசைத் தொழிலாய் நடத்தப்பட்டு வந்தது. அங்ஙனமே இந்தியாவிலும் நடத்திப் பார்க்கலாமென்று டாடா நினைத்தார்.

1893-ம் ஆண்டில் டாடா ஜப்பானுக்குப் போயிருந்த பொழுது அந்நாட்டினர் பட்டுத் தொழிலைப் புதிய முறையில் மிக்க திறமையுடன் நடத்தி வந்ததைக் கண்டார். பட்டுப் பூச்சியை வளர்ப்பதிலும், அதற்கு உணவான 'மல்பெரி' மரங்களைப் பயிரிடுவதிலும், ஜப்பானியர் மிகுந்த தேர்ச்சி பெற்றிருந்தனர். ஜப்பானில், பட்டுத் தொழில் ஒரு குடிசைத் தொழிலே. பெரும்பாலும் குடியானவர்களுடைய மனைவிமாரும் மக்களுமே அத்தொழிலில் ஈடுபட்டிருந்ததனால், அந்நாட்டின் சராசரி வருமானம் அதிகரித்தது. நாளடைவில், ஜப்பான் உலகில் விற்பனையாகும் பட்டில் முக்காற் பங்கினுக்கு மேல் உற்பத்தி செய்யுந் திறமையைப் பெற்றது. டாடா ஜப்பானியரிடம் எப்பொழுதும் மிக்க மதிப்பு வைத்திருந்தார். அவர்கள் கீழ் நாட்டினராயினும் மேல் நாட்டுத் தொழில் முறைகளுட் சிறந்தவற்றைக் கற்று, அவற்றில் மிக்க தேர்ச்சியும் பெற்றிருந்தமை, அவருக்கு அளவற்ற வியப்பினை விளைத்தது. நிலங்களைப் பண்படுத்தி, நன்கு பயிரிட்டு, மிக்க விளைவைப் பெறுவதில் ஜப்பானியர் கைதேர்ந்தவர். ஆகையால், டாடா அவர்களுடைய முறையை நுட்பமாய்க் கவனித்தார். அவர்கள் பட்டுப்பூச்சிகளை வளர்த்துப் பாதுகாக்கும்முறைகளைத் தம் நாட்டினரும் பின்பற்ற வேண்டுமென்ற எண்ணத்துடன் ஜாம்ஸெட்ஜி இந்தியாவுக்குப் புறப்பட்டார்.

டாடா, தாய்நாட்டினை அடைந்தவுடன், நம் நாட்டிலும் அப் பட்டுத் தொழிலை நடத்த இயலுமா என்பதைச் சோதித் தறியும்பொருட்டு, மைசூரில் ஒரு பண்ணையை நிறுவ எண்ணங்கொண்டார். அப்பொழுது மைசூர் சமஸ்தானத்திற்குத் திவானாகத் திகழ்ந்தவர். ஸர். சேஷாத்திரி ஐயர் என்னும் அறிஞர். நாட்டின் முன்னேற்றத்திற்கான எத்திட்டத்தையும் அவர் ஆதரிப்பவர். ஆதலின், அவர் டாடா

வுக்கு வேண்டிய உதவிபுரியப் பின்வாங்கவில்லை. அதனால் டாடாவின் எண்ணம் எளிதில் நிறைவேறிற்று. பட்டுப்பூச்சி யின் வளர்ச்சிக்குத் தட்பமும் வெப்பமும் மிதமாகவே இருத்தல் வேண்டும். பங்களூரைச் சுற்றிலுமுள்ள நிலப்பகுதிகள், ஜப்பானைப் போல் நடுத்தரமான தட்ப வெப்ப நிலையைப் பெற்றவை. அதனால், அவ்விடங்கள் பட்டுப்பூச்சியின் வளர்ச்சிக்கு ஏற்றவையே. திப்புசுல்தான் காலத்துக்கு முன்பே அந்நாட்டுப் பட்டு, புகழ் பெற்றது. அவ்விடங்களில் ஒருவிதப் பட்டுப் பூச்சிகள் வளர்க்கப்பட்டு வந்தன. ஆதலால், அங்கே அவற்றைச் சரியாய்ப் போற்றி வளர்த்துப் பெருக்குவது மிக எளிது.

டாடா, அமைத்த சிறு பண்ணையில் இந்தியர் பலர் பட்டுத் தொழிலைக் கற்றுக்கொண்டனர். 'மல்பெரி' மரத்தைப் பயிர் செய்யும் விதமும், பட்டுப்பூச்சிகளை வளர்க்கும் வகையும், அவற்றினுக்குண்டாகும் நோய்களைத் தீர்க்கும் வழியும், மற்றும் இன்றியமையாதனவான முறைகள் பலவும் கற்பிக்கப்பெற்றனர்; பட்டினைத் தொகுப்பது, பிரிப்பது, சுற்றுவது, அதனை விற்பனைக்குச் சித்தஞ் செய்வது முதலிய வேலைகளிற் பழகி வந்தனர். அப் பண்ணையை மேற்பார்வையிட்டு நன்கு நடத்துமாறு ஜப்பானிய அறிஞர் இருவர் அமர்த்தப்பட்டனர். அவர்களிருவரும் முன்னர்ச் சீனாவில் ஆர். டி. டாடாவிடம் வேலை பார்த்தவர்கள்; மைசூர்ப் பண்ணைக்கு வந்த பின்னும் முன்போலவே தங்கள் வேலையில் ஊக்கத்துடன் உழைத்து வந்தனர். பட்டு நூலைச் சுற்றும் யந்திரங்களும், பாவோட்டும் யந்திரங்களும் ஜப்பானிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. அவையெல்லாம் உறுதியாகவும் மலிவாகவும் இருந்தன. அந்த நிபுணர்களில் ஒருவரான ஆட்சு (Odzu) என்பவரின் மேற்பார்வையில் கூலியாட்களெல்லாரும் சரியாய் வேலைசெய்ததனால், மைசூர்ப் பண்ணையில் சில வாரங்களுக்குள் அத்தொழில் நல்ல முன்னேற்றம் பெற்றது.

எல்லா வேலைகளும் ஜப்பானிய முறையில் நடைபெற்றன. இந்தியத் தொழிலாளிகள் திறமையோடு வேலை செய்தனர். அதனால் பழங் கைத்தொழிலொன்று புத்துயிர் பெற்றது. வேலை கற்றுக்கொள்ள வந்தவர்களிடம் சம்பளம்

பெருமல் மூன்று மாதங்களில் வேலை கற்பிக்கப் பட்டது. இம் மூன்று மாதங்களுக்குள் 'மல்பெரி' பயிரிடுதல், பட்டுப்பூச்சி வளர்த்தல், நோயினை யறிதல், பூச்சியின் கூடுகளிலிருந்து, பட்டுப்பெறுதல், நூல் சுற்றல், கட்டுதல் எல்லாம் மனத்திற் பதியும்படி கற்பிக்கப்பட்டன.

டாடாவின் பண்ணை தொடக்கத்திலேயே பலனளித்தது. அதனால், அவர் அடைந்த மகிழ்ச்சிக்களவேயில்லை. 1899-ம் ஆண்டில் அவர் மைசூருக்கு வந்தபோது, தம் பண்ணைக்கு இன்னும் அதிகமான நிலம் வாங்கி 'மல்பெரி' மரங்களைப் பயிர் செய்யவேண்டுமென்று எண்ணினர். ஆனல், அச்சமயம் மைசூர் அரசாங்கத்தார், அதற்கிசையவில்லை. டாடாவின் பண்ணையிலுற்பத்தி செய்த பட்டு ஐரோப்பாவுக்கு அனுப்பப் பட்டது. அங்கு அத்தொழிலறிஞர் அதனை ஆராய்ச்சி செய்து அப்பட்டின் குணத்தைப் பாராட்டி, இந்தியாவில் அதுவரை உற்பத்தியான பட்டு அனைத்திலும் அதுவே உயர்ந்ததென்று தெரிவித்தனர். இதனையறிந்த இந்திய அரசாங்கத்தாரும் டாடாவினுடன் கலந்தாராய்ந்து, அம்முறையைப் பின்பற்றிச் சில பண்ணைகளை அமைத்தனர்.

"இந்தியர்களைப் பல்வேறு தொழிற் கலைகளிலும், பயிர்த் தொழிலிலும் புதுமுறையில் நன்கு பயிற்றுவிக்க வேண்டும். அதுவே அரசாங்கத்தின் முதற்கடமை. ஏதோ என்னுலியன்ற வரை இத்தொழிலுக்கு என்றென்றும் யான் உதவி செய்யக் காத்திருக்கிறேன்" என்று அரசாங்கத்தாருக்கு டாடா கடிதம் எழுதினர்.

இந்தியத் தாயின் தவப்புதல்வரான ஜாம்ஸெட்ஜி நம் நாடு செய்த தவக்குறையின் பயனுய், 1940-ம் ஆண்டில் மண்ணுலகினை நீத்தார். அவர் புத்திரர் முக்கியமான வேறு சில வேலைகளில் ஈடுபட்டிருந்தமையால், மைசூர்ப் பண்ணையை எவருக்கேனும் விற்றுவிட உறுதி கொண்டனர். மைசூர் அரசாங்கத்தின் உதவியில்லாமையால், அப் பண்ணை மிக்க பயனை அளிக்கவில்லை. அந்நாட்டின் நன்மையைக் கருதியே அப்பண்ணை அமைக்கப்பட்டதெனினும், அவ்வரசியலார் அதை எடுத்துக்கொள்ள மறுத்தனர்.

பிறகு டோராப்ஜி அப்பண்ணையை வாங்கிக்கொள்ளுமாறு இந்திய அரசாங்கத்தை வேண்டிக் கொண்டார். இந்திய அரசாங்கத்தாரும் தாம் அம்முறையைப் பின்பற்றிப் பல பண்ணைகளை நடத்தி வருவதனால், தமக்கு அது வேண்டாம் என்று கூறி வாங்க மறுத்துவிட்டனர். எனினும், அவர்கள் டாடாவினுடைய முயற்சியை மெச்சி, அப்பண்ணையைப் பற்றிய விவரங்களனைத்தையும் அச்சிட்டு வெளியிட்டனர்.

சில ஆண்டுகளுக்குப் பின்னர், அப்பண்ணையை 'மோட்சப் படை' (Salvation Army) என்ற கிறிஸ்தவ சங்கத்தினர் எடுத்துக்கொண்டனர். அவர்களுக்கு முன்னமேயே பட்டுத் தொழிலில் பயிற்சி அதிகம் உண்டு. நம் இந்திய சமூகத்தில் உள்ள தாழ்த்தப்பட்டோரையும் நாகரிகமற்ற முரட்டு சாதியினரையும் அவர்கள் கிறிஸ்தவர்களாக்கி வந்தனர்; அவ்வாறு புதியதாய்த் தம் மதத்தைச் சார்ந்த அவ்வெளியவர்களுக்கெனப் பல பள்ளிகளை நிறுவி, அங்குப் பட்டுத் தொழிலையும் கற்பித்து வந்தனர். அவர்கள் தம் முயற்சியினால் இப் பண்ணையை ஒழுங்கு படுத்தினர்.

பின்னர், மோரடாபாத் (Morodabad), அலிகார் (Aligarh), ப்ரெய்லி (Bareilly) முதலிய பல நகரங்களிலும் அதைப் போன்ற பல பண்ணைகள் நிறுவப்பட்டன. ஆனால், அவ்வனைத்திலும் சிறந்து விளங்கியது மைசூர்ப் பண்ணையே.

டாடாவின் முயற்சியால் இந்தியப் பட்டுத்தொழில் பெற்ற மேன்மை எடுத்துக்கூறும் தன்மையதன்று. முதலில் பயனற்றதென்று கைவிடப்பட்ட ஒரு கைத்தொழிலைத் துரைத்தனத்தாரே ஏற்றுக்கொண்டு நடத்தினரெனின், அதன் உயர்வினுக்கு வேறு என்ன சான்று வேண்டும்? எங்கும் 'மல்பெரி' மரங்கள் பயிரிடப் பெற்றன. பட்டுப் பூச்சிகளை வளர்க்கும் முறைகளைப்பற்றிய வெளியீடுகள் தோன்றிய வண்ணமிருந்தன. கண்காட்சிச் சாலைகளில் பட்டுத் தொழில் முறைகள் காண்பிக்கப்பட்டன. வருங் காலத்தில் பிரான்ஸ், இத்தாலி, ஜப்பான், சீனம் முதலிய நாடுகளைப்போல், நம் நாட்டுப் பட்டுத் தொழிலும் முதலிடம் பெறுமாயின், அத்தொழில் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்ட ஜாம்ஸெட்ஜி டாடாவை நம் நாட்டு மக்கள் அனைவரும் வாயார வாழ்த்துவர் என்பது உறுதி.

---

# 12. இலங்கை மாட்சி

அ. ச. ஞானசம்பந்தன், M. A.

இராவணன் ஆட்சிசெய்த நாடே அவன் பெருமைக்கும் சிறப்புக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது. நாடு இத்தகைய சிறந்த நிலையிலிருந்தது என்று கூறினாலே அதனை ஆட்சி செய்த மன்னவன் நிலையும் விளங்கும் எனக் கருதிய கம்பநாடர் 'ஊர் தேடு படலம்' என்றதொரு படலத்தை ஆக்குகிறார். அதன்கண் இலங்கையின் சிறப்பு ஒருவாறாக விரிக்கப்படுகிறது. இன்று நாம் காணும் இலங்கையே மிக்க வளமுடையது. அன்று ஒரு சிறந்த மன்னனால் ஆட்சி செய்யப்பட்ட காலத்து அஃது இன்னுஞ் சிறந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

பன்னெடுங் காவதம் அகன்றும் விரிந்தும் உள்ளது அப் பழம்பெரு நாடு. நாட்டின் இடையே திகழ்வது நகரம்; நகரில் உயிரினங்கள் யாவையும் வாழ்வதால் உலகை வாழ்விக்கும் திருமாலே போன்றது என்று ஆசிரியர் உவமை கூறுகிறார். நகரில் அமைந்துள்ள வீடுகள் செல்வச்செருக்கை வெளிக்காட்டி நிற்கின்றன. உலக முழுவதும் வென்றடிப்படுத்து நிற்கும் வெற்றி வீரன் ஒருவனுடைய நகரம் செல்வத்தில் செழித்திருந்தது என்பதில் வியப்பொன்று மில்லையன்றோ! வீடுகள் பொன்னினால் கட்டப்பெற்று மணிகள் அழுத்தப்பெற்றுள்ளன. அவை வீசும் ஒளி, மின்னலையும், கதிரவனையும் தோற்கச் செய்கின்றது. இவை உயர்வு நவிற்சி யணியின்பாற் படினும் உண்மையில்லாமற் போகவில்லை. இத்தகைய அருநகரைச் சமைத்த தேவதச்சனைப் புகழுதல் ஒல்லுமோ என்று கூறுமுகத்தான், ஆசிரியர் 'கலைஞனது படைப்பினை யாவரே முடியக் காண்பார்' என்ற உயர்ந்த தத்துவத்தை விளக்குகிறார். இத் தருணத்தில் இராவணனை ஒரு கலைஞன் என்பதையறிய வேண்டும். ஒருநகரின் பெருமையை, பொருட்செல்வர் வாழும் இடத்தை மட்டும் கண்டுவிட்டுப் புகழ்தல் சிறப்புடைமை யாகாது. இலண்டன் மாநகரப் பெருமையைக் கிழக்கு இலண்டனைப் பார்த்தபிறகு, யாவரும் விவரிக்க முன்வரார்.

உலகத்தில் பல்லிடங்களிலும் உள்ள வறுமைக்குச் சிறிதும் இளைக்காத வறுமை தாண்டவமாடும் இடம் கிழக்கு இலண்ட

ணுகும். ஆகவே, உண்மையை யுணர வேண்டுமேயாயின் இத்தகைய பகுதியையே காணல்வேண்டும். அஃதேபோலக் கம்ப நாடர் இலங்கையில் மக்கள் வாழும் பகுதிகளை வருணித்துவிட்டுக் குதிரைகளும் யானைகளும் கட்டப்படும் கொட்டிலைக் கூறுகிறார். மிருகங்கள் கட்டப்படும் இடம் மிகச் சிறப்புடையதாக இருப்பதற்கில்லை. ஆகவே அவற்றின் சிறப்பைக்கூறின் மற்றவற்றைப்பற்றிக் கூறவேண்டாம் என்று நினைத்துப்போலும் அதனைக் கூறுகிறார். மரகதம் முதலியவற்றால் செய்யப்பெற்ற தேர்கள் நிறுத்தப்படும் கொட்டிற் சாலைகள், சூரியனும் வெள்கும்படி ஒளிவிடுகின்றனவாதலால், இவற்றையுடைய இலங்கையோடு ஒப்பு நோக்கினால், துறக்க உலகமும் நரகமென்றே மதிக்கப்படும்.

"இரவிவெள்க நின்(று) இமைக்கிற இயற்கைய என்றால்
நரகம் ஒக்குமால் நன்னெடுந்துறக்கம் இந்நகர்க்கு"
—(ஊர்தேடு படலம், 14).

இவ்வரிய நகரைச்சுற்றி மதில்கள் காணப்படுகின்றன. தேவருலகையே சென்று முட்டுவனவாக உள்ளன அவைகள். பொன்னாலே சமைக்கப்பட்ட அம்மதில்கள் "ஊழிதிரிநாளும் உலையா" என்று கூறப்படுகின்றன. நாட்டுக்காவற்கு மதில் இன்றியமையாததென்பதுகூற வேண்டுவதின்று. "உயர்வு, அகலம், திண்மை, அருமை இந்நான்கின் அமைவு, அரண் என்றுரைக்கும் நூல்" என்ற குறட்கருத்தை மனத்துட் கொண்ட ஆசிரியர் கீழ்வருமாறு கூறுகிறார். "கதிரவன், இராவணன் ஆணைக்கு அஞ்சி இலங்கைமேற் செல்வதில்லை என்று பிறர் கூறுவது தவறு. இவ்வுயர்ந்த மதிலைத்தாண்டிச் செல்ல இயலாததாலன்றோ அவன் இலங்கைமேற் செல்வதில்லை" இங்ஙனம் கூறி அனுமன் வியந்ததாக உள்ளது பாடல். மதிலின் சிறப்பைச் சிறந்த வீரனும், காற்றின் மகனும் கருங்கடலைத் தாவிச்செல்ல வல்லவனுமாகிய அனுமனே புகழ்ந்தான் எனில் அதன் சிறப்புப் பன்மடங்குயர்தல் காண்க.

இப்பெரு மதிலிடத்துக் காணப் படுவது வாயில். ஓயாது பகைவர்க் கஞ்சும் நாடோ சிறு வாயிலையுடையதாயிருக்கும். இராவணனது வாயில் 'மேருமலையை நிறுத்தி

அதன் நடுவே ஒரு வெளி செய்தது போலவும், தேவர்கள் ஒருங்கு சேர வந்து புகுதற்கமைத்த பெருவெளிபோலவும், கடல்நீர் வந்து புகுதற்குச் செய்த குகைபோலவும்' அகன்றும், விரிந்தும், காணப்படுகிறது. அவ்வகன்ற வாயிலிடத்துக் காவல் புரிகின்றனர் வீரர். ஆயிரக்கணக்கான அவரை, "கள்ள வினை வெவ்வலி யரக்கர் இருகையும் முள்எயிறும் வாளும்உற முன்னமுறை நின்றனர்" என்று கூறுமுகத்தான் அக்காவலினது சிறப்பைக் கூறுகிறார். துப்பாக்கியைத் தோள்மேலிட்டுத் தூங்கும் இற்றை நாளில் காவலர் அத் துப்பாக்கி இல்வழி வீரராகார். ஆனால் அவ்வரக்கர் ஆயுதமில் வழியும், வலியும் இருகையும் பல்லும் ஆயுதங்களாகப் பயன்படுந்தன்மையுடையார் என்று கூறுகிறார்.

இவ்வரும் பெருமதிலை யடுத்து வளைந்துகிடப்பது அகழி அதனுடைய ஆழத்தையும், அகலத்தையும் அளவிட்டுக் கூறுதலைக் காட்டிலும், உலகினை வளைத்துள்ள ஏழுகடல்களும் இராவணன் ஆணைக்கஞ்சி, அவனை நேரேகாண வன்மையற்று, அவனது மதிலைச் சுற்றி உலாவி வருவனவே போன்றுள என்று கூறிவிடலாம்.

இராகவன் பெருமையை நன்கறிந்த அனுமனே இலங்கையின் பாதுகாவலைக் கண்டபிறகு, கீழ்வருமாறு கூறுகிறான். "சேவகனும், யாமும், வெவ்வமர் தொடங்கிடின் என்ஆய்வினையும்? மேலும் கடலைக்கடப்பது அரிதன்று; அங்ஙனம் கடந்த பின்னர், இக்காவலைக்கடத்தல் அரிதாகவே முடியும்; போரும் மூண்டுவிட்டதாயின், நெருங்(கு) அமர் கிடக்கும் நெடுநாள்" என்று நினைப்பானேயாகில், அந்நகரின் காவல் மிகுதியைப் பற்றிக் கூற வேண்டுவது என்னுளது?

இத்தகைய சிறப்பு வாய்ந்த நகரில் வாழ்ந்த மக்கள், எத்தகையர் என்று காணல் வேண்டும். மக்களைப் பொறுத்தே ஒரு நாட்டின் பெருமையும், சிறுமையும் ஏற்படுகின்றன என்பது தமிழருடைய கொள்கையாகும். இது கருதியே ஔவையார் நாட்டை நோக்கிக் கூறுகையில்," நீ நாடாக இருப்பினும் காடாக இருப்பினும், பள்ளமாக இருப்பினும், மேடாக இருப்பினும், அவற்றால் பெருமை சிறுமை அடைவதில்லை.

யாண்டு நல்லார் உளரோ ஆண்டே நீயும் நல்லை" என்று கூறிப் போந்தார். இலங்கைமா நகரம் இவ்வளவு சிறப்புடையதாக விருந்தும், அங்கு வாழும் மாந்தர் செம்மையற்றவராக இருப்பின் அது சிறப்பாகாது. முன்னர், நாட்டின் வளத்தை நோக்கி, "நரகம் ஒக்குமால் நன்னெடுந்துறக்கம் இந்நகர்க்கு" என்று கூறிய ஆசிரியர் அவ்வுவமையையே மேலும் கூறிக்கொண்டு செல்கிறார். "செல்வ மிகுந்த இலங்கை மாந்தர் நன்கு வாழத் தெரிந்தவர்கள் : இன்பத்தை அனுபவிக்கத் தெரிந்தவர்கள் ; சிந்தையில் நிறைவொடு வாழ்ந்தார்கள்" என்றெல்லாம் ஆசிரியர் குறிக்கிறார்.

இங்ஙனம் அவர்கள் வாழ வழி செய்தவன், இராவணனே யல்லவா? இலங்கை முழுதுஞ் சுற்றித்திரிந்து, அவர்கள் வாழ்க்கையை, அவர்கள் காணாத வகையில் கண்டவனாகிய அனுமான் தன் கருத்தைத் தெரிவிக்கின்றான். அவர்கள் தன்னைக் காணாத வகை வடிவங் கொண்டு அவன் சென்றான் என்று முன்னமேயே கூறப்பட்டுள்ளது. அங்ஙனம் கூறவேண்டிய இன்றியமையாமையும் உண்டு. இன்றும் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டினைக்காண அரசரோ, அல்லது அவர் அருள் பெற்றவரோ செல்வார்களாயின், செல்லும் நாட்டில் எல்லாவற்றையும் செல்பவர் காண இயலாது. அந்நாட்டின் விரும்பத் தகாத பகுதிகளெல்லாம் மறைக்கப்பட்டு, விரும்பத் தகுந்தனவும் காண்டற்குரியனவும் ஆகிய பகுதிகளே காட்டப்படும். இரஷ்யா தேசத்தைக் காணச் செல்கிறவர்கள் இந்நிலையை அடைகிறார்கள் என்று நாம் புத்தகங்களிற் படிக்கிறோம். காண வருபவர், பகையரசன் நாட்டினராகவோ அல்லது ஐயத்திற்குரிய நண்பராகவோ இருப்பின் கேட்க வேண்டுவதில்லை.

அரசியலை நன்குணர்ந்த கம்பநாடன் வேண்டுமென்றே இதனை இங்ஙனம் கூறுகிறான். எத்துணையோ சந்தருப்பங்களிருந்தும் இலங்கையை வருணிக்க வேண்டும் பகுதியை அனுமன்மாட்டு விட்டுவிடுகிறான். இதற்குக் காரணங்கள் பலவுண்டு. முதலாவது, அனுமன் இலங்கைக்கும், இராவணற்கும் ஏன்? அரக்கரனைவர்க்குமே பகைவன் ; மேலும் இராமனிடம் பூண்ட அன்புப்பெருக்கால் இராவணன்மாட்டுத் தீராப் பகைமை கொண்டவன் ; அல்லாமலும் பிறன் மனைவியைக்

கவர்ந்து செல்கின்ற செயலை முற்றும் வெறுப்பவன்; தன் தலைவனாகிய சுக்ரீவன்படும் அல்லலைக் கண்டு அச்செயல் செய்கின்ற அனைவரையுமே அடியோடு வெறுக்கப் பழகிவிட்டான். அச் செயல் செய்தாரிடத்துக் கொண்டுள்ள வெறுப்புக் காரணமாக அவரிடத்துள்ள ஏனைய நற்குணங்களைக் கூட மறந்து விடுகிறான். எனவே, இத்தகையவன் கூற்றில் வைத்து இலங்கையையும், இராவணனையும் புகழ்தலே சாலச்சிறந்ததாகும். மேலும், அத்தகையவன் எதிர்பாராத சந்தருப்பத்தில் இலங்கையினுள் நுழைந்து கண்டகாட்சிகளைக் கூறுதலே சிறப்புடையது. விருப்பத்தக்கனவும், தகாதனவுமாகிய அனைத்தையும் அவன் காண்டல் கூடும். ஆகவே அவனுடைய வார்த்தைகளே சிறந்தவை. மேற்கூறியவற்றை மனத்திலிருத்திக் கொண்டு கீழ்வரும் இரண்டு பாடல்களைப் பார்ப்போமாக. இவற்றிலிருந்து இராவணனது இலங்கையைப்பற்றிய ஒரு முழுக்காட்சியை நாம் பெற முடியும்.

"பளிக்குமாளிகைத் தலந்தோறும் இடந்தோறும் பசுந்தேன்
துளிக்குங் கற்பகத் தண்ணருஞ் சோலைகள் தோறும்
அளிக்கும் தேறலுண்(டு) ஆடுநர் பாடுநர் ஆகிக்
களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக்காணேன்."

—(ஊர்தேடு படலம் 30)

"நித்த நியமத் தொழிலராய் நிறையு ஞானத்(து)
உத்தமர் உறங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களிறு உறங்கின மயங்கும்
பித்தரும் உறங்கினர் இனிப்பிறர் இதென்னும்."

—(ஊர்தேடு படலம் 165)

இத்தகைய நிலையில் சாதாரண மக்களும் உத்தமர்களும் வாழ வேண்டுமாயின், அது கொடுங்கோன் மன்னன் நாட்டில் இயலுமோ? சாதாரண மக்கள், ஆடுநர் பாடுநராகி வாழ்கின்றார். "களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக்காணேன்" என்ற வாக்கால் அம்மக்கள் வாழ்வு படம் பிடித்துக் காட்டப் படுகிறது. மக்கள் மனத்தில் மகிழ்ச்சி பொங்கித் ததும்பிய பொழுதல்லவா இசை பிறக்கும்? வயிற்றில் வறுமையில்லாத பொழுதல்லவா இசை பிறக்கும்? சீதையைக் கவருவதன்

முன்னர் இராவணன் செங்கோலனாகவே திகழ்ந்தான் என்று எண்ணவேண்டியுளது. அவன் வாழ்க்கை முறையைப் பின்னர் காண்போம். கவலையில்லாமல் தன் மக்களை வாழவைத்தவன் இராவணன் என்று அறிகிறோம் இம்மட்டோ? கேவலம் பொருட் செல்வம் ஒன்றினாலேயே மகிழ்வடையும் பான்மையுடையோர் மட்டுமே ஈண்டுக் குறிக்கப்பட்டார் என்று எண்ண வேண்டாம். அருட் செல்வமுடையாரும் அந்நாட்டில் வதிந்தனர் என்பதைத் தெரிவிக்கவே ஆசிரியர் இப்பாடலைக் கூறுகிறார்.

தினந்தோறும் அறமுறை வழுவாது காரியங்கள் செய்வதோடு நிற்கவில்லையாம் அவர்கள். 'நிறையும் ஞானத்து உத்தமர்' என்று கூறினமையால் சிறந்த நல் ஞானத்தைத் தரக்கூடிய கல்வி கற்று, அக்கல்வியை ஏட்டளவில் நிறுத்தாமல் வாழ்க்கையிலும் வாழ்ந்து காட்டினர் எனக் கூறப்படுகிறது. 'நிறையும் ஞானத்து' என்றமையின் கல்வி மேம்பாடும், உத்தமர் என்றமையின் ஒழுக்க மேம்பாடும் கூறியவாறாயிற்று. இங்ஙனம் உள்ள அவர்கள் தம் நாட்டை விட்டு ஓடி விடாமல் அங்குத்தங்கித் தினப்படி காரியங்கள் செய்து கொண்டு வாழுகிறார்கள் என்பது 'நித்த நியமத்தால்' என்றதால் குறிக்கப்படுகிறது. இத்தகைய மக்கள் ஒரு கொடுங்கோலன் நாட்டில் வாழ முடியுமா? வாழத்தான் விரும்புவார்களா? ஒரு வேளை வாழ வேண்டிய இன்றியமையாமை ஏற்படினும், அவ்வாழ்க்கையை உதறித்தள்ள வழி தேடுவார்களேயன்றி மகிழ்ச்சியோடு அங்குத் தங்கியிருப்பார்களா? அவர்கள் அங்ஙனம் மனம் ஒப்பி இருந்தார்கள் என்னும் கருத்துக் குறிப்பாக உணர்த்தப்படுகிறது. 'உத்தமர் உறங்கினர், யோகியர் துயின்றார்' உறக்கமும், துயிலும் மனவமைதி யுடையார்க்கு ஒல்லுமே தவிர, மனத்தில் மாறுபாடு கொண்டு நாட்டை விட்டுச் செல்ல வேண்டும் என்று நினைப்பார்க்கு இயலாத தொன்றாம். எனவே, இப்பாடலால் யோகியர், உத்தமர் ஆகிய அனைவரையும் ஆதரித்து வந்தனன் இராவணன் என்ற கருத்து அறிவுறுத்தப்படுகிறது.

இவ்வளவு விரிவாக இலங்கையையும், அதன் மக்களையும் அறிவதற்கொரு காரணமுண்டு. இந்த அடிப்படையை நன்கறிந்த பின்னரே இராவணனைப்பற்றி நன்கு அறிய முடியும்.

இவ்வரிய பெரிய இலங்கையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவன் இராவணன் என்னும் தோன்றல்; புலத்தியன் மரபில் வந்தவன்; மூவுலகத்தையும் வென்றடிப்படுத்துத் தனி யாட்சி செய்தவன்; சிறந்த சிவபக்தன்; எல்லை யில்லாத வரங் களையுடையவன்; தன் பெருமைக்கு ஏற்பப் பத்துத்தலைகளையும் இருபது கைகளையும் பெற்று வாழ்ந்தவன்; மூன்று கோடி வாணாளையும், முயன்று பெற்ற அரிய தவத்தையும் உடைய வன்; "எவராலும் வெல்லப்பட மாட்டாய்" என்று இறைவ னாலே கொடுக்கப்பட்ட வரத்தையும் உடையவன். திக்கயங் களை வென்று அவ்வெற்றியின் அறிகுறியாக அவற்றின் தந்தங் களை மார்பிலே தாங்கியவன்.

கேவலம், மிருக பலம் மட்டும் பொருந்தியவனல்லன்; ஆன்ம வலிமையும் நிரம்பப் பெற்றவன்.

இவ்வளவு அருமைப்பாடுகளும் அமைந்த இராவணன் ஊழ்வலியால் ஒரு பெருந்தவறு செய்தான்; பிறன்மனை நயத்த லாகிய சிறுதொழில் செய்தான்; அதன் பயனாக மானம் இழந்து, அரியணை இழந்து உயிரும் இழந்தான் ; தன்னோடு சேர்ந்தாரனை வரும் இறக்குமாறு செய்தான்; ஒரு பெரிய அவல நாடகம் நடக்கு மாறு செய்து விட்டான்; பெருந்தவறு செய்த காரணத்தால் பெருந்திங்கை அடைந்தான். இவ்வொரு தவற்றிற்காக அவனை வீணன் என்று தள்ளலாகாது. படிப்பவர் மனத்தில் அவன்பால் மட்டற்ற மதிப்பே தோன்றுகிறது. நன்மைக்கும், தீமைக்கும் ஒரு பெரும் போராட்டம் நடந்தது. அவன்பால் முழுதுமே தீமை இல்லை. முழுதும் நன்மையாக விருந்த இராவணன் மனத்தில் சிறு தீமை புகுந்து அம்முழு நன்மையையும் தனக் கடிமைப் படுத்தி விட்டது. பண்பாடுகளால் நிரம்பிய அப் பெருமனம் சிறிது சிறிதாகப் பிடி இழந்து இறுதியில் பெருங் குழியில் விழுகிறது. இதுவே அவலத்தின் சிகரம். இந்நிலையைச் சிறிது விரிவாகக் காண்பதே நூலின் நோக்கமாகும்.

# 13. இசையும் இசைக்கருவிகளும்

வித்துவான், S. கிருஷ்ணசாமி, B.A., B.O.L.

உலகிலுள்ள மொழிகளுள் நம் தமிழ் மொழிசொல் பொருள் வனப்பிலும், இனிமையிலும் சிறப்புடையது. இத் தமிழ் மொழி, இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்ற மூன்று பகுப்புடையது. இயற்றமிழ், கற்றாரையே மகிழ்விக்கும் இயல்புடையது. இசைத் தமிழ், கல்லாதாரையும், பிற உயிர்களையும் மகிழ்விக்கும் திறமை வாய்ந்தது. நாடகத் தமிழ், நாடகம் நடக்குமிடங்கட்குச் சென்று பொறுமையோடு அவணிருந்து காண்போரையே மகிழ்ச்சியூட்டு மியல்பு அமைந்தது; அல்லது கூர்ந்து அத்தமிழ் நூல்களையும் படித்துணர்தல் வேண்டும். இசையோ, வேறொரு வேலையில் போய்க்கொண்டிருப்பவரையும், தன் வயிற்றுப் பசி தணிய மேய்ந்து கொண்டிருக்கும் பசுக்களையும் தன் வசமாக்கும் திறமையுடையது. ஆகவே, இசை, கற்றோர், கல்லாதோர் இருவரையும், பிற உயிரினங்களையும் இன்பமடையச் செய்யும் ஆற்றல் வாய்ந்தது; ஆதலின், இந்த இசையையும், இசைக் கருவிகளையும் இங்கு ஆராய்ந்து அறிந்து கொள்வோம்.

இறைவனே இசைக்கு உருகும் இயல்புடையவன்; அவன் இசையை எப்பொழுதும் கேட்க விரும்பி தன்னிரு காதுகளிலும் கம்பளர், அசுவதரர் என்ற இருகந்தருவர்களைக் காதணிகளாக அணிந்துள்ளான் என்பர். இதனை,

"பயிலுமிசை திசைபரவ இருவர்கள் பயிலும்
வெள்வளைத் தோட்டினர்"

என்ற பாடற்பகுதியால் உணரலாம். இசைக்கு மென்மையியல்புடைய குழந்தைகளும், பசுக்களும், அசுணமாவும் ஈடுபடுவதன்றிக் கொடிய பாம்பும், விலங்குகளும், ஆறலைகள்வரும் வசப்படுவார்களாயின் இசையினது சிறப்பை எவ்வாறு இயம்புவது?

தாய், தாலாட்டுப் பாடும்பொழுது குழந்தை அதைக் கேட்டுத் தன் அழுகையை மறந்து அயர்ந்து தூங்குவது கண்

௫. அசுணமா, இனிய இசையைக்கேட்டு மகிழ்வடையும்: இன்னாத பறை ஒலியைக்கேட்டு மாண்டுபோம் என்பதை,

"துறையடுத்த விருத்தத் தொகைக்கவிக்கு
உறையடுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறையடுத்த அசுணநன் மாச்செவிப்
பறையடுத்தது போலுமென் பாவரோ"

என்ற கம்பன் பாடலால் அறியலாம்.

பசுக்கள் இசைக்கு உருகும் இயல்புடையன.

"குறுவியர்ப் புருவம் கூடலிப்பக் கோவிந்தன் குழல்கொடு
ஊதினபோது
பறவையின் கணங்கள் கூடு துறந்துவந்து சூழ்ந்துபடுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக் கவிழ்ந்து இறங்கிச்
செவியாட்ட கில்லாவே"

என்ற பாட்டோவியம், கறவைக்கணங்கள் எவ்வாறு கண்ணன் குழலிசையைக் கேட்டு மெய்ம்மறந்து நின்றன என்பதைப் புலப்படுத்தும்.

கொடிய நஞ்சுடைய நாகம், 'புன்னாகவராளி,' 'சங்கராபரணம்' என்ற இராகங்களைப் பாடினால் உடல் அசையாது தடைப்பட்டு நின்று கேட்டுருகும். மகுடியை வாசிப்போன் அதனை வாசிக்கும்பொழுது வேறிடத்திலுள்ள பாம்புகள் அவ்விடத்திற்குவந்து படம் விரித்துத் தலையசைத்துக் கேட்பதை நாம் இன்றும் காணலாம்.

கொடுஞ் செயல்புரியும் ஆறலை கள்வர்கள், இசையைக் கேட்டு அதில் உள்ளம் பதிந்து தம் கள்ளத்தொழில், கொலைத் தொழில்களை அடியோடு மறந்து விடுவர். அத்துடன் தாம் கையில் பிடித்திருக்கும் கொலைக்கருவிகளை தம் வசம் மறந்து நழுவவிடுவர். இதனை, "ஆறலை கள்வர் படைவிட அருளின், மாறுதலை பெயர்க்கும் மருவின்பாலை" என்ற பாடல் பகுதி தெரிவிக்கும். கொலையிற் கொடியாரை அக்கொடுஞ் செயலி லிருந்து திருத்தவல்லது இசையேயாகும்.

பெருங்கதை என்னும் நூலில் உதயணன் என்பவன், மாளவம் என்னும் இராகத்தை வீணையில் அமைத்துப்பாடி

களகிரி என்ற மதம்பிடித்த யானையை யடக்கி அதன்மேலேறி யூர்ந்தான் என்று கூறப்பட்டுள்ளது.

இறைவனே இசையின் வடிவாக இலங்குகின்றான் என்றும், தன் கையில் வீணையை வைத்துக்கொண்டு பாடுகின்றான் என்றும் கூறுவர். ஆலாலமுண்ட அமலனிடம் ஈடுபாடுடைய ஆனாயநாயனார் இறைவனையும், உலகத்துயிர்களையும் தம்மிசையில் வீடுபடச் செய்தார் என்று விரிவாகப் பெரிய புராணம் கூறும்.

தமிழிசை தமிழ் நாட்டில் பண்டைக் காலத்தில் மிகவும் உயர்ந்த நிலையிலிருந்தது என்பதைச் சிலப்பதிகாரமும், சிந்தாமணியும் தெரிவிக்கின்றன. பல அருமையான இசை நூல்கள் கடல்கோளினால் அழிந்துபோயின. அக்காலத்து இசைநூல்களில் மற்றும் பல ஆதரிப்பாரின்றிச் சிதைந்து போயின. இப்பொழுது இசையொடுபாடக் கூடிய குறவஞ்சி, பள்ளு முதலியன காணப்படுகின்றன. இவற்றைக் கொண்டே தமிழிசையின் சிறப்பை ஒருவாறு நாமறிந்து கொள்ள இடமுண்டு. தமிழ் நாட்டில் கருநாடகச் சங்கீதம் தலை எடுத்த பின் தமிழிசை சிறிது சிறிதாக மறைந்து போயிற்று.

பண்டைக்காலத்தில் வண்டியோட்டுவோர், ஏற்றம் இறைப்போர், உழுவோர், நாற்று நடுவோர், களை பறிப்போர் முதலிய பலரும் உள்ளக் களிப்பூட்டும் ஒருவகைத் தமிழிசையை இடைவிடாமல் பாடிக்கொண்டே தம் தொழிலைச் செய்வர்.

தமிழிசையில் வல்லவர், இந்தத் தமிழிசையை இருபகுப் பாக்கிப் பண் என்றும், திறம் என்றும் கூறுவர். பண்டைத் தமிழ் மக்கள் ஐந்திணையாக நிலத்தைப் பகுத்திருந்தனர். அத்திணைகளைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று பெயரிட்டழைத்தனர். இந்த ஐந்திணை மக்கள் வெவ்வேறு பண்களைப் பாடினர். அப்பண்களை அப்பெயரிட்டு குறிஞ்சிப் பண், முல்லைப்பண், மருதப்பண், நெய்தற்பண், பாலைப்பண் என்றழைத்தனர்.

இவற்றுள் காலத்தைக் குறிக்கும் பண்களுமுண்டு. காலைப் பண், மாலைப்பண், பகற்பண், இரவுப்பண், பொதுப்பண் என்று அப்பண்களைக் காலத்தால் அழைப்பதுமுண்டு. செவ்

வழி என்றொரு பண் உண்டு. அப்பண்ணை மாலைப்பண் என்பர். வன்பரணர் என்பவர் நள்ளியைப் புகழ்ந்து பாடும்பொழுது,

"நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தனர்"

என்று பாடும்பாடலில் எம்முடைய பாணர் மரபினர், இசை வரலாற்றுமுறையை மறந்து மருதப்பண்ணை மாலையில் பாடியும், செவ்வழிப் பண்ணைக் காலையில் பாடியும் திரிகின்றனர் என்கிறார். இதனால், காலையில் மருதம் பாடவேண்டும்; மாலையில் செவ்வழி பாடவேண்டும் என்பது தெரிகின்றது.

முற்காலத்து முத்தமிழ்ப் புலவர்கள் பண்ணமைந்த இனிய பாடல்களைப் பாடிச்சென்றனர். கலித்தொகைப் பாடல்களும் தேவபாணிகளும் இசைபோடுபாடி இன்புறத்தக்கவைகளே யாகும். தேவார ஆசிரியர்கள் பாடல்கள்யாவும், தமிழ்ப் பண்ணோடு பாடக்கூடியவைகளேயாகும். இப்பொழுதும் தமிழ்ப் பண்ணில் தேவாரங்களைப் பாடக்கூடிய சைவப் பெரியார்கள் பற்பல இடங்களிலிருக்கின்றனர். உயர்திரு—சுவாமி விபுலாநந்தர் என்னும் தமிழன்பர் இத்தமிழ்ப்பண்களில் பலவற்றைப் பற்றி நன்குஅறிந்திருந்தனர்.

பாடகர்கள், பண்ணமைந்த பாட்டுக்களை உருக்கள் என்பர். அவற்றை வரிகள் என்றும் வழங்குவர்; கீர்த்தனங்களை உருக்கள் என்று வழங்குகின்றனர். இன்னும் அவ்வுருக்களை செந்துறை, வெண்டுறை, பெருந்தேவபாணி, சிறு தேவபாணி முதலியனவாகப் பகுத்தும் கூறுவர். இசையைப் பாடுவோர், பாடும் பொழுது உடற்றொழில் குற்றமின்றிப்பாடுதல் வேண்டும்; அவர்கள் தாம் பாடும் பாடலின் குற்றம் ஏற்படாத படி பாடுதல் வேண்டும்.

இசையைப் பற்றிக் கூறும் நூல்கள் இசைத்தமிழ் நூல்களாகும். இசையோடு கூடிய கூத்தைக் குறிப்பிடும் நூல்கள், நாடகத்தமிழ் நூல்களாகும். நாடகத் தமிழ்நூல் சிலப்பதிகாரம் ஆகும். நாடகத்தில் ஆடலும் பாடலும் நிகழ்வதோடு கொட்

டனும் நிகழும். ஆகவே இசைக்குக் கொட்டும் வேண்டுவதா யிற்று. கொட்டும், கூத்துக்கு வேண்டிய பொழுது கொட்டு தற்குரிய கருவிகளும் வேண்டுமென்று தெரிய வருகின்றது. இக் கருவிகளைத்தான் இசைக்கருவிகளென வழங்குகின்றோம்.

இந்த இசைக்கருவிகள் பாடலுக்கும், ஆடலுக்கும் பயன் படுவன; இத்துடன் இரண்டும் இணைந்து நடைபெறும் பொழுதும் இவை துணைபுரிகின்றன. இசைக் கருவிகள் பலவற்றுள்ளும் முதன்மை பெற்றது குழலேயாகும். இதனை யாழினும் சிறந்ததாக ஆன்றோர் பலரும் கூறிப் போந்தனர். வள்ளுவரும்,

"குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"

இக்குறளில் யாழிற்கு முன்னே குழலைக் குறித்துள்ளார். இவ்வாறே இளங்கோவடிகளும்,

"குழல்வழி நின்றது யாழே; யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே; தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே;"

என்று பாடிய பாடலில் குழலை யாழிற்கும் முன்பு வைத்துப் பாடியருளினர். இக்குழல்கள் பண்டைக்காலத்தில் பற்பல பொருள்களால் செய்யப்பட்டன. கொன்றைக்குழல், ஆம்பற் குழல், முல்லைக்குழல், வேய்ங்குழல் என்று பல குழல்கள் உண்டு. சிலப்பதிகாரம் இக்குழல் வகைகளை விரிவாகக் கூறும்.

குழலுக்கு அடுத்தபடியாக எண்ணும் யாழ் நான்கு வகைப் படும். அவை; பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டி யாழ்என்பன. இவைகள் முறையே இருபத்தொன்று, பத்தொன் பது, பதினாலு, ஏழு என்ற எண்ணிக்கையுள்ள நரம்புகளைக் கொண்டுவிளங்குவன.

ஆதியில் ஆயிரம் நரம்புடைய யாழ் ஒன்றிருந்த தாகத் தெரியவருகின்றது. "ஆயிரம் நரம்பிற்று ஆதியாழே" என்றும் கூறப்பட்டுள்ளது. யாழும் வீணையும் ஒன்று அல்லது வேறு என்று ஆராய்ந்து பார்ப்போமாயின், திருவாசகத்துள்,

"இன்னிசை வீணையரி யாழினர் ஒருபால்"

என்று குறிப்பிட்டுள்ளமையால் யாழ்வேறு வீணைவேறு என்பது தெரிகின்றது.

இசைக் கருவிகள் நான்கு வகைப்படும். அவை: துளைக் கருவி, நரம்புக்கருவி, தோற்கருவி, கஞ்சக்கருவி என்பன, இவற்றுள் முதல் குறித்த துளைக்கருவிகள் குழலும், நாகசுரமு மாகும். யாழ், வீணை முதலியன. நரம்புக்கருவிகள் ஆகும். பேரிகை, சல்லிகை, இடக்கை, உடுக்கை, கரடிகை, தக்கை, தமருகம், படகம், குடமுழா, திமிலை, தண்ணுமை, தடாரி, முழவு, காணப்பறை, சிறுபறை, நாழிகைப்பறை முதலியன தோற்கருவிகள். சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் இக்கருவிகளின் பெயர்களை விரிவாகக் கூறி இவற்றில் சிலவற்றிற்குப் பெயர்க் காரணமும் விளக்கியுள்ளார். உதாரணமாக-கரடிகை-கரடியின் குரல்போலும் ஓசையுடைய தனால் அப்பெயர் பெற்றது. 'சல்' என்னும் ஒலி உடையது 'சல்லிகை' என்றும், 'பம் பம்' என்னும் ஒலி உடையது 'பம்பை' என்றும் வழங்கி வருகின்றன.

இக்கருவிகளுள் பேரிகை என்பது பெரும்பாலும் போரில் முழக்கப்படும்; உடுக்கை என்பது காளி, மாரியம்மன் முதலிய அம்மன் கோயில்களில் அம்மனை வருணித்து வழிபாடு செய்யும் பொழுது முழக்கப்படும். தமருகம் என்பது பொன்னம் பலத்தில் எழுந்தருளியுள்ள கூத்தப்பிரான் கையில் விளங்குகிறது. உருவத்தில் உடுக்கையைப் போல் தமருகமிருப்பினும் ஓசையில் வேறுபாடுண்டு. தண்ணுமை என்பது, மத்தளத்தைப் போல் மெல்லிய ஓசையை உடையது. முரசு என்பதை மூவகையாகக் கூறுவர்; அவை; வெற்றிமுரசு, வீரமுரசு, மணமுரசு என்பன. இவற்றோடு தியாகமுரசு என்ற ஒன்றைக் கூட்டி நான்கு ஆகுமென்பாருமுளர். தடாரி என்பது, மருத நிலத்தில் நெல்லரியும் பொழுதும், களத்தில் நெல் காணுங்காலும் கொட்டப்படும். நாழிகைப்பறை என்பது நாழிகைதோறும் கொட்டப்படும். மதளி என்பது பாம்பாட்டிகள் ஊதும் மகுடியாகு மென்பர் ஒரு சாரார். நெடுவங்கியம், எக்காளம் என்பன, நீண்ட தூம்பினையுடைய ஊது கருவிகளாகும். கோவில்களிலும்,

மடங்களிலும் ஊதும் திருச்சின்னம் என்னும் ஊது கருவியும் இந்தவகையைச் சேர்ந்ததாகும்.

கஞ்சக்கருவிகள் : வெண்கலத்தினால் செய்து ஒலி எழுப்பும் தாளம், ஜாலரா, சேகண்டி, கிண்கிணி முதலியன. நாகசுரம் வாசிக்கும் பொழுது தாளத்திற்கே தனியாக ஒருவன் உண்டு. அவன், தாளவகைகள் பலவும் நன்கு அறிந்தவனாக இருப்பான்.

இவையேயன்றி மண்ணினால் செய்த பானையும் தற்காலத்தில் இசைக்கருவியாகக் கையாளப் படுகின்றது. ஊது கருவிகளில் சங்கு முற்காலத்தில் மிகவும் பயன்பட்டு வந்தது. திருமால் இடக்கையில் சங்கு ஊது கருவியாக விளங்குகின்றது. அதற்கு பாஞ்சசனியம் என்று பெயர். பாண்டவர் ஐவருக்கும் ஐந்து வெவ்வேறு பெயருடைய சங்கங்களிருந்தன. அவை; அனந்த விஜயம், பௌண்டரம், தேவதத்தம், சுகோஷம், மணி புஷ்பகம் என்ற பெயர்களையுடையன. இவை முறையே தருமன் முதலியோர்க்குரிய சங்கங்களாகும்.

முற்காலத்தில் யாழ் வாசிப்பவர்கள் பலவகையாக இருந்தனர். அவர்கள் பாணர் என்றழைக்கப்படுவர். பேரியாழ் பயிற்சியுடையவர் பெரும்பாணர்; சிறிய யாழ் பயிற்சியுடையவர் சிறுபாணர்; பாடலுடன் ஆடல் பழக்கமுடையவரைப் பொருநர் என்றழைப்பது வழக்கம். இவர்கள், அரசர்களிடமும் வள்ளல்களிடமும் பாட்டுப்பாடி பரிசில் பெறுவர்.

பண்டைத்தமிழ் வேந்தர்களும், வள்ளல்களும் தமிழிலும், இசையிலும் மிகவும் ஈடுபாடுடையவர். அக்காலத்தில் நாடு செழிக்க மழைவேண்டு மாயின் மேகராகக் குறிஞ்சி என்னும் பண்ணைப்பாடி மழையை வரவழைப்பர். இத்தகைய தெய்வத் தன்மையுள்ள இசையையும், இசைக் கருவிகளையும் ஆராய்ந்து நல்ல முறையில் மேன்மேலும் வளர்ச்சியுறப் பெருஞ்செல்வரும், அரசாங்கத்தினரும் முற்படுவாராயின் இசையுலகம் இன்டமடையும்.

---

# 14. எங்கள் இன்பப் பயணம்

வித்துவான், வீ. ப. நடராஜன்

மதுரை மாவட்டத்துச் சோழவந்தான் உயர்நிலைப் பள்ளி மாணவர் எழுபதின்மரும் ஆசிரியர் மூவருமாகக் குறித்த நாளில் புகைவண்டி நிலையம் சென்றடைந்தோம். மாணவர் எழுபதின்மரும் ஏழு அணிகளாகப் பகுக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவுக்கும் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். புகைவண்டி வந்ததும் பையுங் கையுமாக நின்ற மாணவர்கள் அணித்தலைவர்களுடன் ஏறிக்கொண்டனர். சேனையிலே வீரர்களிடம் காணுகின்ற ஒழுங்கு எங்கள் மாணவரிடம் அன்று காணப்பட்டது.

எங்கள் இன்பப் பயணம் இந்தியாவின் தென்பகுதியி லுள்ள இயற்கை எழில்வளம் செறிந்த குற்றாலம், திருவனந்த புரம், கன்னியாகுமரி ஆகிய மூவிடங்களைக்கண்டு திரும்புவதே யாகும். பயணம் செல்லுவதால் அடையும் பயன், சென்று திரும்பிய பின்னரன்றோ தெரியும்! அறிவின் வளர்ச்சி, ஐம் புலன்களின் வாயிலாக அறிய அறிய அதிகப்படுகிறது. கண் ணாற் கண்டறிய வேண்டியவை கணக்கற்றன. வாணா ளெல்லாம் செயற்கையிலேயே உறைந்து கிடக்கும் சிலர், இயற்கையன்னை தரும் இன்பத்தை நுகர்வதில்லை இயற்கையை இயக்குவிக்கும் இறைவன் திருவருளைக் காட்சியறிவாலும் பெற வியலும்.

புறப்பட்ட மறுநாட் காலை தென்காசி என்னுமூர் சென் றடைந்தோம் வடஇந்தியாவில் ஓர் காசியுண்டெனினும், தென் னிந்தியாவிலும் விசுவநாதராலயம் உள்ளதோர் காசியுளதென வறிய மகிழ்வுண்டாயிற்று. இங்குள்ள விசுவநாதராலயம் எக் காரணத்தாலோ கோபுரத்தின் நடுப்பகுதி சில்லாண்டுகட்கு முன்னர் இடிபட்டு பழுதுபார்க்கப்படாத அதே நிலையில் காட்சி யளித்தது.

ஆங்கிருந்து மூன்றரைக்கல் தொலைவிலுள்ள குற்றாலத் திற்குச் சிலர் நடந்தும், சிலர் மோட்டாரிலுமாகப் போனோம். மலையுச்சியினின்றும் வீழ்ந்து மக்களைப் பல பிணியினின்றும் காப்பாற்றப் பயன்படுகின்ற நீர்வீழ்ச்சிகளைக் கண்டோம்.

மேற்குத்தொடர் மலையின் தென்பகுதியிலுள்ள இத்தலம் இந் நீரருவிகளால் சிறப்படைந்துள்ளது.

இம்மலையில் ஓர் சிற்ருறு திரிகூடமென்னுமிடத்திலுற் பத்தியாகி முதன் முதலில் சுமார் 100 அடி உயரத்தினின்று விழு கிறது. இதைத் தேனருவி யென்பர். இதனண்மையில் புலி யருவி யென்ஞென்றுண்டு. இதன் கீழே சுமார் ஒன்றரைக்கல் தொலைவில் சண்பகாதேவியருவி 288 அடி உயரத்தினின்றும் விழுகிறது. மேற்கில் சுமார் இரண்டுகல் தொலைவில் ஐந்து பிரிவுகளாக விழுமிடம் ஐந்தருவியெனப்படும். ஐந்தருவிக்கு அண்மையில் சிற்றருவி யொன்றுண்டு. கிழக்கே முக்கால்மைல் தொலைவில் பாகபத சாத்தா என்ற ஒரு அருவியுண்டு.

இனி, குற்றுலத்தின் தட்ப வெப்பநிலையும், நீரருவிகளும் உடல் வளர்ச்சிக்கும், அறிவு வளர்ச்சிக்கும் ஏற்றவை. திருக் குற்றுல நாதரின் ஆலயம், இந்துக்களுக்குச் சிறந்த தலமாக ஈண்டு விளங்குகிறது. நீரருவிகளில் விழுகின்ற நீர், பல மூலிகைகளில் படிந்து வருவதால் உடலுக்கு நலன் தருகின்றது. மேலும் இந்நீரில் பிராணவாயு அதிகம் அடங்கிய ஓர்வித குளிர் மணவாயு (Ozone) ஏராளமாயுண்டு. மாணவர்களும், ஆசிரி யர்களும் இன்புறக் குளித்து மகிழ்ந்தோம்.

மறுநாட் காலை தென்காசி திரும்பி சிற்றுண்டிக்குப் பின் புகைவண்டியிலமர்ந்து திருவனந்தபுரம் புறப்பட்டோம். தென் காசியிலிருந்து கொல்லம்சேர 67கல் தொலைவு கடக்கவேண்டும். இதன் ரயில்பாதை மேற்குத்தொடர் மலையின்மீது அமைந் துள்ளது. செங்கோட்டை தாண்டியபின்னர், மலையானது ஐந்திடங்களில் குடையப்பட்டு, குகைகளினூடே புகைவண்டி புகுந்தோடுகிறது. இவ்வைந்து குகைகளினுள்ளும் 'ஆரியன் காவு' என்னுமிடத்திலுள்ள குகையே நீண்டதொன்ருகும். வானளாவி யோங்கிநிற்கும் தேக்கு, வேங்கை, சந்தனம், கோங்கு, பலா முதலிய காட்டுமரங்களின் செறிவும், ஊடூடே வாழை, தேயிலை, நெற்பயிர், கிழங்கு ஆகிய பயிர்வகைகள் நிறைவும் முறையே இயற்கையையும் செயற்கையையும் காட் டியதுடன் கண்கொள்ளாக்காட்சியாக மிளிர்கின்றன. இயற்கை வனப்பை யுணருங்கால் உண்டாகுமின்பந்தான் என்னே!

கொல்லம்வரை குடதிசை நோக்கிச்சென்ற புகைவண்டி தெற்கே திரும்பியது. மாலை ஐந்துமணிக்குத் திருவனந்தபுரம் கொண்டு சேர்த்தது. சுதேச மன்னர் ஆட்சியாம் திருவிதாங்கூரின் தலைநகர், சேரநாட்டின் வழிவந்தோர் வதியுமிடம் ஆகிய அப்பட்டினம் கண்டபோது மகிழ்வுபொங்கியது. அறம்வளரும் சேரநாடு என்ற நினைவு வந்தது. ஆங்கு அரபிக் கடலருகே செம்படவர் மீன்பிடிக்கும் காட்சி, ரப்பர் மரங்களினின்றும் பாலெடுத்து ரப்பரினால் பலவிதக் கருவிகளாக்கும் தொழிற்சாலை, அனந்த பத்மநாபராலயம், மிருகக் காட்சிசாலை, உயிரற்ற மிருகங்களினுடல்கள், கலை நுணுக்க வேலைப்பாடுகளடங்கிய காட்சிசாலை (Museum), திருவனந்தபுரத்திற்கே சிறப்புத்தரும் தந்தத் தொழிற்சாலை, மன்னர் வசிக்கும் அழகிய மாளிகை, விண்மீன்கள் கணிக்கப்பெறும் நட்சத்திரசாலை, மாதா கோவிலொன்றின்மீதுநின்று மக்களை வாழ்த்துகின்ற ஏசுநாதர் உருவச் சிலை, வானவூர்திகள் வந்திறங்கும் நிலையம் ஆகியவைகளே காணத்தகு காட்சிகள்.

இவற்றிற் கெல்லாம் மேலாக, நாடோறும் காலைசரியாக 9 மணிக்கு கௌடியார் அரண்மனையினின்றும் கிளம்பி அனந்த பத்மநாபராலயம் சென்று இறைவணக்கம் செலுத்தித் திரும்புகின்ற மன்னனை மக்கள் கண் குளிரக்கண்டு வணங்கும் நிலையும், மன்னனும் தெருவழியே பொறிவண்டியிவர்ந்து கை கூப்பிய வண்ணம் போகும் நிலையும் எவர் உள்ளத்தையும் ஈர்க்கின்றன. ஓடுகின்ற வாகனங்களனைத்தும் ஆங்காங்கு நிறுத்தப்பட்டு மக்கள், 'ராஜதரிசனம்' செய்யும் மாண்பை உன்னுங்கால் சேரநாட்டுப் பெருமை இன்றும் மிளிர்வதைக் காணமுடிகிறது. தமிழ் நாட்டு மன்னர்கட்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பு தான் சொல்லத்தரமாமோ!

" குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு"

என்பது வள்ளுவர் வாக்கன்றோ?

இங்கு பேசும் மொழி மலையாளம். அம்மொழியிடத்துத் தமிழ்ச் சொற்கள் அளவில்லாது காணப்படுகின்றன. தமிழன்னையைப் பார்த்து உன்னுதரத்துதித் தெழுந்த மலையாளம்,

எனப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை இயம்பியது மெய்யன்றோ? ஆடவரும், பெண்டிரும் தூய வெள்ளாடையையே பெரும் பாலும் உடுத்தியிருத்தல் அன்னாரின் உள்ளத் தூய்மையை விளக்குகிறது.

உலர்ந்தமீன், தந்தவேலைகள், தேங்காயெண்ணெய், மரக் கட்டைகள், ரப்பர்ப்பொருட்கள் ஆகியவை இங்கிருந்து ஏற்று மதியாகின்றன. இவற்றால், இந் நாட்டின் இயற்கை வளத்தை எவரும் எளிதில் அறியலாம். மூன்று நாட்கள் அங்கு தங்கிய பின் இந்தியாவின் தென்கோடிக்குக் கிளம்பினோம். திருவனந்த புரத்திலிருந்து கன்னியாகுமரிக்கு 56 கல் தொலைவுண்டு. முழு வதும் சிமெண்டினால் (Cement) அமைக்கப் பெற்ற சிறந்த தோர் பாதையுண்டு. இரண்டரைமணி நேரத்தில் எங்கள் மோட்டார் வண்டி, இப்பாதை வழிக்கொண்டு சென்ற தெனி னும் சற்றும் களைப்பேயில்லை. அரபிக்கடல், வங்காளவிரிகுடா, இந்துமகா சமுத்திரம் ஆகிய முக்கடல்கள் ஒன்றுமிடம் காண உள்ளம் பூரித்தது. காலையில் கதிரவன் கடலினின்று எழுவதும், மாலையில் கடலினுள்ளே மறைவதும் அங்குக் கண்டபோது, கதிரவனும் நாடோறும் கன்னியாகுமரியைக் காணக் குளித்து முழுகுகின்றானென முடிவு செய்தோம்.

ஆங்கு, பரதவர்கள் காலையும் மாலையும் படகிலேறிப் பாய் மரத்தை விரித்துப் பறக்கவிட்டு மீன்பிடிக்கப் பாய்ந்தோடும் பெருமுயற்சியைக் கண்ணுற்றபோது மக்களது உழைப்பின் உயர்வை உணர்ந்தோம்; "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்ற ஆன்றோர் வாக்கை உழைக்கின்ற கூட்டம் உணர்ந்து கொண்டு ஆற்றுகின்ற தொண்டே யெனத்தெளிந்தோம். எல் லோரும் இன்புற்றிருக்கும் நிலை என்று எய்துமோ எனவும் எண்ணியது எம்முள்ளம். குமரிக் கோவில் இங்குண்டு. அக் கோயிலுட் சென்று வழிபாடு செய்த பின்னர் வீடுதிரும்பினோம். நம் நாட்டில் இத்தகைய சிறப்புக்கள் எத்தனையோ! எல்லா வற்றையும் கண்டு இன்புறு நாள் எந்நாளோ!

---

# 15. நமது குடியரசு

வித்துவான், வி. சிவக்கொழுந்து

உலகில் மனிதன், தன் தொழிலுக்கு என்று பிறர் உழைப்பை நாடினானோ அன்றுமுதல் சேர்ந்து வாழும் கொள்கையும், சமுதாய மனப்பான்மையும் அரும்பலாயின. சுற்றுப்புறத்தைக் கண்டு உண்டான அச்சமும் அவநம்பிக்கையும், தற்காப்பு எண்ணமும் இச் சமுதாய மனப்பான்மையை உறுதிப் படுத்தின. மனித அறிவும், நாகரீகமும், வாழ்க்கை வசதிகளும் பெருகப் பெருக சமுதாய வாழ்வும் விரிந்து ஒரு சமுதாயத்திலேயே பண்டங்களை ஆக்குவோரும், பங்கிடு செய்வோரும், பாதுகாவல் புரிபவருமாக மக்கள் வகைப்பட்டனர். இயற்கையில் ஏற்பட்ட இந்த ஏற்பாடுகளைப் போராட்ட மனப்பான்மையும், வெற்றி தோல்விகளும் மாற்றலாயின; சமூக வாழ்வில் சிக்கலேற்பட்டது; அமைதி குலைந்தது. அமைதி ஏற்படவும், மக்களை நடத்திச் செல்லவும் தலைவன் தோன்றினான். சட்ட திட்டங்களும், அதிகாரங்களும் தோன்றின. அரசனும், ஆலோசனைக்கு அமைச்சர்களும், அமைதியைக் காத்துப் பகையை வெல்லப் படைகளும் உண்டாயின. அக்காலம் ஜனநாயகம், குடியரசு என்ற சொற்களும் உணர்வும் தோன்றாத காலம்; ஆள்பவன், அடிமை என்ற கருத்து எழாத காலம்.

நாளடைவில் ஆட்சிப் பொறுப்பில் பரம்பரை உரிமை ஏற்பட்டது. திறமையில்லாதவர்கள் வாரிசு உரிமையால் ஆளவந்த காலத்தில் ஆட்சிகள் மாறலாயின. வலிய சமூகத் தலைவன் அல்லது அரசன் எளிய—திறமையற்ற கூட்டத்தை யடக்கினான். ஆளவந்தவர்களிடம் குடிமக்கள் அடிமைகள் என்ற எண்ணம் ஏற்பட்டது. அதிகாரங்களும், அடக்குமுறைகளும் மிகுதிப்பட்டன. மக்கள் வாழ்வு துன்பமயமாகத் தொடங்கியது.

காலம் செல்லச் செல்ல ஆளப்படும் குடிமக்களிடம் உணர்வு தோன்றலாயிற்று. 'துன்பத்தினின்று நாம் விடுதலை பெறவேண்டும்; இன்ப வாழ்வு எய்த வேண்டும்' என்னும் எண்ணம் வலுவடைந்தது. 'சுதந்திரம்' என்ற குரல் எழுந்

தது. ஆள்வோனுக்கும் ஆளப்படுவோருக்கும் போராட்டம் தொடங்கிற்று. தன் மனப்படிச் செய்யும் அதிகாரம் ஒழியவும் துன்பம் தொலைபவும் அறிஞர்கள் சிந்திக்கலாயினர்; விடுதலைக் குப் போராடினர். 'தனிமனிதனிடமோ, சிறு பான்மை யோரிடமோ அதிகாரமும் ஆட்சியும் இருத்தலாகாது; பொது மக்கள் கைக்கு ஆட்சிப் பொறுப்பும், அதிகாரமும் மாறவேண் டும்' என்பதுதான் இப்போராட்டத்தின் குறிக்கோளாகும். இந்த இலட்சியத்தை நோக்கி உந்தப்பட்ட மக்கள் வீறுகொண்டு எழுந்தனர். சுதந்திரம், சகோதரத்துவம், சமத்துவம் என்று முழங்கிப் புரட்சி செய்தனர். முடியாட்சிக்கு முடிவு கட்டினர். மக்களாட்சி என்னும் ஜனநாயகம் தலையெடுக்கலாயிற்று. **ஜனநாயகம் என்பது மக்களால் மக்கள் நன்மைக்காக நடத்தப்படும் மக்களுடைய ஆட்சியாகும்.**

சென்ற இரு நூற்றாண்டுகளாக உலகெங்கும் இப்போராட் டம் நடந்தது; சில நாடுகள் இதில் வெற்றி பெற்றிருக்கின்றன. இன்று பல நாடுகளில் மக்களாட்சி நடைபெறுகின்றதாயினும் அவை ஒவ்வொன்றும் நடைமுறையில் வேறுபட்டுள்ளன. அமெரிக்காவில் பொருளாதாரத் துறையில் மக்களுக்குள் ஏற்றத் தாழ்வுள்ள ஒருவகை ஜனநாயகம் நடைபெறுகின்றது. அங்கு மக்களால் ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப் பெறுகிறார். இங்கி லாந்தில் முடியாட்சியைப் பெயரளவில் கொண்ட பாரானு மன்றம் மக்களிடமிருந்து எல்லா அதிகாரத்தையும் பெற்று ஆட்சி புரிகிறது. ரஷியாவிலோ பொருளாதார ஏற்றத் தாழ் வில்லாத பொதுவுடைமை அரசாங்கம் நடைபெறுகின்றது. பிரான்சு தேசம் குடியரசாயினும் மக்களின் பிரதிநிதிகள் எனப்படுவோரின் கட்சிப்பூசலால் நிலையான மந்திரி சபை ஏற் படுத்த முடியவில்லை.

நம் தாய் நாடாகிய இந்தியா, சென்ற இரண்டு நூற்றாண்டு களாக ஆங்கில ஆட்சியில் அடிமையாக விருந்தது. அரை நூற் றாண்டாக நமது தலைவர்களென மதிக்கத்தக்க தாதாபாய், திலகர், சுரேந்திரர், கோகலே முதலியவர்களும், தேசத் தந்தை யாய்த் திகழ்ந்த மகாத்மா காந்தியடிகளும் நடத்திய சுதந்திரப் போராட்டம் அடிமைத் தளையை அறுத்தது. தொண்டர்களின் சலியா உழைப்பும் தியாகமும் நாட்டிற்கு விடுதலையை வழங்

னை. உலகமே கண்டு வியக்கும் வண்ணம் காந்தி மகான் உண்மை, அஹிம்சை என்ற அறக்கருவிகளைக்கொண்டு வெற்றி கண்டார். உலகுக்கொரு புதுமையான வழியில் சென்று நம் சுதந்திர மாளிகையை நாம் அமைத்திருக்கிறோம். எண்ணற்ற தேச பக்தர்கள் தங்கள் ஆவியைக் கொடுத்து சுதந்திரப் பயிரை நட்டார்கள். எத்தனையோ வீரர்கள் தங்கள் கண்ணீரால் இதனைக் காத்தார்கள். படைபலத்தினாலும் எதிர்க்க முடியாத ஒரு பெரிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துக் குருதி சிந்தாமல் அமைதிப் போர்நடத்தி நாம் இனிய சுதந்திரத்தைக் கைப்பற்றி இருக்கிறோம். இவ்வுரிமையை நமக்கு வழங்கிய தலைவர்களுக்கும் தொண்டர்களுக்கும் என்றும் மறவாது நாம் நன்றிசெலுத்திக் கைகூப்பக் கடமைப் பட்டுள்ளோம்.

நமது பிறப்புரிமையான சுதந்திரத்தை உருவாக்கின சிற்பிகளாகிய ஜவஹர்லால் நேரு, ராஜாஜி, ஆஸாத், ராஜன்பாபு முதலிய தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். 1947-ம் ஆண்டு ஆகஸ்டு 15-ம் நாள் நம் நாடு பிறர் பிடியிலிருந்து விடுபட்டது. இந்தியாவின் வரலாற்றில் ஒரு புதுமை நிகழ்ந்த அச்சுதந்திரத் திருநாளை நம்மவர் அனைவரும் களிப்புடன் கொண்டாடினர்.

வெள்ளையர்கள் இந்நாட்டைவிட்டு வெளியேறினார்கள். அவர்களது சட்டங்களும் அவர்களுடன் மறைவது இயல்பு தானே! மக்கள் நன்மைக்கான அரசியல் அமைப்பை நிறுவ வேண்டுமன்றோ? ஆகவே அரசியல் நிர்ணய சபை ஒன்று அமைக்கப்பட்டது. சுதந்திர இந்தியாவின் மக்களது நம்பிக்கையைப் பெற்ற உறுப்பினர்கள் கூடினார்கள். அரசியல் அறிவும், சட்டப் பயிற்சியும் உடைய அவ்வறிஞர்கள் பல திங்கள் ஆராய்ந்து இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை வகுத்தார்கள். அத்திட்டம், 1949-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 26-ம் நாள் அரசியல் நிர்ணய சபைத் தலைவர் கையொப்பத்துடன் உறுதி செய்யப்பெற்றது.

1950-ம் ஆண்டு ஜனவரி 26-ம் நாள் இந்திய அரசியல் சட்டத்தின்படி சுதந்திரம் பெற்ற இந்தியா தன்னைக் குடியரசு நாடாகச் செய்துகொண்டது. அந்நாளே இந்நாடு சுதந்திர

இந்தியக் குடியரசாக மலர்ந்த பொன்னுளாகும். அன்று முதல் இந்திய மக்கள் எல்லோரும் சமூக, பொருளாதார, அரசியலில் நீதி பெறுவோராயினர்; சிந்தனை, பேச்சு, மதவழிபாடுகள் இவற்றில் சுதந்திரம் அடைந்தோராயினர்; எல்லாத் துறைகளிலும், எல்லா மக்களுக்கும், தகுதிக்கும், திறமைக்கும் ஏற்றபடி சமத்துவமான முன்னேற்றம் கிடைக்கும் என்றும், மக்கள் கௌரவமும், நாட்டின் கூட்டுறவும் உறுதிப்படுத்தப்படும் என்றும் ஆகிய கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு அரசியல் இயங்கத் தொடங்கிவிட்டது. "நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற பாரதியின் வாக்கு மெய்யாகிவிட்டது.

இந்தியக் குடியரசின் முதல் தலைவராக—ஜனாதிபதியாக பாபுராஜேந்திர பிரஸாத் பதவி ஏற்றார். குடியரசு சர்க்காரில் பண்டித ஜவஹர்லால் நேருவை முதலமைச்சராகக் கொண்ட மந்திரிசபை நாட்டின் நிர்வாகங்களைக் கவனிக்கலாயிற்று. நாடு முழுமைக்கும் ஆன சட்ட திட்டங்களைப் பாராளுமன்றம் அடிக்கடிகூடி வகுக்கின்றது. நாட்டின் பாதுகாப்பு, ரயில், விமானப் போக்குவரத்து வசதிகள், தபால், தந்தி, வெளிநாட்டு உறவு, நாணயச் செலாவணி முதலிய முக்கியப் பொறுப்புகள் மத்திய சர்க்காரிடம் இருக்கின்றன. மக்களின் தினசரி வாழ்வில் தொடர்புடைய கல்வி, கைத்தொழில், விவசாயம், நலத்துறை, குற்றத்தடுப்புப் போன்ற பொறுப்புகள் மாகாண ஆட்சியின் கீழ் உள்ளன.

இந்தியா ஓர் பரந்த நாடு. ஆயினும் ஆட்சி நலங்கருதி இந் நாடு, ஒன்பது மாகாணங்களும், நூற்றுக் கணக்கான பல சிறு சுதேச சமஸ்தானங்களை இணைத்துக் கொண்ட ஒன்பது பெரிய சமஸ்தானங்களும், மத்திய ஆட்சியின் நேர் பொறுப்பிலுள்ள டில்லி, போபால், குடகு, மணிப்பூர் முதலிய இடங்களும் ஆக மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மாகாணங்களுக்குக் கவர்னர்களும், சமஸ்தானங்களுக்கு இராஜப் பிரமுகர்களும் தலைவர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். சட்டசபைக்குப் பொறுப்புள்ள அமைச்சரவைகள் ஏற்பட்டிருக்கின்றன.

ஜனநாயக ஆட்சிக்கு அதன் ஆணிவேர் போன்று திகழ்வது, வயது வந்தவர்களின் வாக்குரிமையேயாகும். இவ்வுரிமையாலே தான் மக்களிடமிருந்து அரசியல் தலைவர்களுக்கு அதி

காரம் வருகிறது. இந்தியக் குடியரசில் இருபத்தொரு வயதுடையவரான ஆண் பெண் இருபாலாருக்கும் வாக்குரிமையுண்டு என அதன் அரசியல் சட்டம் கூறுகிறது. அவர்களுடைய வாக்குரிமையைப் பெற்ற நம்பிக்கையைக் கொண்ட தலைவரே நாட்டின் தலைவராவார்; பிரதிநிதிகளே பாராளுமன்றத்தின் மாகாணச் சட்டசபைகளின் உறுப்பினர்களும், அமைச்சர்களுமாவார். அண்மையில் நடைபெறப்போகும் பொதுத்தேர்தலில் சுமார் பதினைந்து கோடி வயது வந்த வாக்காளரான ஆடவரும், பெண்டிரும் தங்களுக்குள்ள வாக்குரிமையைப் பயன்படுத்தப் போகிறார்கள். உலகிலேயே ஜனநாயகத் தேர்தலில் இத்துணைப் பெருந்தொகையினர் கலந்து கொள்வது இதுவே முதல் தடவையாகும். ஒப்பிலாத நமது பாரத சமுதாயத்தின் இவ்வேற்பாடு உலகிற்கொரு புதுமைதான்.

நாம் சுதந்திரம் பெற்றுவிட்டோம்; நம்நாடு குடியரசாகத் திகழ்கிறது; அறவாழியை நடுவிலே கொண்ட நமது மூவ்நிறக் கொடி வானளாவப் பறக்கின்றது. இவையெல்லாம் நம் சுதந்திரத்தின் அடையாளங்கள்; ஆயினும், நாம் செய்யவேண்டிய கடமைகள் எத்துணையோ உள்ளன. கடமைகளைச் செய்த பின்னரே நாம் இந்நாட்டு மக்கள் என்ற உரிமையைக் கொண்டாட முடியும். மக்களது அறியாமை, பசி, பிணி, முதலியன நீங்கி வாழ்க்கை நிலை உயரவேண்டும்; கல்வியும், கைத்தொழிலும் பெருகவேண்டும்; பயிர்த்தொழிலும், வாணிபமும் வளரவேண்டும்.

நாட்டில் உணவுப்பஞ்சம் தலைவிரித்தாடுகிறது. உயிருக்கு ஆதரவான உணவுப்பொருளைப் பெருவாரியாக உற்பத்தி செய்யவேண்டும். அதற்கான நீர்ப்பாசன வசதிகள் பெருகவேண்டும். மின்சாரம், இயற்கை-செயற்கை உரங்கள், நவீன யந்திரங்கள், உழவுக் கருவிகள் இவற்றைப் பயன் படுத்தவேண்டும். பயிர்த்தொழிலாளர் கடமை புணர்ந்து மேழிச்செல்வத்தைக் கோழைபடாது வளர்க்கவேண்டும்.

வாணிபம் நாட்டின் உயிர்நாடி. வாணிபத்திற் சிறந்த நாடே செல்வம் கொழிக்கும் நாடாக உலகில் திகழ்கிறது. எனவே, வெளிநாட்டு, உள்நாட்டு வாணிபப் பண்டங்களை மிகுதிபாகப்

பெருக்கி நம் நாட்டுத் தேவையை நிறைவேற்றுவோமாக. நம் நாட்டுச் சணல், துணி, மிளகு, ஏலம், நிலக்கரி முதலியவற்றிற்கு பிறநாடுகளில் நல்ல மதிப்பும், தேவையும் ஏற்பட்டிருக்கின்றன வன்றோ!

மற்ற நாடுகளைப்போல் நம் நாட்டிலும் தொழிற்சாலைகளை மிகுதிப்படுத்த வேண்டும். கைத்தொழிற்சாலைகளும், எந்திர சாலைகளும் இன்றி, இன்றைய தேவைகளை நாம் நிறைவேற்றிக் கொள்ள இயலாது என்பது, அனைவரும் அறிந்த உண்மை. தொழில் வளம் நாட்டில் பெருகுவதால் மக்களது வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக்கலாம். பொருளாதாரத் துறையில் உள்ள ஏற்றத்தாழ்வுகள் நீங்கி எல்லோரும் ஒன்றெனும் எண்ணம் வளரவேண்டுமானால், நாட்டுத் தொழில்களை எல்லாம் கூட்டுறவு முறையில் வளர்த்தல் நலம். அதுவே சிறந்தவழி.

இவற்றுக்கெல்லாம் மேலாக நாம் மக்கள் பண்பை வளர்க்க முயலவேண்டும். பண்பை வளர்ப்பதன் வாயிலாகவே கலங்கா நாட்டுப் பற்று, அசையாத ஆண்மை, பிறர்நலம் பேணல், குற்றம் பொறுத்தல், கூட்டுறவு மனப்பான்மை, கடமையுணர்ச்சி ஆகிய உயர்ந்த நலங்கள் வாய்க்கின்றன. அக நாகரீகமெனும் இம் மக்கட் டண்புகளை உடையவனைத்தான் நல்ல குடிமையாளன் (A good citizen) என்று கூறுதல் கூடும். ஆதலால் மக்களை நல்ல குடிகளாகப் பயிற்றுவிக்கும் கல்விக் கூடங்களை நாடெங்கும் ஏற்படுத்தி நலம் பெற முயல்வோமாக. அரசாங்கத்துடன் ஒத்துழைத்தும், சட்ட திட்டங்களுக்குக் கீழ்ப்படிந்தும் அமைதியைப் பாதுகாத்தும் நம்நாட்டை உலகப் பேரரசுகளுள் ஒன்றாகத் திகழவைப்போமாக. உலக சமுதாயத்தில் நாமும் ஓர் உறுப்பினர், நம்நாடும் ஓர் அங்கமாகும், என்ற பரந்த நோக்கத்துடன் உலகில் அன்பும், அறிவும் அறமும் தழைக்க ஒற்றுமையுடன் பாடுபடுவோமாக.

"வாழிய பாரத மணித்திரு நாடு"

---

# 16. வாசவதத்தை—(நாடகம்)

வித்துவான், கோ. அரங்கசாமி ஐயங்கார்

## காட்சி 1.

**இடம்** :—அரசன் அவை.

**காலம்** :—காலை.

**பாத்திரங்கள்** :—பிரச்சோதனன், உதயணன், சாலங்காயன், சிவேதன், சேனாபதிகள் முதலியோர்.

[அவந்தி நாட்டரசன் பிரச்சோதனன், தன் பகைவனான வத்தவ நாட்டரசன் உதயணனைப் பிடித்துச் சிறையிலிட்டான்; உதயணன் மந்திரி யூகி என்பவன், பிரச்சோதனன் பட்டத்து யானை நளகிரிக்கு ஒருவகை மருந்தால் மதவெறி யூட்டினான்; அது உஞ்சை நகரை அழிக்கின்றது.]

**பிரச்சோதனன்** :—அமைச்ச! என்ன துன்பம்! என்ன பயம்! நம்மாட்சியில் இந்த நகரம் தற்பொழுது இந்த நளகிரி யால் அழிவது போல் எப்பொழுதும் நேர்ந்தது இல்லையே! ஆ! ஆ!! மக்கள் படும்பாடு என்னே! விலையுயர்ந்த கட்டடங்கள் படும்பாடு என்னே! ஒவ்வொருகணமும் பெரிய ஆபத்துகள் நேருகின்றனவே! இப்பொழுது யான்படும் பாடு எத்தகையது என்றால், நடுக்கடலில் கப்பல் கவிழ மாலுமி கலங்குவது போல் நான் கலங்குகின்றேன்.

மந்திரி! என்ன செய்வேன்? இத்துன்பத்தை நீக்குவதற்கு உபாயம் யாது? விரைவில் கூறுக.

**சாலங்காயன்** :—மன்னர் பிரானே! மந்திரியாகிய யான் கூறும் உபாயத்தைத் தாங்கள் தவறாமல் கேட்க வேண்டும். இந்த யானையின் மதவெறியை அடக்குந் திறமை சிறையிலிருக்கும் உதயணனிடம் உண்டு. அவனை யாழுடன் அனுப்பினால் அவன் சென்று யானையை யடக்கிவிடுவான்; இதுதான் தற்பொழுது செய்யத் தக்கது.

**பிரச்சோதனன் :**—மந்திரி! அவ்வாறாயின் நீயே சென்று இச் செய்தியை உதயணனிடம் தெரிவித்து அவனை இங்கு என்முன்னர் அழைத்து வருக. விரைவிற் செல்க.

**சாலங்காயன் :**—அரசே! உதயணனோ சிறந்த வீரன். யான் அவனை வெல்லமாட்டாமல் வஞ்சனையால் பிடித்து வந்தேன். ஆதலின், அவனிடம் நேரில் செல்வதற்கு அச்சமும் நாணமுமுடையேன். அறநூல்படி அமைச்சனைக் கொல்லுதல் ஆண்மையன்று என்று என்னைத் தன்வாளால் வெட்டாமல், என் முன்னில்லாதே செல், என்று யான் புல்லைக் கவ்வப்பிடர் பிடித்து உந்திய உதயணன் பிடியை நினைக்க அவன் முன் செல்லவும் என் நெஞ்சம் அஞ்சுகின்றது.

**பிரச்சோதனன் :**—சிவேத! நீ சென்று இன்மொழி இயம்பி எவ்வாறாயினும் உன்திறமையால் உதயணனை விரைவில் இங்கு அழைத்து வருவாய்.

(சிவேதன் செல்லுதல்)

[சேனாபதி விரைந்து ஓடிவருகிறான்]

**சேனாபதி :**—அரசே! நளகிரியையடக்கும் பொருட்டுத் தாங்கள் என்னுடன் ஐந்நூறு வீரர்களை அனுப்பினீர்களே, அவர்களுள் மிகுந்தவன் யான் ஒருவனே!

**பிரச்சோதனன் :**—என்ன! ஐந்நூறு வீரர்களுமா, இறந்து விட்டனர்?

**சேனாபதி :**—அரசே! அவர்கள் தாமே இறந்து போகவில்லை; நளகிரி, தன்கால்களாலும், துதிக்கையாலும் இரண்டு தந்தங்களாலும் அவர்களை ஒரு நொடிப்பொழுதில் கொன்று விட்டது.

**ஒரு வீரன் :**—(ஓடி வந்து) அரசே! இந்த நளகிரி என்னும் காலன் இந்நகரத்தின் மதில் புறத்திலிருந்த 650 சேரிகளையும், 2800 பாடிகளையும், பல நந்தவனங்களையும் பாழாக்கி விட்டது.

**மற்றொரு வீரன் :**—மக்களைக் காக்கும் மன்னரே! அந்த யானை, எவ்வளவு மக்களைத் தூக்கி எடுத்துச் சுவரிலும், மதிலிலும்,

தரையிலும், பாறையிலும் அறைந்து அறைந்து கொன்று போடுகின்றது; தாங்கள் சற்று வந்து உங்கள் கண்ணாலே பாருங்கள்; நீங்களேவந்து அந்த யானையை உங்கள் ஆற்றலாலடக்குங்கள். எங்கள் முறையீடு இது!

(சிவேதன் உதயணனை அழைத்து வருதல்)

(பிரச்சோதனன், உதயணனுக்கு ஆசனமளித்தல்)

**பிரச்சோதனன் :**—குருகுலக் கொற்றவ! உன்னிடம் யான் செய்த பிழையை யுளங்கொள்ளாது பொறுத்தருளல் வேண்டும். இப்பொழுது இந்நகருக்கு நளகிரியால் நேர்ந்துள்ள பெருந் துன்பத்தை நீக்கியருள யான் வேண்டுகின்றேன். இவ்வாறு அருள்புரிந்தால் மக்களும், யானும் தங்களை வாயார வாழ்த்துவோம்; இது பல உயிர்கட்கும் பேருதவியாக இருக்கும்; இவ் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டுகிறேன்.

காட்சி 2

**இடம் :**—அரசன் தனிமாடம்

**காலம் :**—மாலை

**பாத்திரங்கள் :**—பிரச்சோதனன், சாலங்காயன், சிவேதன், ஒற்றன் முதலியோர்.

**ஒற்றன் :**—(ஓடிவந்து) அரசே! உதயணன் தன் யாழிசையா நளகிரியை யடக்கி விட்டான்; நளகிரி மதவெறிநீங்கி உத ணன் சொன்ன வேலையை அப்படியே செய்கின்றது; வந் பாருங்கள்!

**பிரச்சோதனன் :**—என்ன? அப்படியா? என்ன ஆச்சரியம்! அப்படியாயின், சிவேத! நீ சென்று, இந்த சன்மானங்களைக் கொடுத்து, பெருஞ் சிறப்புடன் உதயணனை என் முன் அழைத்து வா!

(சிவேதன் செல்லுதல்)

**பிரச்சோதனன் :**—(மற்ற மந்திரிகளை நோக்கி) மந்திரிகளே! என்ன ஆற்றல்! என்ன யாழ்த்திறம்! என்ன இசைக்கலையோ? யாமறியோம்! கணக்கற்ற பெருவீரர்கட்கு அடங்காத யானை உதயணன் யாழிசையைச் செவி மடுத்தவுடன்,

"ஆணையாசாற் கடியுறை செய்யுமாணி" போல் கீழ்ப் படிந்து நடந்தது என்று தெரிகின்றதே! இச்செய்தி கேட்ட நமக்கு எவ்வளவோ பெருவியப்பாக இருக்கின்றதே! இன்னும்,

"பிரிந்த நற்புதல்வர் வந்து பெற்றதந் தந்தை பாதம்
பரிந்த காதலாலே தாம்பணிந்திடுவதே போல்
இருந்தநற் பணிந்த யானை எழின்மருப் படிவைத் தேறிப்
பெருந்தகை ஏவல் கூறிப் பெருங்கையாற் ரேட்டி
கொண்டான்"

என்றபடி மிகவும் அடங்கி அவனருகில் வந்து அன்புடன் வணங்கி ஏவல் கேட்கின்றது, எவ்வளவு வியக்கத் தக்கது எண்ணிப் பாருங்கள்! இவனே வீரன்! இவனே இசைக் கலைஞர்கட்குத் தலைவன்!!

**சாலங்காயன்** :—அரசே! யான் முன்பே உதயணன் யாழிசைக்கு நளகிரி அடங்குமென்று கூறினேன் அன்றோ? இந்தமத வெறி கொண்ட யானை யடங்கியது கேட்டு யானும், பிற மந்திரிகளும், தங்கள் தேவியும், புதல்வி வாசவதத்தையும், இந்நகர மாந்தரனைவரும் அளவிலா மகிழ்ச்சி யடைந்தோம்.

**சிவேதன்** :—(உதயணனுடன் வந்து) அரசே! வணக்கம்! இதோ இசை யாசிரியர் உதயண வேந்தர் வந்துள்ளார்.

**பிரச்சோதனன்** :—(எழுந்து வணங்கி) யாழிசைப் புலவ!யாழிசையில் வல்லவர் இவ்வுலகில் நின்னையன்றி வேறு யாருளர்? தங்கட்கென்று ஒரு தனி யரண்மனை தருவேன்; அதன் நாற்புறங்களும் நந்தவனங்களும் வாவிகளுமிருக்கின்றன. அவ்வரண்மனையில் இருப்பிடமும், ஆசனங்களும், படுக்கைகளும் அமைத்துத் தரச் சொல்லுகின்றேன். என் புதல்வர் மூவருக்கும் வில் வித்தை முதலியனவும், என் புதல்வி வாசவதத்தைக்கு யாழ் வித்தையும் கற்றுக் கொடுப்பீராக.

[உதயணன் அவ்வாறே வாசவதத்தைக்கு ஆசிரியனாக இருந்து வந்தான்; பல நாள் கழிந்தன; அரசன் தன் பரிவாரங்களோடு நீர்விழா அயரப் புறநகர்க்குப் போய் அங்கு தங்குகிறான்; அப்பொழுது உஞ்சை நகரில் தீப்பிடித்து எரிகிறது]

காட்சி 3

இடம்:—பிரச்சோதனன் படமாடத்தின் முன்புறம்.

காலம்:—மாலை.

பாத்திரங்கள்:—பிரச்சோதனன், மந்திரிகள். வீரர்கள் முதலியோர்.

பிரச்சோதனன்:—மந்திரி! என்ன இது! ஒரு பொழுதும் காணுத வியப்பாக இருக்கின்றதே! நீருடைய கரியமேகமும் காற்றும் பலமாக வீசுகின்றன; முழக்கம் மிகவும் பெரிதாக முழங்குகின்றது; இஃதென்னமேகத்தின் ஒலியோ? பேரிகையின் ஒலியோ? (தலையைத் தூக்கிப் பார்த்து) ஓஓ! அதோ!! என்ன நகரத்தில் தோன்றுவது புகையா? அல்லது பனியின் படலமா? இல்லை;இல்லை; புகையேதான்; புகை தோன்றக் காரணமென்ன? யாது நேர்ந்ததோ? தெரியவில்லை; யாராவது பகைவர் செய்தவேலையாக இருக்கலாம்.

ஒரு வீரன்:—(ஓடிவந்து) அந்தோ! அந்தோ! அரசே! யாரோ பகைவன் நம் நகரில் பல இடங்களில் தீவைத்து விட்டான்; நகரமாந்தர் நடுங்குகின்றனர்.

பிரச்சோதனன்:—ஏ! வீரர்தலைவ! விரைந்து நம் சேனைகளுடன் சென்று உரிமை மகளிரையும், மகளையும் பாதுகாப்பாயாக

வீரர்தலைவன்:—வேந்தே! இதோ செல்கின்றேன்; தங்கள் கட்டளைப்படி ஒரு நொடிப் பொழுதில் நகருள் சென்று அவ் களைப் பாதுகாப்பேன்.

பிரச்சோதனன்:—(பல வீரர்களை நோக்கி) வீரர்களே! நீங்க விரைவிற் சென்று தன் மாணவியாகிய வாசவதத்தையை உதயணன் கையில் ஒப்படைத்தேன் என்று சொல்லி, இந்த ஆபத்திலிருந்து அவளைக் காத்தல் அவன் கடன் என்று யான் கூறியதாக உதயணனிடம் சொல்லுவீர்.

ஒரு வீரன்:—எங்கள் இறைவனே! தாங்கள் சொன்ன படி உதயண ராசனிடம் நாங்கள் போய்ச் சொல்லுகின்றோம்; உங்களிடம் எங்கள் அரசர் தன் மகளை ஒப்படைத்து விட்டார்; இனி அந்த அம்மாளைக்காப்பது உங்கள் கடன் என்று சொல்லி விடுகிறோம்; வாசவதத்தையைப் பற்றிய

கவலை உங்களுக்கு இனிவேண்டாம்; நாங்கள் அந்த ஐயாவையே பார்த்துக் கொள்ளச் சொல்கிறோம்.

(வீரர்கள் போகிறார்கள்)

**பிரச்சோதனன்** :—அமைச்சர்களே! இருபத்தோராம் நாளாகிய நாளையோடு நீர்விழா முடிவடைகிறது; நாளை வரையில் நாம் இங்கிருந்து விழாவை முடித்துக் கொண்டு செல்லலாம். இங்கு நம்மோடுள்ள நகரமாந்தர்க்குத் தீயைக் கண்டு பயந்தோட வேண்டாம் என்றும், நாளை நீர்விழா முடிந்ததும் நகர்க்குச் செல்லலாமென்றும், நகரக் காப்பாளர் நகரைக் காத்துக் கொள்வர் என்றும் யான் அறிவித்ததாக அறிவிப்பீர்கள்.

**மந்திரிகளுள் ஒருவர்** :—அரசே! கட்டளைப்படி நகரமாந்தர்களாகிய இங்குள்ளார்க்கு அறிவிக்கின்றோம்.

காட்சி 4

**இடம்** :—புறநகர்.

**காலம்** :—மாலை.

**பாத்திரங்கள்** :—உதயணன், வாசவதத்தை, காஞ்சனமாலை, [சா]ங்கியத்தாய், யூகி, வராகன், பத்திராதிபதி என்னும் யானை.

[பத்திராபதியின் மேல் உதயணன் வாசவதத்தை காஞ்சன[மாலை]யோடு வருதல்.]

**[சாங்கி]யத்தாய்** :—ஊர்க்கெழுந்தருளும் கோலம் போலும்!

**[உதய]ணன்** :—தாயே! ஊர்க்கெழுந்தருளும் கோலமும், யானை மீது ஊர்கோலமும் இரண்டுந்தான்.

**சாங்கியத்தாய்** :—வாசவதத்தா! இந்நிலையில் உன்னைப் பார்க்க எனக்கு விருப்பமுண்டு; ஆதலால் பார்க்க வந்தேன்; எவ்வாறாயினும், "கொண்டானிற் றுன்னியகேளிர் பிறரில்லை" என்பதை உள்ளத்திற் கொண்டு புத்திசாலியாய் சௌக்கியமாய் உதயணனோடு வாழ்ந்திரு.

**வாசவதத்தை**:— (பிரிய மனமில்லாதவளாய்த் திரும்பித் திரும்பிப் பார்த்து) அம்மா! யான் சென்று வருகின்றேன்; என் வணக்கம் தங்கட்கு உரித்தாகுக.

**உதயணன்** :—ஏ! பத்திராபதி! உங்கள் சாதியிடத்துள்ள அன்பால் யான் அடைந்த சிறைத் துன்பத்தை நளகிரி தீர்த்தளித்தது; இப்பொழுது எங்கள் துன்பத்தைத் தீர்த்தளிப்பது உன்னுடைய கடமையாம்; ஆதலின், நீவிரைந்து சென்று எங்களைப் பாதுகாப்பாயாக.

(வில்லைத்தாங்கி வராகன் ஓடிவருதல்)

**உதயணன்** :—ஏ! வராக! அந்தப்புரத்துக் காவலனாகிய உனக்கு ஒரு தீங்கும் வராமல் நான் பார்த்துக் கொள்வேன்; நீ அஞ்சாதே; இங்கு இதோ சூழ்ந்து நிற்பவர் கள்வராகவும் இருக்கக்கூடும்; ஆதலால், உன் கையிலுள்ள வில்லையும், அம்பையும் என்னிடம் கொடு; நீ பிடியின் பின்புறம் ஏறிக்கொள்; என்னுடன் நீயும் வருவாயாக.

(வராகன் வில்லையும் அம்பையும் தருதல்; பிடியின்மேல் ஏற முயற்சி எடுக்க, உதயணன் பிடியை விரைவாகச் செலுத்திவிடுதல்)

**வராகன்** :—அந்தோ! மோசம் போனேனே! இப்பிடிமீது வாசவதத்தையை ஏற்றி உதயணனுடன் கூட்டியனுப்பியவன் யானே ஆனேனே! இவன் தன்னாட்டை நோக்கிச் செல்கின்றனனே! என்னே என் மதியீனம்! கொடிய ஆணையைச் செலுத்தும் எம் கொற்றவன் திருமுன் யாது சொல்லிப் பிழைப்பேன்? இதைப் பிறவீரர் அறியின், ஒருவில் வீரனாகிய என்னை என்னென்று மதிப்பர்? இதன்மேலும் அடையத்தக்க நாணம் வேறுயாதுண்டு?

(வராகன் வெட்கமுடன் செல்லுத[ல்)]

**யூகி** :—(விரைந்துவந்து) அரசே! உன் திருவடி வாழ்க! நிகழ்[ந்த] சூழ்ச்சிகள் யாவும் தங்கள் திருவடி ஆணையால் அடியே[ன்] செய்தனவே. "பத்திராபதி! எம் தலைமகன் நும்மினத்திடம்மாறா அன்பினன்; நீ விரைந்து சென்று எம்மிறைவனைக் காப்பாயாக" (அதன் காதில் ஒரு மந்திரம் உபதேசித்தல்; அரசனை நோக்கி,) "விரைந்து செல்க, வெற்றியுண்டாகுக".

(உதயணன், பத்திராபதியின்மீது வாசவதத்தை காஞ்சனமாலையோடு தன்னகர் நோக்கிச் செல்லுதல்.)

---

# 17. குடும்பக்கலை

வித்துவான், து. கண்ணம்மாள்

ஒவ்வோர் ஆணும் பெண்ணும் தக்க வயதடைந்தவுடன் குடும்பப் பொறுப்பு ஏற்று நடத்துவது இயல்பு. குடும்பம் நடத்துவது என்பது ஒருகலை. ஓவியம், சிற்பம், நாட்டியம், இசை, கூத்து முதலியவை எங்ஙனம் கலைகள் எனக்கருதப் படுகின்றனவோ, அங்ஙனமே குடும்பம் நடத்திச் செல்வதும், ஒரு தனிக்கலையாகும்.

குடும்பத்தை வெற்றியுடன் நடத்திச் செல்பவர், வாழ்க்கையைக் கவலையற்று இன்பமாகக் கழிப்பார். குடும்பக்கலையறியாமல், குடும்பத்தை நடத்துபவர், பல அல்லல்களுக்கு ஆளாகி, "சம்சாரம் சாகரம் துக்கம்" என்று கூறிக்கொண்டு, 'இக்குடும்பத் தொல்லை என்று நீங்குமோ' என்று காலமெல்லாம் துன்புற்று, வாழ்க்கையை வெறுத்து என்றும் முணுமுணுத்துக் கொண்டிருப்பர்,

"ஆன முதலில் அதிகம் சேலவானல்
மானம் இழந்து மதிகேட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனய், ஏழ்பிறப்பும் தீயனய்
நல்லார்க்தும் போல்லனும் நாடு."

ல று கூறப்பட்டிருக்கும் தமிழ்ச் செய்யுள், குடும்பத்தை நடத் பொறுப்பு ஏற்றுக் கொள்பவனுக்கு முதற்பாடமாயிருக் து. இஃதே போன்று வள்ளுவப் பெரியார்,

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

என்று கூறியிருப்பதன் மூலம் மகளிர் தம் கணவருடைய வருவாய்க்குத்தக்கபடி செலவு செய்தல் வேண்டும் என்பதை எடுத்துக் காட்டியுள்ளார்.

'வருவாய்க்கு ஏற்ற செலவு' என்னும் முதற்பாடமே, குடும்பக்கலையை வெற்றியடையச் செய்யும் முக்கிய பாடமாகும். இதனைக்கருத்திற்கொண்டே குடும்பத்தின் தேவைகளைக் கவனித்தல் வேண்டும். மனித வாழ்க்கைக்குத் தேவைப்

யும் பொருள்களை. இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று வாழ்க்கைக்கு இன்றியமையாமல் தேவைப்படுபவை. மற்றொன்று ஆடம்பரமானவை.

சத்து மிகுந்த எளிய உணவு, தூய எளிய உடை, சுகாதாரத்திற் கேற்ற தேவைக்குரிய அளவு வீடு, கல்வி, மருத்துவ வசதி முதலியவை முதலினத்தில் சேரத்தக்கவை.

ஆடம்பரஉணவு, தேவைக்கு மேற்பட்ட அகன்ற இட முடையவீடு, பட்டாடைகள், பகட்டான உடைகள், அணி கலன்கள், விலையுயர்ந்த பாத்திரங்கள், பிறசாமான்கள், அடிக் கடிப் படக்காட்சி பார்த்தல், விருந்துகள் நடத்துதல், பிரயாணங் கள் செய்தல், வேலைக்காரர்களை வைத்துக் கொள்ளுதல் முதலி யவை இரண்டாவதினத்தில் சேர்க்கத் தக்கவை.

தேவைக்கு மேற்பட்ட சாமான்களை வாங்கிச் சேர்க்கும் வேலை, தேவையற்ற செயல்களில் ஈடுபடுதல் முதலியவை நாகரிகத்தின் பெயரால் பல குடும்பங்களில் நடை பெறு கின்றன. இதனால், பொருட் செலவு மிகுந்து, இன்றியமையாத செலவுக்குப் பொருள் முட்டேற்படுகிறது; குடும்ப வாழ்வு தொல்லையாக மாறுகிறது.

நம் நாட்டில் செல்வந்தர் மிகச்சிலர். ஏழைகளே பெரும் பாலோர். இவர்கள் போதிய வருமானம் அற்றிருக்கையில் எது வாழ்வுக்குத் தேவை, எது தேவையில்லை என்பதைப் பகுத்தறிந்து வாழ்க்கை நடத்துவராயின், வாழ்க்கையில் உள்ள பல தொல்லைகள் அகன்று, வாழ்க்கைத்துன்பம் இன்பமாக மாறும்.

இறைச்சி, மீன், முட்டை, நெய், பால் முதலிய வற்றை நிறைய உண்டுவந்தாலன்றி, உடல் உரத்துடன் இருக்கமுடியா தென்று சிலர், கருதுகின்றனர். இதன் பயனாக வருமானக் குறைவுள்ளோர், இவற்றை வாங்கி யுண்பதற்காகத் தங்கள் வருவாய்க்கு மீறிய செலவு செய்கின்றனர்.

பட்டாடைகள் போன்ற பகட்டான உடைகளை உடுத்திச் செல்வதுதான் மதிப்புக்குரியது என்று கருதிச் சிலர், அவற்றை வாங்குவதில் பெரும் பொருள் செலவிட்டுக் கடன்படுகின்றனர்.

இவ்வண்ணமே, வீட்டை அமைத்தல், வீட்டுக்குரிய தட்டு முட்டுச்சாமான்கள் வாங்குதல் முதலியவற்றிலும் சிலர் பெரும் பொருளைச் செலவழித்துக் கடன் பட்டு அல்லலுறு கின்றனர்.

உடலை உரமுடையதாக வைத்திருக்கக் கூடிய வன்மை, காய்கறி, கீரை, பருப்பு முதலியவைகளுக்கு முண்டு என்பதை இவர்கள் உணரவேண்டும். எவ்வுடையாயினும் தூய உடைக்கே மதிப்புண்டு என்பதையும், சிறுகுடிலாயினும் துப் புரவாக இருத்தலே சிறந்தது என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். பணத்தைச் செட்டாகவும், செம்மையாகவும், பய னுடையதாகவும் செலவிடவேண்டும். இவ்வண்ண மொழுகின், வாழ்க்கை வளமுடையதாகும்.

எனவே, குடும்பப் பொறுப்பேற்கு முன் வருவாய்க்குத்தக்க செலவு செய்வது என்று முதலில் திட்டப்படுத்திக் கொள்ள வேண்டும். அவ்வண்ணம் செலவுத்திட்டம் வகுக்கையில், உண வுக்கு முதலிடமும், உடைகளுக்கும் உறைவிடத்திற்கும் இரண் டாவதிடமும் கொடுத்துச் செலவைத்திட்டம் செய்து கொள்ளு தல் வேண்டும். இதனை ஒழுங்காக முடிக்கக் குடும்பப் பொறுப் பேற்பவர் தத்தம் வீட்டிற்குரிய வரவு செலவுத் திட்டத்தை ஆயத்தம் செய்து கொள்ளுதல் வேண்டும். பெரும்பாலான குடும்பத்தவர்களுக்கு மாதவருவாயே கிடைக்கிற படியால், ஒரு மாதத்திற்குரிய வரவு செலவுத் திட்டத்தை வகுத்துக் கொள்வது நலம்.

இதனை எவ்வாறு வகுப்பது? மாத வருமானத்தையும், வீட்டில் உள்ளவர்களின் எண்ணிக்கையையும் கணக்கில் வைத் துக் கொள்ள வேண்டும், உண்ண உள்ளோர் தொகை அதிகமாயும், வருமானம் குறைவாயும் இருந்தால், முதலில் உணவுக்காக வருவாயில் பெரும் பங்கை ஒதுக்கிவிடவேண்டும். உணவையும், கூடிய வரையில் காய்கறி உணவாக ஆக்கிக் கொள்ளவேண்டும். திரைப்படக்காட்சி, பிரயாணம், விருந்து செய்தல் முதலியவற்றை அடியோடு நீக்குதல் வேண்டும். ஒரு சிறு பகுதியை உடைக்கென மிச்சம் பிடித்தல் வேண்டும். வீட்டு வாடகை, கல்வி போன்றவற்றை முதலில் கவனித்தல்

வேண்டும். எஞ்சிய தேவைகளை வருமானம் உயர்கையில் பார்த்துக் கொள்ளலாம என்று விடுத்தல் வேண்டும்.

ஒவ்வொரு நாளும் செலவிடும் பணத்தைத் தவறுமல் குறித்து வைத்துக் கொள்ளவேண்டும். வீட்டில் அன்றுடம் நடைபெறும் செலவின் கணக்கு வைத்திராத குடும்பம் சீர் குலையுமாகையால், கணக்கு ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்க வேண்டும். நாள்தோறும் படுக்கைக்குப் போகுமுன், அன்று ஏற்பட்ட செலவை எழுதிக் கையிருப்புத் தொகையை மீதி யிருப்பாகக் கட்ட வேண்டும். மாதமுடிவில்செலவு செய்த தொகைகளைக் கூட்டி வருவாயுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், நம் செலவு வருவாய்க்குள் அடங்குகிறதா ? கடன் வாங்கிச் செலவு, செய்ய நேரிட்டுளதா ? கடன் வாங்கிச் செலவு செய்ய வேண்டியதேவை என்ன ஏற்பட்டது ? கடன் வாங்காமல் அதைச் சரிபடுத்தியிருக்க முடியாதா ? என்பன போன்ற யோசனைகளுக்கு இடமேற்பட்டு, அடுத்த மாதச் செலவு திட்டத்தைக் கருத்தோடு செய்ய இடமளிக்கும்.

'ஆற்றில் கொட்டினுலும் அளந்து கொட்டு' என்னும் பழமொழியை எண்ணிக் குடும்பக் கணக்கு வைக்கும் பழக் கத்தை ஒவ்வொருவரும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

குடும்பச் செலவு வருமானத்திற்கு மேல் போகாமலிருக்க வேண்டுமானுல், எப்பொருளையும் இன்றியமையாது தேவை யானது தானு என்று கவனித்துக் கையிற் காசு கொடுத்து வாங் கும் வழக்கத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். இதனுல், அவ் வப்போது மாறுதலுக்குள்ளாகும் விலைகளின் விவரம் தெரிந்து, விலைகளுக்கேற்ப, சில பொருள்களைக் குறைத்தும், கூட்டியும் வாங்கிக் கொள்ளலாம். விலை மலிவாக உள்ள காலங்களில், பருப்பு வகைகள், புளி, விறகு, பயறு வகைகள், மிளகாய், மிளகு, கடுகு போன்ற பொருள்களை மிகுந்த அளவில் வாங்கி வைத்துக் கொள்ளலாம்.

கையிற் காசு கொடுத்து வாங்காமல் கடன் வாங்கும் வழக் கத்தை மேற் கொண்டால், நாளடைவில் குடும்பம், கடனுக் குள்ளாகி அல்லலுறும் என்பதில் ஐயமில்லை.

குடும்பப் பொறுப்பேற்போர் வீட்டினுள் வேண்டாத சாமான்களைப் போட்டு நிரப்பி இடத்தை அடைத்து விடுதல் கூடாது. அசுத்தங்களும், மூலைகளில் குப்பை கூளங்களும், உத்தரத்தில் ஒட்டடை, பூச்சி, புழுக்கள் முதலியவைகளும் சேராவண்ணம், அடிக்கடிக் கவனித்துத் துப்புரவாக வைத்துக் கொள்ளுதல் வேண்டும். ஈ, கரப்பான், வண்டு, எலி முதலியவை சேருவதற்கிடமில்லாமல் மூலை முடுக்குகளில் சாமான்கள் அடைப்பின்றி வைத்திருத்தல் வேண்டும். கழிநீர்ப்பாதை, எப்போதும் தூய்மையாக இருத்தல் வேண்டும். வீட்டுப் பாத்திரங்கள், துணிகள் முதலியவற்றை அன்றாடம் துப்புரவு செய்து அவற்றிற்குரிய இடங்களில் வைத்திருத்தல் வேண்டும். பிள்ளைகள், புழுதியிற் புரளாதவாறு கவனித்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறெல்லாம் சுகாதார விதிகளைக் கைக்கொண்டு நடந்தால், நோயினின்று குடும்பத்தைக் காப்பாற்றி விடலாம். இதனால் மருந்துச் செலவு ஏற்படாமலிருக்கும்.

இங்ஙனம், உணவு, உடை, உறைவிடம் முதலியவற்றில் துப்புரவாக இருக்குமாறு கவனித்து, இன்றியமையாது தேவைப் படுபவைகளை மட்டும் வாங்கி, வருவாய்க் கேற்பச் செலவிட்டு, வீட்டுக் கணக்கு வைத்து, செட்டாக நடத்தப்படும் குடும்பம் நாளடைவில் நன்னிலை எய்துதல் இயலும். இவ்வாறு குடும்பத்தை நன்னிலையில் நடத்தும் வாழ்க்கையே இன்ப வாழ்க்கை யாகும்.

"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் முயல்
வாருள் எல்லாந் தலை."

என்னும் திருவள்ளுவர் திருவாக்கு இங்கு மனத்திற் பதிக்கத் தக்கதாகும்.



